## 2. விட்டகதை தொட்டகதை

ஆற்காட்டு நவாப் அன்வருதீனை ஆம்பூரில் முறியடித்ததால் வெற்றி வெறியுடன் வந்திருந்தவரும், பழைய ஆற்காட்டு நவாப் தோஸ்த் அலியின் மூன்றாவது பெண்ணின் கணவரும், குலாம் ஹுசேன் தோஸ்த் கான் என்கிற இயற்பெயரை உடையவரும், திருச்சி, திண்டுக்கல் கோட்டைகளையும் மதுரையையும் முன்பு பிடித்து இஸ்லாமியக் கொடியை அங்கெல்லாம் நாட்டியவரும், மகா வீரனுமான சந்தா சாகிப் உணவருந்தி முடித்ததும் அவரிடம் பட்லர் ஒரு தட்டை நீட்டியதையும், அதிலிருந்த ஒரு சிறு காகிதத்தை எடுத்துப் பார்த்ததும் அவருடைய முகம் வெளுத்துக் கைகள் நடுங்கியதையும் காணத் தவறாத கவர்னர் டுப்ளே, பல கேள்விகளை உதிர்த்த தமது கண்களைச் சந்தா சாகிப்பின் மீது திருப்பினார். எதிரே உட்கார்ந்திருந்த புஸ்ஸியின் கூரிய கண்களும் சந்தா சாகிப்பைச் சந்தேகத்துடன் நோக்கின. எதிர்பார்த்துப் பக்கத்து ஹாலில் பியானோவும் பிடில்களும் கூடப் பலமாக முழங்கின. ஆனால் அவை ஆனந்தத்தைக் குலைக்க வந்த சோக கீதத்தையே எழுப்பினாற்போல் தோன்றியது சந்தா சாகிப்பின் செவிகளுக்கு. திடீரென்று தமது நண்பர் நிலைகுலைந்ததற்குக் காரணத்தை அறியாத டுப்ளே தமது கண்கள் விடுத்த கேள்விகளுக்குப் பதில் ஏதும் கிடைக்காது போகவே, மெள்ளப் பக்கவாட்டில் குனிந்து, ''ஆற்காட்டின் புது நவாப்பின் அதிர்ச்சிக்கு எனக்குக் காரணம் தெரியவில்லை,'' என்றார் மிக மெதுவாக.

அப்படி கவர்னர் குனிந்து கேட்டபோது அவர் அணிந்திருந்த 'விக்'கின் சுருள் குழல்கள் சந்தாசாகிப்பின் கன்னத்தைத் தடவியுங்கூட அமைதி ஏற்படவில்லை ஆம்பூரின் வெற்றி வீரருக்கு. டுப்ளேயின் கேள்விக்குச் சந்தாசாகிப் பதில் ஏதும் சொல்லாமல் கையிலிருந்த சீட்டை மட்டும் நீட்டினார். உருது லிபியில் இருந்த அந்த வாசகத்தைப் படிக்க முடியாத டுப்ளே, ''யாரங்கே, நமது துபாஷை (துவி பாஷிகனை) கூப்பிடு,'' என்று

2.6.72

# ராஜபேரிகை



உத்தரவிட்டார்.

சாதாரணமாக எதற்கும் கலங்காத சந்தாசாகிப் சட்டென்று அந்தக் கடிதத்தை மறைத்திருந்தாலும், மேற்கொண்டு சிறிது மது வகையறா கொண்டுவரச் சொல்லி அருந்தித் தமது உணர்ச்சிகளை மறைத்துக் கொண்டிருந்தாலும், கவர்னர் டுப்ளேயின் கண்களை மட்டும் அவர் ஏமாற்ற முடியவில்லை. விருந்தின் அடுத்த அம்சமாக 'பால்' என்ற ஆண், பெண் நடன வகை துவக்கி அனைவரையும் ஆனந்தத்தில் ஆழ்த்தி, சந்தா சாகிப்பின் வெற்றிக்கு உச்ச முத்திரை வைத்திருக்க டுப்ளே ஏற்பாடு செய்திருந்தார். அத்தகைய நடனத்தை

சந்தா சாகிப் உடனடியாகப் பேசினார் குரல் நடுங்க. ''வேண்டாம். யாரையும் அழைக்காதீர்கள்.''

''ஏன்?'' என்று வினவினார் டுப்ளே, அவர் நடுக்கத்திற்குக் காரணம் புரியாமல்.

''அதில் என்ன எழுதியிருக்கிறது தெரியுமா?'' என்று மீண்டும்

**சாண்டில்யன்**

நடுங்கும் குரலில் சொன்னார் சந்தா சாகிப்.

''எனக்கு இந்த மொழி தெரியாதே,'' என்றார் டுப்ளே.

''இதை பகிரங்கமாகச் சொல்வதற்கில்லை,'' என்றார் சந்தா சாகிப்.

''சரி, காகிதத்தைக் கையில் வைத்துக் கொள்ளுங்கள். நடனத்திற்குப் பிறகு,அதைப் பற்றிப் பேசுவோம்,'' என்ற டுப்ளே, ஆசனத்தை விட்டு எழுந்திருக்கவே, மற்ற விருந்தினர்கள் அனைவரும் எழுந்தனர்.

பிரான்சு நாட்டு நாகரிகத்திற்கு ஏற்றபடி படாடோபமான ராணுவ உடையணிந்த



பிரெஞ்சுக்காரரும், நானாவித வர்ண ஜாலங்களை உடையனவும் பலவிதமான 'பிரில்ஸ்'களை உடையனவுமான சிங்கார உடையணிந்ததால் தேவமகளிர் போல் காணப்பட்ட பிரெஞ்சு நாட்டுச் சிங்காரிகளும், எப்பொழுதும் அதிகாரிகளைப் போல் உடையணிவதிலும் நடனமாடுவதிலும் பெருமை கொண்ட சுதேசிப் படைத் தலைவர்களும் அனைவருமே கவர்னர் எழுந்ததும் ஆசனங்களை விட்டு எழுந்தார்கள். அவர்களுக்கு வழி காட்டி முன் சென்ற கவர்னர் டுப்ளேயின் பின்னால் சந்தா சாகிப்பும் முஸபர் ஜங்கும், அவர்களுக்குப் பின்னால் மகாவீரனான டி புஸ்ஸியும், அவனுக்குப் பின்னால் மற்றவர்களும் ஒழுங்காக நடன மண்டபத்திற்குள் நுழைந்தார்கள். நடனம் ஆரம்பமாக, கவர்னர் தனது மனைவியின் கையைக் கோத்துக் கொண்டதும், மற்ற வெள்ளைக்காரர்களும் வெள்ளைக்காரிகளும் அவரைத்

தொடர்ந்து ஜோடி சேர்ந்து கைகளைக் கோத்துக்கொண்டு நடனத்திற்குத் தயாராயினர்.

அந்த மகோன்னதக் காட்சி யாரையும் மயக்கக் கூடியதானாலும் சந்தா சாகிப்பை மட்டும் அன்று மயக்க முடியவில்லை. அவர் ஒதுங்கியே சிரமப்பட்டு மயங்கி நின்று கொண்டிருந்தார். அதைக் கண்ட டுப்ளே தமது கண்ணின் அசைப்பினால் டி புஸ்ஸியை அருகில் அழைத்து, ''புஸ்ஸி! சந்தா சாகிப் ஏன் இதில் கலந்து கொள்ளவில்லை?'' என்று வினவினார், காரணம் அவருக்கு முன்னதாகத் தெரிந்திருந்தும் கூட.

''கலந்து கொண்டு விட்டார்,'' என்றான் புஸ்ஸி மேலுக்கு மிக மரியாதையுடனும் உள்ளுக்குள் ஏளனச் சிரிப்புடனும்.

''எப்பொழுது?''

''முன்பே.''

''உனக்கெப்படித் தெரியும்?''

''அதோ பாருங்கள் அவர் கால்கள் நடனமாடுகின்றன,'' என்று நடுங்கிக் கொண்டிருந்த சந்தாசாகிப்பின் கால்களைச் சுட்டிக் காட்டினான் புஸ்ஸி.

கவர்னர் அந்த நகைச் சுவையை ரசித்ததால் சற்று இரைந்தே நகைத்தார். அத்துடன் புஸ்ஸியை நோக்கி, ''புஸ்ஸி! நீ அந்த இரண்டு



''சவரன் ரொம்ப மேலே போய்ட்டுது. முந்திரிப் பருப்பு கிலோ ஐம்பது ரூபாய் விற்கிறது... மேலே நூறு ரூபாய் போட்டுக் கொடு சாமி!''

நவாபுகளையும் அழைத்துக் கொண்டு போய் எனது அந்தரங்க அறையில் உட்கார வை. நான் சீக்கிரம் வருகிறேன்,'' என்று உத்தரவிட்டார்.

டி புஸ்ஸியின் இதழ்கள் மிக விஷமமாக மடிந்தன. சரி என்பதற்கு அறிகுறியாக அவன் தலையை அசைத்த விதத்திலும் ஏளனம் இருந்தது. கவர்னரைச் சூழ்ந்திருந்த வெள்ளைக் கும்பலை விலக்கிக்கொண்டு எட்ட இருந்த சந்தா சாகிப்பை நெருங்கிய டி புஸ்ஸி, ''நவாப்! தங்களைத் தமது தனியறைக்கு அழைத்துச் செல்ல கவர்னர் உத்தரவிட்டிருக்கிறார்,'' என்றான்.

''ஏன்?'' என்றார் சந்தா சாகிப், மெள்ளத் தைரியத்தை வரவழைத்துக்கொண்டு.

''இங்கு ஆண் பெண்கள் இணைந்தாடும் நடனந்தான் உண்டு,'' என்றான் டி புஸ்ஸி மிகுந்த மரியாதையுடன்.

''அதனால்' என்ன?''

''தனி நபர் நடனம் அனுமதிக்கப்படுவதில்லை.''

''நீ சொல்வது எனக்குப் புரியவில்லை.''

''உங்கள் கால்கள் நடனமாடத் துவங்கியதைத் தூரத்திலிருந்தே கவர்னர் பார்த்துவிட்டார். மற்றவர்களும் பார்த்தால் வித்தியாசமாக நினைத்துக் கொள்வார்கள் என்று கவர்னர் கருதுகிறார்.''

சந்தா சாகிப் தமது கோபக் கண்களை புஸ்ஸியின் மீது நிலைக்க விட்டார் சில வினாடிகள். பிறகு சொன்னார் ''சந்தா சாகிப்புடன் விளையாடுவது அபாயம்,'' என்று.

''அது எனக்கு நன்றாகத் தெரியும்,'' என்று பயந்தவன் போல் பதிலிறுத்தான் புஸ்ஸி.

''இந்த நாட்டுக்கு நேற்று வந்தவன் நீ. உனக்கு என்ன தெரியும்?'' என்று சீறினார் புது ஆற்காட்டு நவாப்.

''நீங்கள் புது நவாப். . .'' என்று இழுத்தான் புஸ்ஸி.

''ஆம்.''

''பழைய கதைகள் எனக்குத் தெரியும்.''



தொந்தி தொப்பையைக் காட்ட வெட்கப்படும் நட்சத்திரங்களும் உண்டா என்ன?

படம்: துளசி

கன்னட மஞ்சுளா—ஸ்ரீநாத்

"என்ன பழைய கதை?"

"ஆற்காட்டுக் கதை."

"ஆற்காட்டுக் கதையா!"

"ஆம். அனுமதி கொடுத்தால் சொல்லுகிறேன்."

"சொல்." சந்தா சாகிப்பின் ஆணைக் குரலில் அதிகாரமும் இருந்தது. அச்சமும் இருந்தது.

டி புஸ்ஸி மிகப் பணிவுடன் தொடங்கினான் கதையை. "1740'ல் தங்கள் மாமனார் தோஸ்த் ஆலி ஆற்காட்டு நவாபாய் இருந்தார். அவரை தாமல்சேரி கணவாயில் மஹாராஷ்டிரர்கள் கொன்றார்கள். பிறகு சப்தர் ஆலி நவாப் ஆனார். தாங்கள் சப்தர் ஆலியை நம்பாமல் தங்கள் குடும்பத்தை இங்கு புதுச்சேரியில் தங்க வைத்தீர்கள். சப்தர் ஆலி தமது குடும்பத்தை மதராஸில் ஆங்கிலேயரிடம் தங்க வைத்தார். சப்தர் ஆலிக்கு வேலூரில் இருந்த அவரது மைத்துனர் மூர்த்திசா ஆலி விஷம் வைத்ததாகவும், விஷம் வேலை செய்யத் தாமதமாகியதால் ஒரு பட்டாணியனை விட்டுக் கத்தியால் குத்தி முடித்து விட்டதாகவும் கேள்வி. அவரைக் கொலை செய்த பின்பு மதராஸிலிருந்த அவரது அடுத்த வாரிசு ஸையது முகமத்கான் என்ற குழந்தையும் பரலோகம் நோக்கிப் பறந்தது. பிறகு சமீபத்தில் தங்களால் மாண்ட அன்வருதீன் நவாப் ஆனார். அவரும் மூர்த்திசா ஆலியும் சேர்ந்து பழைய நவாபின் சிறுவனைத் தீர்த்து விட்டதாக வதந்தி உலவுகிறது. ஆற்காட்டு நவாப் பதவியைப் போல உயிர் உறிஞ்சும் சக்தி உலகத்தில் வேறேதுவும் கிடையாதுபோல் தோன்றுகிறது. இப்பொழுது தாங்கள் ஆற்காட்டு நவாப். . ." என்ற புஸ்ஸி அரைகுறையாகப் பேச்சை விட்டான்.

சந்தா சாகிபின் கண்களில் அச்சம் தெரிந்தது. "அப்படியானால் அடுத்த பலி நான் என்கிறாயா?" என்று கேட்டார் குழம்பிய குரலில்.

"சேச்சே! அப்படியெல்லாம் இருக்காது. கவலைப்படாதீர்கள்," என்றான் புஸ்ஸி. அவன் சொன்னது ஆறுதலா அல்லது கேலியா என்பது புரியவில்லை சந்தா சாகிபுக்கு.

இருந்தாலும் அதைப் பற்றிப் பேச்சை வளர்த்தாமல், "கவர்னரி

அந்தரங்க அறை எங்கே?'' என்று வினவினுர் சீற்றத்துடன்.

''என்னைத் தொடர்ந்து வாருங்கள்,'' என்ற புஸ்ஸி மெல்ல அந்த நடன மண்டபத்திலிருந்த ஒரு வாயில் மூலம் வெளியேறினுன். அவனைத் தொடர்ந்து சந்தா சாகிப்பும் அவரைத் தொடர்ந்து முஸபர்ஜங்கும் சென்ருர்கள். கவர்னர் தனி அறையில் அவர்களைத் தங்க வைத்த பின்பும் புஸ்ஸி வெளியில் செல்லவில்லை. அவன் அங்கேயே நிற்பதைக் கண்ட சந்தா சாகிப். ''இனி நீ போகலாம்,'' என்று உத்தரவு கொடுத்தார்.

''தங்களைத் தனியாக விட்டு விட்டுப் போக உத்தரவு இல்லை.'' என்ருன் புஸ்ஸி.

''இதோதான் முஸபர்ஜங் இருக்கிருரே.'' என்ருர் சந்தா சாகிப் மீண்டும்.

''தாங்கள் பிரெஞ்சுக்காரர் களின் ஆற்காட் நவாப்,'' என்று உணர்த்தினுன் புஸ்ஸி...

''அதனுல் என்ன?''

''தங்களைக் காப்பது எங்கள் கடமை.''

''இப்பொழுது எனக்கு என்ன ஆபத்து வந்து விட்டது?''

''ஏதோ வந்திருக்க வேண்டும்.''

''உனக்கு எப்படித் தெரியும்?''

''நீங்கள் வீரர்.''

''அது சரி.''

''ஆனுல் ஒரு சீட்டைப் படித்ததும் நடுங்கி விட்டீர்கள்.''

''ஆம். ஆம். அது பயங்கரச் சீட்டுதான்,'' என்று ஒப்புக் கொண்டார் சந்தா சாகிப்.

இத்தனைக்கும் முஸபர்ஜங் வாய் திறக்கவில்லை.

அவரையும் சீண்ட முற்பட்ட புஸ்ஸி, ''என்ன புது நிஜாம் வாய் திறக்கவில்லையே?'' என்ருன் மெதுவாக.

''நான் இன்னும் நிஜாம் பதவியை அடையவில்லை. நாஸிர் ஜங் அந்தப் பதவியை வகிக்கிருன்,'' என்ருர் முஸபர்ஜங் சற்று உஷ்ணத்துடன்.

## உணர்ப் பூக்கள்

**குழந்தை:**

தாயின் கர்ப்பப்பை என்னும் கோட்டைக்குள்ளே அரசனுக இருந்தவன் வேற்றுநாட்டில் பிச்சைக்காரனுகத் நிரிய வெளி வந்திருக்கிருன்.

**நோய்:**

காலன் கதவைத் தட்டுகிருன். இந்த முறை பிழைத்து விடுவேன். இன்னொரு முறை வரச்சொல்

**கட்டில்:**

நீ செய்யும் அக்கிரமங்களைப் பூமாதேவி நேரடியாகப் பார்த்து விடக் கூடாதென்று போட்டுக் கொண்ட திரை.

**மேளம்:**

பொருள் ஒன்றுதான் வழியனுப்பி வைப்பது. இடம் தான் வேறு. (திருமணம், சவ ஊர்வலம்)

**அடுக்கு டிபன் பாக்ஸ்:**

மேலே இருக்கும் தாழ்ப்பாளைச் (ஸ்பூன்) சற்று எடுத்து விடுங்கள். நாங்கள் வெளியே வரவேண்டும்.

**தயிர்:**

நேற்றுவரை இளகிய மனதுடன் இருந்த நான் இந்த மோரை எப்போது கட்டிக் கொண்டேனே அப்போதிருந்தே என் மனம் கல்லாகத் தொடங்கி விட்டது.

**அரிசி:**

எங்களிடத்தில் உள்ள ஊழல்களைத் தெரிவிக்க வந்த விசாரணைக் கமிஷன்.

—பா. குமார்



"என் பெரிய மைத்துனர் கண்டிராக்டர். அடுத்த மைத்துனர் டிராக்டர் பிஸினஸ். அதற்கடுத்தவர் டாக்டர். சின்னவர் டர்."

"அதென்ன, டர்?"

"கட் பீஸ் க்ளாத் மர்ச் சென்ட்"

---

"அது சரியில்லை போல் இருக்கிறது?" சீண்டினான் புஸ்ஸி.

"இல்லை."

"நாஸிர்ஜங் பழைய நிஜாமின் புதல்வரல்லவா?"

"ஆம். ஆனால் நான் அவர் பெண் வயிற்றுப் பேரன். என்னைத்தான் பழைய நிஜாம் தட்சிண சுபேதராக நியமித்தார். அப்படி இருக்க. . . ."

"அவர் மகன் நிஜாம் ஆவது தவறுதான்," என்று ஒப்புக் கொண்டான் புஸ்ஸி.

"நீ புத்திசாலி," என்று பாராட்டினார் முஸபர்ஜங்.

"இத்தனை புத்திகூட இல்லாவிட்டால் உங்களுக்கெல்லாம் உதவி செய்யும் பாக்கியம் எங்களுக்குக் கிடைக்குமா?" என்றான் புஸ்ஸி விஷமமாக.

அந்தச் சமயத்தில் உள்ளே நுழைந்த டுப்ளே அறையிலிருந்த மூவரையும் மாறி மாறிச் சில விநாடிகள் கவனித்தார். புஸ்ஸியின் இதழ்களில் விஷமம் இருந்தது. முஸபர்ஜங் முகத்தில் மகிழ்ச்சி இருந்தது. சந்தா சாகிப்பின் வதனத்தில் சீற்றமும் அச்சமும் கலந்த சாயை படர்ந்து கிடந்தது. புஸ்ஸி ஏதோ விஷமம் செய்திருக்கிறான் என்பதைக் கணப் பொழுதில் புரிந்து கொண்ட டுப்ளே ஏதும் பேசாமல் தமது ஆசனத்தில் அமர்ந்து, "புஸ்ஸி, கதவைச் சாத்து," என்று கட்டளையிட்டார்.

அவர் கட்டளைப்படி கதவைச் சாத்திய புஸ்ஸி, அந்தக் கதவிலேயே சாய்ந்து கொண்டு நின்றான்.

கவர்னர் மற்ற இருவரில் சந்தா சாகிப்பின்மீதே முதலில் தமது கேள்வியைத் தொடுத்தார்.

"உமக்கு வந்த காகிதத்தில் என்ன எழுதியிருந்தது?" என்று வினவினார் சர்வ சாதாரணமாக.

"ஆல்—அலீம் (ஸல்)," என்றார் சந்தா சாகிப் குரல் தழுதழுக்க.

"அதற்கு என்ன அர்த்தம்?" என்று வினவினார் டுப்ளே.

"அல்லா (ஸல்) எல்லாம் அறிந்தவர் என்று பொருள்," என்று விளக்கினார் ஆற்காட்டு நவாப்.

"உலகத்தின் மதங்கள் எல்லாமே கடவுளைச் சகலமும் அறிந்தவராகத்தான் சொல்கின்றன."

"ஆம்."

"அப்படியானால் இந்தக் காகிதத்தைக் கண்டு ஏன் நடுங்கினீர்?" என்று சீற்றத்துடன் கேட்டார் டுப்ளே.

சந்தா சாகிபும் நிதானத்தில் இல்லை. "இது. . இது. ." என்று நடுக்கத்துடன் சொற்களை உதிர்த்தார்.

"சொல்லும்." டுப்ளேயின் குரல் இடியென முழங்கியது.

டுப்ளேயின் உத்தரவைக் கேட்டதும் இடியைக் கண்ட நாகமென நடுங்கினார் சந்தா சாகிப். அந்த இடி டுப்ளேயின் குரலிலிருந்து உண்டானதல்ல. பழைய நினைவுகள் பல கிளப்பிவிட்ட இடியொன்று அவர் இதயத்தைத் தாக்கிச் சென்றது. அதன் காரணமாகச் சுய நிலை இழந்த சந்தாசாகிப் தம்மைத் திடப்படுத்திக் கொள்ளப் பல விநாடிகள் ஓடின. அப்படி திடப்படுத்திக் கொண்ட பிறகுங்கூட அவர் குரல் சற்று நடுக்கத்துடனேயே ஒலித்தது. "கவர்னர் அவர்களே! அது பழைய கதை. பதின்மூன்று ஆண்டுகளுக்கு முன்பு விட்ட கதை. அது மீண்டும் என்னைத் தொடர்ந்திருக்கிறது. வந்திருக்கிற சீட்டு அதை உணர்த்துகிறது," என்றார் சந்தா சாகிப் தட்டித் தடுமாறி.

(தொடரும்)

# ராஜபேரிகை

சாண்டில்யன்

## 3. நடுங்கிய நவாப்

சந்தாசாகிபின் தடுமாற்றத்தையும், திகிலையும், சோகத்தையும் கண்டதால் புதிய நவாபின் உள்ளத்தில் பெரும் புயல் மூண்டிருப்பதை உணர்ந்த டூப்ளே, அவரை அனுதாபத்துடன் பார்த்தார். ''விளக்கமாகச் சொல்லுங்கள் நவாப்! எதுவாயிருந்தாலும் காப்பாற்ற நானிருக்கிறேன்,'' என்று ஆறுதலும் கூறினார் கவர்னர்.

ஆனால் சந்தாசாகிபின் இதயத்தில் கவர்னரின் சொற்கள் எந்தவித ஆறுதலையும் அளிக்கவில்லையென்பதை அவர் முகம் சந்தேகத்துக்கு இடமின்றிக் காட்டியது. ''இதிலிருந்து என்னைக் காப்பாற்ற அல்லாவை (ஸல்)த் தவிர வேறு யாராலும் முடியாது. ஏனென்றால் அது அவர்மீது நான் இட்ட ஆணை,'' என்று துன்பக் குரலில் கூறிய சந்தா சாகிப் மெள்ள விவரங்களைக் கூறத் தொடங்கினார்.

''ஆம். பதின்மூன்று ஆண்டுகளுக்கு முன்பு நடந்த கதைதான். அப்பொழுது நான் திருச்சியை முற்றுகையிட்டிருந்தேன். அந்தத் திருச்சியை ஆண்டிருந்தவள் ஒரு பெண். நாயக்கர் வம்சத்தைச் சேர்ந்தவள். பெயர் மீனாட்சி. பல மாதங்கள் முற்றுகையிட்டும் அந்தக் கோட்டையை என்னால் பிடிக்க முடியவில்லை. போரால் பிடிக்க முடியாததைத் தந்திரத்தால் பிடிக்க முயன்றேன். அப்பொழுது நாயக்கர் வம்சத்தில் அரியணைப்போட்டி இருந்தது. திருச்சியில் என்னைப் புகவிட்டால் ராணிக்கு நான் சகோதரனாயிருப்பேன், அவள் உறவினர்களை முறியடிக்க உதவுவேன் என்று ராணி மீனாட்சிக்குச் செய்தியனுப்பினேன். ராணியிடமிருந்து பதில் வந்தது.

அனுகூலமான பதில்தான். ஆனால் அதில் ஒரு சிக்கலும் இருந்தது. 'குர் ஆன் மீது சத்தியம் செய்தால் உங்களைக் கோட்டைக்குள் அனுமதிக்கிறேன்' என்று ராணி சொல்லி அனுப்பினாள். என் பாடு திண்டாட்டமாகிவிட்டது. குர் ஆன் மீது ஆணையிட்டால் அதை மீற முடியாது. என்ன செய்வது என்று அறியாமல் திண்டாடிய சமயத்தில் ஒரு யோசனை பிறந்தது. ஒரு செங்கல்லைப் பட்டுத் துணியால் மூடி ஒரு பலகையில் வைத்து, அதைக் குர் ஆன் என்று கூறிச் சத்தியம் செய்தால் என்ன என்று நினைத்தேன். அப்படியே செய்யவும் செய்தேன். 'அல்—ஆலீம்' (ஜல்)' என்று கூறி ராணி மீனாட்சியையும், அவள் அரசையும் பாதுகாப்பதாக ஆணையிட்டேன். 'ஆல்—அமீன்' (ஸல்) குர் ஆனில் சொல்லப்படும் எல்லாம் வல்ல அல்லாவின் (ஸல்) 99 நாமங்களில் ஒன்று. ஆனால் கவர்னர், 'அது ஆணையாகாது. ஏனென்றால் பலகையிலிருந்தது குர்ஆன் அல்ல. செங்கல். வெறும் செங்கல்..' என்றார்..'' இங்கு சந்தா சாகிபின் குரல் பெரிதும் நடுங்கியது. குரல் தழதழத்தது.

டூப்ளே தமது நவாபின் நடுக்கத்தையும் குரலில் ஒலித்த திகிலையும் கண்டு வெறுப்புக் கலந்த பார்வையொன்றை அவர்மீது செலுத்தினார்.

''பிறகு என்ன நடந்தது?'' என்று அவர் கேள்வியிலும் அந்த வெறுப்பு பூர்ணமாக ஒலித்தது.

''திருச்சிக்கு உள்ளே நுழைந்ததும் கோட்டையை வசப்படுத்திக் கொண்டேன். ராணியைச் சிறையிலிட்டேன்,'' என்றார் சந்தா சாகிப்.

''சகோதரராக நடந்து கொண்டீர்,'' என்றார் டுப்ளே இகழ்ச்சி நிரம்பிய குரலில்.

''இல்லை. நான் தவறு ஏதும் செய்யவில்லை. போருக்குத் தேவை தந்திரம். அதைக் கையாண்டேன்,'' என்று உளறினார் சந்தா சாகிப். ''ஆனால் அந்தப் பாழும் ராணி சிறையில் தீக்குளித்துவிட்டாள்.'' என்று ராணி ஏதோ தவறு செய்துவிட்டதுபோல் குளறவும் செய்தார் புதிய ஆற்காட்டு நவாப்.

டுப்ளே, நவாபின் அழுகையைத் தாங்க முடியாமல் ஆசனத்திலிருந்து எழுந்து அறையில் சிறிது நேரம் சிந்தனையுடன் உலாவினார். பிறகு கேட்டார் சந்தா சாகிபை நோக்கி, ''அதற்காக இப்பொழுது ஏன் பிராணனை விடுகிறீர்?'' என்று.

''அந்த விட்டகதை தொட்ட கதையாகத் தொடர்கிறது. இப்பொழுது யாரோ ஒருவன் அதை நினைவு



''நம்ம ஆபீஸ் எத்தனை மணிக்கு?''

''பத்தரை.''

''இப்ப என்ன மணி?''

''பத்துப் பத்து.''

''முன்னாடி வந்ததுக்கு எக்ஸ்பிளனேஷன் எழுதிக் கொடு.''

படுத்துகிறான். என்னைப் பழி வாங்கப் பார்க்கிறான்,'' என்றார் சந்தா சாகிப் பரிதாபக் குரலில்.

''யாரவன்?'' என்று வினவினார் டுப்ளே.

''இந்தச் சீட்டை அனுப்பியவன்,'' என்று அதைக் கச்சையிலிருந்து எடுத்து மீண்டும் டுப்ளேயிடம் நீட்டினார் சந்தா சாகிப்.

''அவன் பெயர் தெரியுமா?''

''தெரியாது.''

''பார்த்திருக்கிறீரா?''

''பெயரே தெரியாதென்றால் எப்படிப் பார்த்திருக்க முடியும்?''

அந்தச் சமயத்தில் அறைக் கதவு இருமுறை தட்டப்பட்டதால் புஸ்ஸி ஒதுங்கிக் கதவைத் திறந்தான். டுப்ளேயின் மனைவி வெகு வேகமாக உள்ளே நுழைந்தாள். அவள் அழகிய வதனத்தில் சினம் மண்டிக் கிடந்தது.

''நடனத்தைப் பாதியில் விட்டு ஏன் வந்தீர்கள்?'' என்று கவர்னரை நோக்கி உஷ்ணம் கக்கும் சொற்களை உதிர்த்தாள்.

டுப்ளே அதற்கு உடனடியாகப் பதில் சொல்லவில்லை. புஸ்ஸியே பதில் சொன்னான். ''மேடம்! நம்மையும் அறியாமல் நமது மாளிகைக்குள் நமது நவாபுக்கு ஒரு சீட்டு வந்திருக்கிறது,'' என்று.

மேடம் டுப்ளேயின் சினம் அவள் முகத்திலிருந்து மறைந்தது. ''நம்மை அறியாமல் வரவில்லை. அதை அனுப்பியது நான்தான்,'' என்றாள் அவள்.

''நீயா!'' டுப்ளே வாயைப் பிளந்தார்.

''ஆம். ஒரு வாலிபன் அதைக் கொண்டு வந்து கொடுத்தான். அதை நவாப்புக்கு அனுப்பச் சொல்லிக் கெஞ்சினான்,'' என்றாள் மேடம் டுப்ளே.

''அவன் யார், எப்படி இருந்தான்?'' என்று ஆத்திரத்துடன் வினவினார் சந்தா சாகிப்.

டுப்ளேயும் அதே கேள்வியைக் கேட்டார். மேடம் டுப்ளேயின் முகத்தில் மகிழ்ச்சி விரிந்தது. அழகிய உதடுகளில் மந்தகாசம் மலர்ந்தது. ''அவன்....மிக அழகன்,'' என்று பதில் கூறினாள்.

இதைக் கேட்ட டுப்ளே மட்டுமின்றி இரு நவாப்புகளும்கூட கவர்னரின் அழகிய மனேவியை வியப்புடன் உற்றுப் பார்த்தார்கள். மிகஅபாயத்தைத் தரக்கூடிய ஒரு சீட்டைப் பற்றித் தாங்கள் கேள்வி கேட்டுக் கொண்டிருக்கையில், சீட்டை அத்தனே ரகசியமாக மாளிகைக்குள் அனுப்பியவனுடைய அழகைப் பற்றி மேடம் கூறியதும். அந்த மூவருக்கும் வியப்புடன் வெறுப்பும்கூட ஏற்பட்டது. அந்த வெறுப்பை டுப்ளே வெளிப்படையாகவே காட்டி, ''அவன்அழகைப் பற்றி எங்களுக்கு அக்கறையில்லே,'' என்ருர் சற்று சினம் தொனித்த குரலில். அவர் அப்படிக் கேட்டது இரு நவாப்புகளுக்கும் சிறிது ஆறுதலேத் தந்தாலும் சிறிது நேரத்தில் அந்த ஆறுதல் பறந்தது.



உட்கார இடம் கொடுத்தால் மட்டும் போதுமா? பிடித்துக் கொள்கிறதற்கும் கொஞ்சம் இடம் தர வேண்டாமோ?

முன் ஸீட்: கமல். பின் ஸீட்: சங்கீதா. (படம்: ஆடு புலி ஆட்டம்)

மிக சுயேச்சையான சுபாவமுடையவளும், கவர்னர் டுப்ளேயை ஆட்டிப் படைத்து சுதேசிகள் அடிக்கும் சூறையில் தனக்கும் ஒரு பங்கைப் பெற்றுக் கொள்பவளும், மிக அழகியுமான மேடம் டுப்ளே, கவர்னரின் சினத்தைச் சிறிதும் லட்சியம் செய்யாமல், ''என்ன சொன்னீர்கள்?'' என்று மற்றுமொரு முறை வினவினுள்.

''அவன் அழகைப் பற்றி எங்களுக்கு அக்கறையில்லே என்று சொன்னேன்,'' என்ருர் கவர்னர்.

''எனக்கு அக்கறையிருக்கிறது,'' என்ருள் மேடம் டுப்ளே வெகு அசட்டையாக.

''என்ன அக்கறை?'' என்று வினவினுர் டுப்ளே.

''ஒரு வாலிபன், உங்கள் கட்டுக் காவல்களேயெல்லாம் மீறி எனது அறையின் சமீபத்தில் உலவுகிருன். என்னேக் கண்டதும் அசைவற்று நிற்கிருன். பிறகு என்ன செய்தான்?'' இப்படிக் கேட்ட மேடம் களுக்கென்று சிரித்தாள்.

அப்பொழுது டுப்ளேக்கு ஐம்பத்தைந்து வயது முடிந்தாலும் தேகத்தில் அயர்வோ புத்தியின் துடிப்பில் குறைவோ இல்லாததால் சற்று வேகத்துடன் கேட்டார். ''என்ன செய்தான்?'' என்று.

மேடம் டுப்ளேயின் முகத்தில் மந்தகாசம் அதிகமாக விரிந்தது. அவள் தன் அழகிய சிற்றிடையைச் சிறிது வளேத்து, தலேயை ஒரு புறம் சாய்த்து மிக அழகாக நின்ருள். ''இந்த நவாப்புகளாயிருந்தால் என்ன செய்வார்கள்?'' என்று வினவினுள் மிக மிருதுவான குரலில்.

''தலே தாழ்த்தி வணங்கு









வோம்,'' என்றார் சந்தா சாகிப் கவர்னரைப் பதில் சொல்ல விடாமல்.

''அந்த வாலிபன் அப்படிச் செய்யவில்லை,'' என்றாள் மேடம் அன்பு ததும்பும் குரலில்.

இப்படி அந்த இரு நவாப்புகளுக்கும் எதிரில் வேறொரு வாலிபனைப் பற்றி மேடம் டுப்ளே பேசியதால் கோபமுற்ற டுப்ளே, ''வேறென்ன செய்தான்?'' என்று சீறினார் இரைந்தே.

டுப்ளேயின் கூக்குரலைக் கேட்டுக் கொண்டு கதவுக்கருகில் நின்ற புஸ்ஸியின் இதழ்களில் இந்தக் குடும்ப விவாதத்தைக் கண்டு புன் சிரிப்புத் தவழ்ந்தது. அதுவரையில் உரையாடலில் தலையிடாத அவனும், ''மேடம்! அந்த வாலிபன் நடத்தை தங்களுக்குப் பெரிதும் பிடித்திருக்கிறது,'' என்று குத்திக் காட்டினான்.

''ஆம் புஸ்ஸி! அவன் என்ன செய்தான் தெரியுமா?'' என்றாள் மேடம் அன்பு கொட்டிய குரலில்.

''சொல்லுங்கள்.''

''என்னைக் கண்டு அஞ்சவில்லை.''

''உம்.''

''தலைதாழ்த்தவில்லை.''

''உம்.''

''இவர்களைப் போல் சலாம் அடிக்கவில்லை.''

''அப்படியா!''

''ஆம். நமது பிரான்ஸ் நாட்டு பிரபுக்களைப் போல் நடந்து கொண்டான். என்னைப் பார்த்ததும் ஒருகாலை மடித்து மண்டியிட்டான். கௌனின் அடியைப் பிடித்து சிறிது தூக்கி அதை முத்தமிட்டான்,'' என்று கூறிய மேடம் தனது கௌனின் அடிப்பாகத்தைச் சற்று அதிகமாக எடுத்துக் காட்டியதால் அவள் அழகிய காலின் ஆடுசதை வெளேரெனத் தெரிந்தது.

கவர்னர் டுப்ளே சங்கடத்தால் அசைந்தார், அந்தப் பேச்சை ஒரு முடிவுக்குக் கொண்டு வர, ''இந்த சீட்டை எப்படிக் கொடுத்தான்?'' என்றார்.

''மிக மரியாதையாகக் கொடுத்தான். சிறிது பிரெஞ்சு மொழியிலும் பேசினான். இதை ரகசியமாக

இந்த நவாப்புக்கு அனுப்பும்படி கேட்டுக்கொண்டான்,'' என்றாள் மேடம்.

டுப்ளே வெறுப்புடன் அடங்காப்பிடாரியான தமது மனைவியை நோக்கினார் ஒரு வினாடி. ''நீ ஒன்றும் கேட்டுக் கொள்ளவில்லையா?'' என்று வினவினார்.

''விருந்துக்கும் நடனத்துக்கும் இருக்கும்படி கேட்டுக் கொண்டேன். மார்டின்! உனக்கு அடுத்தபடியாக அவனுடன் ஆடுவதாகவும் சொன்னேன். அவன் கேட்கவில்லை. அவசர வேலையிருப்பதாகச் சொல்லி விட்டு ஓடிவிட்டான்,'' என்று துன்பப் பெருமூச்சு ஒன்றை வெளியிட்டாள் மேடம்.

அதற்குமேல் அந்தப் பேச்சை வளர்க்க இஷ்டப்படாத டுப்ளே அவளைப் போய் மற்ற விருந்தினர்களைக் கவனிக்கும்படியும், தான் சீக்கிரம் வருவதாகவும் சொல்லி அவளை மெள்ளக் கெஞ்சிக் கூத்தாடி வெளியே அனுப்பினார்.

பிறகு இரண்டு நவாப்புகளையும் நோக்கினார். இருவரும் இது வரை கணவனுக்கும் மனைவிக்கும் நடந்த உரையாடல்களைக் கேட்டதாலும், உரையாடலும் வந்தவன் யாரென்பதை விளக்காமல் வேறு பாதையில் போய் விட்டதாலும் என்ன பேசுவதென்று தெரியாமல் திணறிக் கொண்டிருந்த சமயத்தில் டுப்ளேயின் கோபம் அவர்கள்மீது திரும்பியது. ''சந்தா சாகிப்! முஸபர்! எதற்காகக் கோட்டான் மாதிரி விழித்துக் கொண்டிருக்கிறீர்கள்?'' என்று கூச்சல் போட்டார் கவர்னர்.

சந்தா சாகிப்பும் சிறிது வெகுண்டார். ''கவர்னர்களை நவாபுகளை இகழ்வது பிரெஞ்சு நாட்டுக்கு நல்லதல்ல,'' என்றும் சொன்னார்.

''எனது நாட்டிற்கு எது நல்லது என்பது எனக்குத் தெரியும். ஏன், உமக்கு எது நல்லது என்பது கூட எனக்குத் தெரியும். சீட்டைக் கண்டு பிராணனை விடுவது என் வழக்கமல்ல. உருப்படியான வேலையில் ஈடுபட முற்படுங்கள்,'' என்றார். அந்த உருப்படியான வேலை எது என்பதையும் விளக்கினார். அதைக் கேட்ட சந்தா சாகிப் பெரிதும் நடுங்கினார். டுப்ளே தமது வாழ்க்கையின் மிக முக்கியமான முடிவுக்கு வந்திருப்பதை அவர் சொற்கள் சந்தேகமற விளக்கின.

[தொடரும்]



## ராதா? ஜெய லட்சுமி?

சமீபத்தில் ஈரோட்டில் திருமதிகள் ராதா ஜெயலட்சுமி அவர்களின் பாட்டுக் கச்சேரி நடந்தது. ரசிகர்களுக்கு வழக்கம்போல், சபா காரியதரிசி பக்கவாத்தியக்காரர்களின் பெயர்களை அறிமுகம் செய்து வைத்தார். அதுபோலவே சகோதரிகளை ''உங்களுக்கு வலதுபுறம் இருப்பவர் ராதா, இடதுபுறம் இருப்பவர் ஜெயலட்சுமி,'' என்றும் அறிமுகம் செய்தது சுவையாக இருந்தது. யார் ராதா, யார் ஜெயலட்சுமி என்று குழம்பிக் கொண்டு இருந்தவர்களுக்குக் குழப்பம் தீர்ந்தது.

—விஜயா பிரசாத்

மூன்று விதங்களில் செயலாற்றும்

# நீகோ சோப்

## வேறெந்த சோப்பையும்விட, உங்கள் சருமத்தை அதிகமாக பாதுகாத்து பராமரிக்கிறது.

**...கோ சுத்தமாக்கி ...ாதுகாக்கிறது.**
...ாள் தோறும் குளிக்கும் போது ...கோ சோப் உபயோகிப்பதால், உங்கள் சருமம் மென்மையாக ...த்தமடைகிறது. புத்துணர்வும் பெருகிறது.

**நீகோ துர் நாற்றத்தை நீக்குகிறது.**
நீகோ உன்னதமாக போராடி வியர்வையினால் ஏற்படும் துர்நாற்றத்தை அறவே தடை செய்கிறது.

**நீகோ ஒரு 'ஆன்ட்டிஸெப்டிக்'**
நீகோ சோப்பின் நுரை வெள்ளம் 'ஆன்டடி ஸெப்டிக்' சக்தி பெற்றது. அதனால், சருமத்தை பாதுகாப்பதோடு மட்டுமல்ல, சரும ஆரோக்யத்தையும் வளமூட்டுகிறது.







நாள்தோறும் நீகோ சோப் தேய்த்துக் குளிப்பதன் மூலம் புத்துணர்வும் சரும எரிச்சலிருந்து விடுதலையும் கிடைக்கிறது. நீகோ சோப்பை தொடர்ந்து ஷாம்பூவாகவும் உபயோகிக்கும் போது, அதன் குன்றாத நுரைவளம் மயிர் கால்களை பரிசுத்தம் செய்து, தலைப் பொடுகையும் அகற்ற உதவுகிறது. கேச ஆரோக்யத்தையும் காத்து நிற்கிறது

மூன்று விதங்களில் செயலாற்றும்

# NEKO®

நீங்கள் நாள்தோறும் குளித்தெழ

ஒரு

**பார்க்-டேவிஸ்**

தயாரிப்பு

சந்தாசாகிபுவுக்கும் முஸபர் ஜங்குக்கும் கவர்னர் டூப்ளே தமது திட்டத்தை விளக்கியபோது அவர் ஏதோ பெரும் சாம்ராஜ்யக் கனவில் இருக்கிறார் என்பதை இருவருமே புரிந்து கொண்டார்கள். அத்தகைய சாம்ராஜ்யக் கனவுக்கு முக்கிய காரணம் அவருக்கிருந்த பெரும் கடன் தொல்லையும் அவரது மனைவியுமே என்பதை மட்டும் அவர்கள் புரிந்து கொள்ளவில்லை.

16.4.77

# ராஜ பேரிகை

சாண்டில்யன்

* உண்மையில் மேடம் வின்ஸன்ஸுக்கும் டூப்ளேக்கும் நடந்த விவாகம் காதல் விவாகமல்ல. வங்காளத்தில் டூப்ளே இருந்த போது அவர் செய்த வர்த்தகத்தில் பெரும் நஷ்டமடைந்து ஏராளமாகக் கடன் வாங்கியிருந்தார். அந்தக் கடனின் ஒரு பாகம் வின்ஸன்ஸ் குடும்பத்தாரிடம் வாங்கப்பட்டிருந்தது. அந்தக் கடனைத் தீர்க்க மிஸ்டர் வின்ஸன்ஸ் இறந்ததும் மேடம் வின்ஸன்ஸை டூப்ளே 1741 ஏப்ரல் 17'ம் தேதி விவாகம் செய்து கொண்டிருந்தார். அப்பொழுது மேடம் வின்ஸன்ஸுக்கு வயது முப்பத்தைந்து. முதல் கணவன் மூலம் அவளுக்கு எட்டுக் குழந்தைகள் இருந்தன. அந்த எட்டில் மூன்று மாண்டுவிட்டதால் மேடத்துடன் அந்த ஐந்து கன்றுகளையும் ஓட்டிக்கொண்டு டூப்ளே புதுச்சேரிக்கு வந்து சேர்ந்தார். வீட்டில் சதா மேடம் வின்ஸன்ஸின் தொந்தரவும் ஆர்ப்பாட்டமும் இருந்ததல்லாமல் அவளுடைய காலஞ்சென்ற கணவரின் குழந்தைகளும் தீராத விளையாட்டுப் பிள்ளைகளாகி, கவர்னர் இல்லத்தை ரணகளப்படுத்திக் கொண்டிருந்தபடியால், டூப்ளேயின் இல்வாழ்க்கை உண்மையில் மல்வாழ்க்கையாகிக் கொண்டிருந்தது. ஆகவே அறிவாளியான டூப்ளே தமது அறிவை அரசியலில் அதிகமாக ஈடுபடுத்தினார். அதன் மூலம் நவாபுகள் அடித்த கொள்ளைகளில் பெரும் பகுதி கவர்னரின் கஜானாவுக்குப் போய்க் கொண்டிருந்தது. மேடத்துக்குப் பரிசு எதுவும் கொண்டுவராத எவனும் பட்டபாடு சொல்ல முடியாது. அதன் விளைவாக, வந்தவன் பிராணன் மட்டுமில்லாமல் கவர்னரின் பிராணனும் போய்க்கொண்டிருந்தது.

---

## 4. மேடம் வின்ஸன்ஸ்

---

* மேடம் டூப்ளேயைப்பற்றிய விவரங்களுக்கு Colonel John Biddulph எழுதிய "DUPLEIX" என்ற நூலின் 33—34'ம் பக்கங்களை கவனிக்கவும்.



இத்தனைக்கும் மேடம் வின்ஸன்ஸ் அழகாகவேயிருந்தாள். இந்த 43'வது வயதிலும் அவள் கவர்ச்சி இணையற்றதாக இருந்தது. அவள் சென்னையில் பிறந்த காரணத்தால் தமிழை மிக அழகாகப் பேசும் சக்தியுடையவளாயிருந்தாள். ஹிந்துஸ்தானியும் அவளுக்கு ஓரளவு தெரியும். அவள் தாய் டி காஸ்ட்ரோ போர்ச்சுகீஸ், தந்தை ஜேக்ஸ் ஆல்பர்ட் என்ற பிரெஞ்சுக்காரர். இப்படிக் கலப்பு மணத்துக்குப் பிறந்ததால் இரண்டு இனத்தின் குணமும் அவளிடம் பொருந்தியிருந்தது. சில சமயங்களில் போர்ச்சுகீஸியரின் கொடூரமும், சில சமயங்களில் பிரெஞ்சுக்காரரின் குழைவும் அவளிடம் தென்பட்டன. இத்தகைய இல்லத்தரசியைக் கட்டிக் கொண்ட டூப்ளே அவளைக் கண்டு சதா நடுங்கிக் கொண்டும் அவளைத் திருப்தி செய்வதிலுமிருந்தபடியால் இல்லத்தில் நரக வேதனையை அனுபவித்துக் கொண்டிருந்தார்.

இருப்பினும் பிரெஞ்சு சாம்ராஜ்யம் விரிவடைய வேண்டிய விஷயங்களை அவர் அலசும்போது திறமையாகவே அலசினார். ஆகையால் இரு நவாபுகளையும் பார்த்துச் சொன்னார். ''அடுத்தபடி நீங்கள் திருச்சியின் மீது படையெடுக்க வேண்டும்,'' என்று.

சந்தாசாகிபுவும் முஸபர்ஜங்கும் முகத்தில் கலவரத்தைக் காட்டினார்கள். ''ஆம்பூர் போர் முடிந்து இப்பொழுதுதானே இரண்டு மாதங்கள் ஆகின்றன?'' என்று சந்தாசாகிப் வினவினார்.

''அதற்குப் பிறகு ஆற்காட்டு நிர்வாகத்தை திடப்படுத்திவிட்டு இங்கு வந்திருக்கிறோம்,'' என்று இரண்டு மாத தாமதத்துக்குக் கார

ணம் சொன்னார் முஸபர்ஜங்.

டுப்ளே தமது சிரிய கண்களை அந்த இருவர்மீதும் திருப்பினார். "எந்த விதை உங்களை ஆற்காட்டிலிருந்து விரட்டியதோ, எந்த வித்து உங்கள் ஆற்காட்டுச் சொந்தத்தை இன்னும் பாதிக்கிறதோ அது களையப்படவில்லை," என்று கூறினார், பார்வையிலிருந்த சீரான நோக்கு குரலிலும் பிரதிபலிக்க.

மேடம் வெளியே சென்றதும் கதவைச் சாத்திவிட்டு அதன் அருகிலேயே நின்று கொண்டிருந்த டி புஸ்ஸி மிக நிதானமான ஆனால் அழுத்தமான குரலில் சொன்னான், "அந்த வித்து முகம்மது அலி, கம்பெனி நவாப்," என்று.

டுப்ளேயின் கண்கள் மகிழ்ச்சியுடன் நோக்கின தனது வலது கரம் போன்ற புஸ்ஸியை. அவன் சொன்னதை ஆமோதிப்பதற்கு அறிகுறியாகத் தலையையும் அசைத்தார் டுப்ளே. "நீ சொல்வது சரி புஸ்ஸி! முகம்மது அலி இருக்கும் வரை, பிரிட்டிஷ் கிழக்கிந்தியக் கம்பெனியால் நமக்கு ஆபத்திருக்கிறது," என்றும் கூறினார் தலையாட்டலைத் தொடர்ந்து.

புஸ்ஸி அத்துடன் நிற்கவில்லை. "இங்கு மழைகாலம் தொடங்க இருக்கிறது. ஆகவே உடனடியாகப் படையெடுப்பைத் தொடங்கினால் நல்லது," என்று ஊக்கினான் டுப்ளேயை.





"நன்றாகச் சர்பத் எப்படி?"
"நன்றாக நாறிக் கிடக்கிறது! அழுகல் பழமோ?"

"அதுதான் சரி," என்ற டுப்ளே நவாபுகளை நோக்கி, "இப்பொழுது அக்டோபர் 15 தேதி ஆகிறது. நல்லவேளை வடகிழக்குப் பருவ மழை தலைகாட்டக் காணோம். இதுவும் உங்களுக்கு நல்ல சகுனம். ஆகையால் இன்னும் பதினைந்து நாட்களுக்குள் கிளம்பிப் பாருங்கள்," என்றார்.

"எங்கள் படை..." என்று இழுத்தார் சந்தாசாகிப்.

"சண்டையிட்டுக் களைத்திருக்கிறது. தவிர சம்பளமும் சென்ற மாதத்திற்குக் கொடுக்கப்படவில்லை," என்றார் முஸபர்ஜங்.

"ஆற்காட்டு கஜானா பணம் என்னவாயிற்று?" என்று வினவினார் டுப்ளே.

"பாதியை மேடத்துக்கு அனுப்பிவிட்டோம்," என்றார் முஸபர் ஜங்.

டுப்ளே வாயைச் சட்டென்று மூடிக் கொண்டார். ஓரக்கண்ணால் புஸ்ஸியின் இகழ்ச்சி முறுவலைக் கண்டார். ஆனால் அதைப்பற்றி உள்ளூர எரிச்சல் உண்டானாலும் அதை வெளிக்குக் காட்டாமல், "சரி, அது எப்படியிருந்தாலும் இருக்கட்டும். நான் உங்களுக்குச் சிறிது பணமும் கொடுக்கிறேன். துணையும் கொடுக்கிறேன். புறப்படத் தயாராகுங்கள்," என்று அறிவித்துவிட்டு அவர்கள் போகலாமென்பதற்கு அறிகுறியாக வலது கையையும் ஆட்டினார். நவாபுகள் இருவரும் சிறிது தயங்கினாலும் வேண்டாவெறுப்பாக எழுந்து வெளியே சென்றார்கள். அவர்களை வெளியே அனுப்பக் கதவைத் திறந்த டி புஸ்ஸி தானும் வெளியே செல்ல முயன்றாலும், "புஸ்ஸி!" என்ற கவர்னரின் சொல் அவனது கால்களைத் தடைப்படுத்தியது.

"எனக்கு ஏதாவது உத்தரவு இருக்கிறதா?" என்று வினவினான் புஸ்ஸி.

"கதவைச் சாத்திவிட்டு வா," என்றார் டுப்ளே.

அவர் கட்டளையின்படி கதவைச் சாத்திவிட்டு வந்த டி புஸ்ஸியை ஓர் ஆசனத்தில் உட்காரச் சொல்லிவிட்டுத் தாமும் எதிரே அமர்ந்த டுப்ளே,


FRIENDS CIRCULATING LIB
No.
MADRAS-

---

## எப்படி அனுப்பினா



கிராமத்தில் இருந்தது அந்த அரசு நிறுவனக் கோழிப் பண்ணை. சுற்றுவட்டாரத்தில் உள்ள நகரங்களுக்கு ரயில் மூலமாக முட்டைகளை அனுப்பவேண்டியிருந்தது. கள்ளிப்பலகைப் பெட்டிக்குள் முட்டைகளை வைத்து, வைக்கோல் நிரப்பி மேல்புறம் கீழ்ப்புறம், என்றெல்லாம் குறிப்பிட்டு, ''ஜாக்கிரதையாகக் கையாளவும்'' என்ற எச்சரிக்கைகள் எல்லாம் ஒட்டி அனுப்பினார்கள்.

---

''புஸ்ஸி! உன்னை எனது சொந்த சகோதரனாக நினைக்கிறேன்...'' என்று துவக்கினார் சம்பாஷணையை.

''பாக்கியம்,'' என்றான் புஸ்ஸி இதழ்களில் புன்முறுவல் காட்டி.

டூப்ளே மனம் இருந்த நிலையில் அவர் அந்தப் புன்முறுவலைக் கவனிக்கவில்லை. ''புஸ்ஸி! திருச்சியை முற்றுகையிட்டு முகம்மது அலியைச் சிறைப்படுத்திவிட்டால் சந்தாசாகேபின் பலம் கர்நாடகத்தில் திடப்பட்டு விடும். அப்படித் திடப்பட்டுவிட்டால் பிரெஞ்சு பலமும் வேரூன்றிவிடும், பிறகு மெள்ள நமது வர்த்தகக் கம்பெனி மூலமே பிரெஞ்சு சாம்ராஜ்யத்தை இந்த நாட்டில் பரவவிட்லாம்.'' என்ற டூப்ளேயின் கண்கள் அப்பொழுதே சாம்ராஜ்யத்தைக் கண்டு விட்டனபோல் பளபளத்தன.

டி புஸ்ஸியின் சூட்சுமக் கண்கள் டூப்ளேயின் கனவைக் கவனிக்கவே செய்தன. ஆனால் அவன் வாயிலிருந்து ஒரு சொல்கூட உதிரவில்லை. ஆகவே டூப்ளேயே கேட்டார், ''இந்த திட்டத்தைப் பற்றி உன் அபிப்பிராயம் என்ன?'' என்று.

''திட்டம் சரியானதுதான்,'' என்று இழுத்தான் புஸ்ஸி.

''வேறு எது சரியில்லை?'' என்று வினவினார் டூப்ளே.

''இந்த நவாபுகள்,'' என்றான் டி புஸ்ஸி.

''ஏன்? அவர்களுக்கென்ன?''

''உங்கள் திட்டத்தை நிறைவேற்றுபவர்களாக எனக்குத் தோன்றவில்லை.''

''அதற்கு என்ன செய்ய வேண்டுமென்கிறாய்?''

''நான் அவர்களுடன் செல்லலாமென்று நினைக்கிறேன்.''

இதைக் கேட்ட டூப்ளே சிறிது யோசித்தார். பிறகு சொன்னார் திட்டமாக, ''முடியாது புஸ்ஸி! முடியாது. நீ இங்கு எனக்குத் தேவை,'' என்று.

''எப்படியிருந்தாலும் இவர்களை மேற்பார்வை பார்க்க ஒரு பிரெஞ்சுப் படைத் தலைவன் தேவை,'' என்றான் புஸ்ஸியும் திட்டமாக.

டூப்ளே சிறிது சிந்தனையில் இறங்கினார் மீண்டும். கடைசியாக, ''டி ஆதுனிலைப் பற்றி உன் கருத்து என்ன?'' என்று வினவினார்.

இம்முறை டி புஸ்ஸியும் சிறிது நேரம் சிந்தனையில் ஆழ்ந்தான். ''டி ஆதுனில் சிறந்த போர் வீரர், சிறந்த படைத் தலைவர்...'' என்று இழுத்தான்.

''அவரை அனுப்பினாலென்ன?''

''சூதுவாது தெரியாதவர். வெளுத்ததையெல்லாம் பால் என்று நினைப்பவர்.''

''அப்படியிருக்கக்கூடாதா?''

''இந்தச் சுதேசிகளிடம் கூடாது.''

''நயவஞ்சகனான ஒருவனை அனுப்ப வேண்டுமென்கிறாய்?''

என்ன பயன்? முட்டைகள் 30, 35 சதவிகிதம் உடைந்துதான் போய்ச் சேர்ந்தன. ஹார்ட்போர்டு பெட்டியில் 'பேக்' செய்து பார்த்தார்கள். நஷ்டம் குறைந்த பாடில்லை.

நிறுவன ஊழியரொருவர், 'மண்பானையில் வைத்து அனுப்புவோம்' என்று யோசனை கூறினார். எல்லோரும் சிரித்தனர்— நல்ல கெட்டிப் பாக்கிங்கால் முடியாதது பானையால் ஆகுமா என்று. இருந்தாலும் அனுப்பிப் பார்த்தார்கள். என்ன ஆச்சரியம்! ஒரு முட்டைகூட உடைந்து போகவில்லை!

காரணம், பானையைக் கையாண்டவர்கள், எங்கே பானை உடைந்து விடுமோ என்று பயத்துடனும் எச்சரிக்கையுடனும் கையாண்டதுதான்!

(நெய்வேலி லிக்னைட் கார்ப்பரேஷன் விற்பனை அதிகாரி வேலப்பன் ஒரு சொற்பொழிவில் கூறியது.)

—எஸ். சேஷாத்திரி

---

"இல்லை. எதையும் சட்டென்று நம்பிவிடாதவரை அனுப்ப வேண்டுமென்கிறேன்," இதை மிகத் திட்டமாகக் கூறினான் புஸ்ஸி.

"சரி யோசிக்கிறேன்," என்றார் டுப்ளே. ஆனால் அவர் யோசிப்பதற்கு வழி ஏதுமில்லாத ஒரு சதி அதே மாளிகையின் ஒரு மூலையில் நடந்து கொண்டிருந்ததை அவர் அறியவில்லை. அந்த மாளிகையின் கோடி அறை ஒன்றில் சந்தாசாகிப்பும், முஸபர்ஜங்கும் மேடம் டுப்ளேயின் மூளையைத் தங்கள் பக்கம் திருப்பிக் கொண்டிருந்தார்கள். மேடத்துடன் பேச முற்படுமுன்பு சந்தா சாகிப் அவள் கைகளில் ஒரு பண முடிப்பைக் கொடுத்தார்.

முடிப்பை இருமுறை தனது கையில் தூக்கித் தூக்கி எடை பார்த்த மேடம், "இதில் எத்தனை இருக்கிறது?" என்று வினவினாள்.

"ஆயிரம் *பகோடாக்கள்," என்றார் சந்தாசாகிப். "ஆனால் இது ஆரம்பம்தான். எங்களிஷ்டப்படி காரியங்கள் நடந்தால்..." என்றும் சொன்னார்.

"என்ன உங்களிஷ்டம்?" என்று வினவினாள் மேடம்.

"இந்த புஸ்ஸி இருக்கிறானே..."

"ஆம்."

"அனாவசியமாகச் சம்பந்தமில்லாத விஷயங்களில் தலையிடுகிறான்."

"அப்படியா?"

"ஆம்."

"என்ன செய்கிறான்?"

"நமது படையெடுப்புகளில் லாபம் சம்பாதிப்பதை ஆட்சேபிக்கிறான்."

"என்ன அயோக்கியத் தனம்!"

"அது தங்களுக்குத் தெரிந்திருப்பது பற்றி எங்களுக்கு மகிழ்ச்சி. அவன் எங்களுடன் வந்தால் மேடத்துக்குப் போதிய பணம் கிடைப்பது மிகவும் கஷ்டம்," என்ற சந்தாசாகிப் முகத்தில் வருத்தக் குறி காட்டினார். முஸபர்ஜங் முகம் சோகத்தால் மிக நீண்டுவிட்டதால் அவர் தாடி மார்பில் இடித்தது.

மேடம், "சரி, நீங்கள் செல்லலாம்," என்று உத்தரவு கொடுத்து விட்டு நடன மண்டபத்துக்குச் சென்றாள். அங்கிருந்த விருந்தினர்களையெல்லாம் மரியாதையுடன் அனுப்பிவைத்து விட்டுத் தன் பள்ளியறை சென்றாள். அங்கிருந்த பெரும் கட்டிலின் பஞ்சணையில் படுத்துக் கிடந்த டுப்ளேயைப் பார்த்துப் புன்முறுவல் செய்தாள். பிறகு தனது உடைகளை ஒவ்வொன்றாகக் களைந்தாள். டுப்ளேயின் கண்கள் அவள் உடைகள் நழுவ நழுவ வெறிபிடித்தன. முடிவில் அவள் நைட் கௌன் அணிந்து அவரது பக்கத்தில் படுத்தாள். "மார்ட்டின்!" என்று செல்லமாக அழைத்தாள்.

"என் பெயர் மார்ட்டின் அல்ல. ஜோஸப் பிராங்காய் டுப்ளே." என்றார் டுப்ளே.

"ஆனால் என் பழைய கணவரை இந்தச் செல்லப் பெயரால்தான் அழைத்துவந்தேன். அந்த செல்லம் முழுவதையும், அதற்கு மேலும் உன்மேல் மாற்றிவிட்டேன்." என்ற மேடம் திரும்பி டுப்ளேயின் மீது தனது கரமொன்றைத் தவழவிட்டாள்.

விளைவு? பிறகு நவாபின் படைகளுக்குத் துணையாக புஸ்ஸி போகவில்லை. டி. ஆதுவில் சென்றார்.

(தொடரும்

---

*பகோடா என்பது ஒரு தங்க நாணயம். அதன் மதிப்பு சராசரி 7 ஷில்லிங், 6 பென்ஸ்— 'Dupleix'—By Colonel Johon Biddulph - Page -2.

# அனுபவிக்க வேண்டிய வயதில்

'சுப்பு'

பம்பாய் விக்டோரியா டெர்மினஸ் ஸ்டேஷனைப் பார்த்துப் பிரமித்துப் போனாள் சாவித்திரி. அப்பாடியோவ்! எவ்வளவு பெரிசு! மதுரை எங்கே, பம்பாய் எங்கே!

''வாங்கோ மன்னி. அண்ணா வாருங்கோ,'' என்று வரவேற்ற துரை, ''ஒரு வழியாய் வீட்டை விட்டு வெளியிலே மன்னி கூடக் கிளம்பினீர்களாக்கும். வருஷக் கணக்காச்சு தம்பி வீட்டுக்கு வர?'' என்று அண்ணனிடம் ஆதங்கப் பட்டுக் கொண்டான். சாமான்களை டாக்ஸியில் ஏற்றிவிட்டு மூவரும் அமர்ந்தனர்.

''வீட்டில் எல்லோரும் சௌக்கியமா? கமலிக்கு உடம்பு சரியாயில்லைன்னு எழுதியிருந்தாளே? தேவலையா?'' என்று விசாரித்தாள் சாவித்திரி.

கமலி துரையின் மனைவி. இரண்டு பெண் குழந்தைகள் அவனுக்கு.

''நீங்க ரெண்டு பேரும் வரதாகத் தெரிஞ்சதுமே அவள் ஜுரம் சரியாகிவிட்டது. கடிதாசு வந்த அன்னியிலிருந்து அவளுக்கு ராத் தூக்கமில்லை. இன்னும் நாலு நாள் மூணு நாள்னு சொல்லிக்கொண்டு இருந்தாள். மீராவும் மீனுவும் கூடப் பெரியப்பா பெரியம்மாவைப் பார்க்கணும்னு துடிச்சுக் கொண்டு இருக்கிறார்கள்,'' என்று குதூகலத்துடன் கூறிக்கொண்டே போனான் துரை.

சாவித்திரி மைத்துனனைப் பார்த்தாள். அவன் பெயருக்குத்தான் மைத்துனன். உண்மையில் அவள் வளர்த்த பிள்ளை அவன். வெங்கடராமனுக்கும் அவனுக்கும் வயது வித்தியாசம் நிறைய உண்டு. வெங்கடராமன் கல்லூரியில் படிக்கும் போதே அடுத்தடுத்து அன்னையையும், தந்தையையும் இழந்துவிட்டார். படிப்பை முடித்து வேலையில் அமர்ந்து தம் தம்பிகளையும் படிக்க வைத்தார். துரை இஞ்ஜினீயரிங் படித்தான். அவனுக்கு முன் பிறந்த கோபி இன்று சென்னையில் பெரிய ஆடிட்டர். கடைசித் தங்கை பரிமளா பெங்களூரில் பிரபலமான டாக்டர் ஒருவரின் மனைவி. இவர்களை வளர்த்து முன்னுக்குக் கொண்டுவந்து சமூகத்தின் உயர்ந்த அந்தஸ்தில் உட்கார வைக்க வெங்கடராமனின் உழைப்புமட்டுமல்ல, சாவித்திரியின் உழைப்பும் உறுதுணையாக இருந்தது.

செம்பூரில் ஒரு புத்தம் புதிய பிளாட் ஒன்றில் துரையின் குடும்பம் இருந்தது. பளபளக்கும். மொசைக் தரை. உட்கார்ந்த உடலை இதமாக அணைக்கும் மிருதுவான சோபாக்கள். டன்லப் மெத்தையிட்ட இரட்டைக் கட்டில். டைனிங் டேபிள், காஸ் அடுப்பு, ஃப்ரிட்ஜ், டி. வி. இன்னும் என்ன வேண்டும்! சாவித்திரிக்குப் பார்க்கப் பார்க்கப் பிரமிப்பு அடங்கவில்லை; கூடவே ஒரு ஏக்கம். தானும் இந்த மாதிரி வசதியான வீட்டில் குடித்தனம் நடத்த வேண்டும் என்பது அவளுடைய எத்தனையோ நாளைய அவா. ஹூம்!

கமலி, ''அக்கா அக்கா,'' என்று சுற்றிச் சுற்றி வந்து அவளை உபசரித்தாள். குழந்தைகள் பெரியம்மா பெரியப்பாவிடம் உயிராக இருந்தன.

மலபார் ஹில்ஸும் மகாபலேஷ்வரும் பார்த்து ஊரைச் சுற்றி



23.6.77

## 5. கண்ணாடியில் தெரிந்த உருவம்

அரசுகளின் முக்கியமான முடிவுகள் பல, அரசியல்வாதிகளின் ஆலோசனை சபைகளைவிட, அவர்கள் ட்ஞ்சணைகளில் கிடைக்கும் மந்திரோபதேசத்தில்தான் எடுக்கப்படுகின்றன என்பதற்கு டூப்ளே ஓர் உதாரணமாக விளங்கினார். இல்லையேல் இந்த நாட்டில் அவர் கண்டிப்பாக பிரெஞ்சு சாம்ராஜ்யத்தை நிறுவியிருப்பார். எப்பேர்பட்ட மேதைகளுக்கும் நாட்டாட்சி ஒரு புறமிருந்தால், பலமான வீட்டாட்சியும் மற்றொரு புறமிருப்பதால், மேதைகள் பைத்தியங்களாகிறார்கள். அப்படிப்பட்ட பைத்தியக்காரத்தனந்தான் டூப்ளேயின் முதல் முடிவை மாற்றி டி ஆதவில்லை நவாபுகளுடன் அனுப்பி வைத்தது.

ஆனால் இந்தப் பொது நியதிக்குச் சில விலக்குகளும் உண்டு. அப்படி விலகி நிற்பவர்கள் பல சிக்கல்களிலிருந்தும் தங்களை விடுவித்துக் கொள்கிறார்கள். அவர்கள் அறிவு காதின் மூலம் கிடைக்கும் மந்திரச் சொற்களால் மயங்காது தெளிவுடன் நிற்கிறது. ஆகவே அவர்கள் முடிவுகளிலும் ஒரு தெளிவு இருக்கத்தான் செய்கிறது. அத்தகைய தெளிவு படைத்தவர் தஞ்சை மன்னர் பிரதாபசிம்மன். தஞ்சை இஸ்லாத்தின் ஆட்சியின் கீழ் வராமல் கடைசி வரை நின்றதற்கு, அவரது தெளிந்த, ஆழ்ந்த அறிவுதான்

அசைத்தார்.

டபீர் பண்டிதருக்கு மகாராஜாவின் மௌனமும் தலையசைப்பும் அதிக எரிச்சலை உண்டாக்கவே அவர் மேலும் சொன்னார், "இந்த ஆண்டு மக்களிடமிருந்து போதிய நெல் கிடைக்காது," என்று. குரலிலும் எரிச்சலைக் காட்டி.

"உண்மை," என்று மகாராஜாவின் வாயிலிருந்து ஓர் ஒற்றைச் சொல் மட்டும் உதிர்ந்தது.

"தவிர, தேவிக்கோட்டையும், அதன் சுற்றுப்புற நிலங்களும் போய் விட்டன," என்றும் குற்றம் சாட்டினார் டபீர் பண்டிதர்.

"அவை போகவில்லை. நாமா

# ராஜ பேரிகை

காரணம். அப்பேர்ப்பட்ட மகாராஜா பிரதாப சிம்மனையும் மூன்று பேர் உஷ்ணத்துடன் பார்த்தார்கள்.

டூப்ளேயின் மந்திராலோசனை புதுவையில் நடந்த மூன்றாம்நாள் இரவில் தஞ்சை அரண்மனையிலும் ஒரு மந்திராலோசனை நடக்கத்தான் செய்தது. என்றும் உஷ்ணத்தையோ பதட்டத்தையோ காட்டாத டபீர் பண்டிதர் கூட அன்று முகத்தில் கோபச் சாயை காட்டினார். "இவ்வருஷம் வானம் நம்மை ஏமாற்றிவிட்டது," என்று அரசை நோக்கிச் சொன்னார். அதற்கு அரசர்தான் பொறுப்பாளி போல.

மகாராஜா பதிலேதும் சொல்லவில்லை. ஆம் என்று ஒப்புக்கொள்வதற்கு அறிகுறியாகத் தலையை மட்டும்

கக் கொடுத்தோம் வெள்ளைக்காரர்களுக்கு." என்றார் பிரதாபசிம்ம மகாராஜா.

அதுவரை டபீர் பண்டிதருக்கும் மகாராஜாவுக்கும் ஏற்பட்ட சம்பாஷணையில் குறுக்கிடாமல் தமது பெருவாள் இடையில் தொங்க எட்டவே நின்றிருந்த மானாஜி அப்பா, "அவசியமில்லாத சமயத்தில்," என்றார் குரலில் லேசாக வெறுப்பைக் காட்டி.

"எப்படி அவசியமில்லை?" என்று வினவினார் தஞ்சை மன்னர்

சாண்டில்யன்

தமது படைத்தலைவரை நோக்கி.

"நான் தேவிக்கோட்டையி லிருந்து பின்வாங்கியதற்குக் காரணம் தோல்வியல்ல," என்றார் மானாஜி.

"தெரியும் எனக்கு," என்றார் மகாராஜா சர்வசகஜமாக.

"தேவிக்கோட்டையில் இருக் கும் வரை பிரிட்டிஷாருக்கு அவர்கள் கப்பற்படையின் உதவி இருந்தது."

"ஆம்."

"அதிலிருந்து அவர்களை இழுக்கவே ஆச்சாள்புரம் கோவிலுக் குள் படைகளை நிறுத்தினேன். மதிள் மீது நமது பீரங்கிகளையும் பொருத் தினேன்."

"ஆம்."

"தாங்கள் சிறு உதவி அனுப் பியிருந்தாலும், அல்லது சில நாட்கள் அவகாசம் அளித்திருந்தாலும் பிரிட் டிஷ் படையை முறியடித்திருப்பேன்." இந்தச் சொற்களைச் சிறிது உஷ்ணத் துடன் சொன்னார் மானாஜி.

"இது எதிலும் சந்தேக மில்லை," என்றார் மகாராஜா.

"நமது கை ஓங்கியிருந்த சமயத்தில் துணைப்படை அனுப்புவதற் குப் பதில் தூதனை அனுப்பினீர்கள் பிரிட்டிஷ் படையுடன் சமாதானத் திற்கு." என்று சுட்டிக் காட்டினார் மானாஜி.

---

## எங்கே போகிறாய்?



நான் அவசரமாக அடுத்த தெருவில் நடக்கவிருக்கும் ஒரு திருமணத் திற்குச் சென்று கொண்டிருந்தேன். எதிரில் எனது நண்பன் ரவி என்னைக் கண்டான். "எங்கிருந்து திரும்பி வருவாய்?" என்று கேட்டான். நான் ஆச்சரியத்துடனே பதில் கூறினேன். எனது வியப்பைக் கண்ட நண் பன், "'வெளியே போகும்போது 'எங்கே போகிறாய்?' என்று கேட்பது அமசகுன மல்லவா? அதனால்தான் இப்படிக் கேட் டேன்," என்றான்.

—எல். ஷபாகி

---

பிரதாபசிம்ம மகாராஜா மானாஜியைச் சிறிது நேரம் உற்று நோக்கினார். "மானாஜி! நீங்கள் சொல் வது எதிலும் தவறில்லை. ஆனால் மன்னனாயிருப்பவன் தனது ராஜ்யத் தின் ஒரு திசையை மட்டும் கவனிப்ப தற்கில்லை," என்றார்.

டபீர் பண்டிதர் துணிவுடன் இடை புகுந்து, "ஆனால் நீங்கள் கவனித்த திசையில் கிட்டத்தட்ட ஒன்பதாயிரம் கலம் நெல் கைவிட்டுப் போய்விட்டது," என்று சுட்டினார்.

"வருமானவரி அமைச்சர் வரு மானத்திலேயே கண்ணாயிருக்கிறார்," என்ற மன்னர், மீண்டும் டபீரைப் பேச விடாமல் கையமர்த்தி, "மானாஜி! நீங்கள் ஆச்சாள்புரத்தில் இருந்த பொழுதுதான் சந்தா சாகிப் பெரும் படையுடன் ஆற்காட்டை வெற்றி கொண்டார். அங்கு நமக்கிருந்த ஆதரவு போய்விட்டது. அடுத்தபடி சந்தாசாகிபுவும் டூப்ளேயும் கண் வைக்கக் கூடிய இடம் திருச்சிதான். அங்கு ஒரு இடத்தில்தான் நமது நண்பர் முகம்மது அலி இருக்கிறார். திருச்சி பிரெஞ்சுக்காரர் கையில் விழுந் தால் தஞ்சையைப் பிடிப்பது ஒரு பெரிய காரியமல்ல. தவிர, சந்தா சாகிப்புக்குத் திருச்சியைவிடத் தஞ்சை மீது அன்பு அதிகம்," என்றார்.

மானாஜி புரிந்ததற்கு அறி குறியாகத் தலையை அசைத்தார். இருப் பினும் அவர் சொன்ன காரணத்தை அவர் முழுவதும் ஆமோதிக்காததால் வினவினார், "திருச்சியைப் பிடித்துக் கொண்டு இங்கு வருவதற்கு மூன்று மாத காலம் ஆகும். அதற்குள் இங்கு நாம் நிலைமையைத் திடப்படுத்திக் கொள்ள முடியாதா? அதற்காகத் தேவிக்கோட்டையை விட்டுக்கொடுக்க வேண்டுமா?" என்று.

பிரதாபசிம்ம மகாராஜா அவருக்கு உடனடியாக விடையளிக்க வில்லை. சற்றுத் தூரத்தே சாளரத்துக்கு அருகில் நின்று கொண்டிருந்த விஜய குமாரனைக் கூர்ந்து நோக்கினார். "விஜய குமாரா! நமது தளபதியின் யோசனை யைப்பற்றி உன் கருத்து என்ன?" என்று வினவினார்.

விஜயகுமாரன் சாளரத்தி லிருந்து மெல்ல நடந்து அறையின் நடுவுக்கு வந்தான். "பெரியவர்கள் முடிவுகளில் எதற்கும் அபிப்பிராயம்

## மலர் மோகம்



பூக்களின் மீது ஜப்பான் நாட்டு மக்களுக்கு எவ்வளவு பற்று இருக்கிறது என்பதற்கு ஒரு சான்று:

மொட்டு, மலர், வாடிய மலர் என்று சொல்லும் வழக்கம் அவர்களிடம் இல்லையாம். அழகாக இருக்கப் போகும் ரோஜா; அழகாக இருக்கும் ரோஜா; அழகாக இருந்த ரோஜா என்றுதான் அழைப்பார்களாம். அப்படித்தான் அவர்கள் மொழியிலே அடைமொழிச் சொல்லே இருக்கிறதாம்.

—அ. மாரிமுத்து

---

சொல்லக்கூடிய தகுதி எனக்கில்லை. நான் சிறுவன், அனுபவமற்றவன். அதிக போர்களைக் கண்டறியாதவன்,'' என்று தப்பிக்கொள்ள முயன்றான்.

''உன் அனுபவத்தைப் பற்றிக் கேட்கவில்லை. அபிப்பிராயத்தைப் பற்றிக் கேட்கிறேன்,'' என்றார் மகாராஜா மீண்டும்.

விஜயகுமாரன் சில விநாடிகள் சிந்தனையிலிறங்கினான். ''இப்பொழுது நாட்டில் நடக்கும் போர் இஸ்லாத்துக்கும் ஹிந்துக்கும் அல்ல,'' என்றான் மெதுவாக.

''வேறு யாருக்குள் நடக்கிறது?'' என்றார் மானாஜி.

''பிரிட்டிஷ்காரர்களுக்கும் பிரெஞ்சுக்காரர்களுக்கும் நடக்கிறது,'' என்றான் விஜயகுமாரன்.

அதற்குமேல் அவனைப் பேச விடாத மகாராஜா, ''அதுவே உண்மை. இந்த இரண்டு விதேசிகளும் இங்கு தங்கள் சாம்ராஜ்யத்தை நிறுவப் பார்க்கிறார்கள். அதற்கு நம்மைக் கருவிகளாகப் பயன்படுத்த முயலுகிறார்கள். இப்பொழுது பிரெஞ்சுக்காரர் கை ஓங்கி நிற்கிறது. சந்தாசாகிபை இங்கு நிலைக்கவிட்டால் நாம் பிரெஞ்சு சாம்ராஜ்யத்தை நிலைக்க விடுகிறோம்,'' என்று கூறியதுடன் நிற்காமல், ''அதைத் தவிர்க்க வேண்டுமென்றால் நாம் ஒரு கட்சியில் சேர்ந்துதானாக வேண்டும். ஆகையால் சந்தாசாகிப் ஆற்காட்டைப் பிடித்தவுடன் பிரிட்டிஷாரின் கையைப் பலப்படுத்த முடிவு எடுத்தேன். இல்லையேல் நாம், சந்தாசாகிப், ஆங்கிலேயர், பிரெஞ்சுக்காரர் ஆகிய மூன்று விரோதிகளைச் சமாளிக்க வேண்டியிருக்கும். வழி ஒன்றுதானிருந்தது. ஒரு எதிரியை நமது நண்பராக்கிக்கொள்ளும் வழி. அந்த வழியைக் கையாண்டேன். அதனால்தான் தேவிக்கோட்டையில் நமது வெற்றி நிச்சயமாயிருந்தும் சமாதானம் செய்து கொண்டேன்,'' என்றும் விளக்கினார்.

மானாஜி அப்பா பதிலேதும் கூறவில்லை இந்த விளக்கத்துக்கு. ஆனால் விஜயகுமாரன் மட்டும் ஒரு சந்தேகம் கேட்டான். ''வேறு வழியில்லையா?''

பிரதாபசிம்ம மகாராஜாவின் கண்கள் மட்டுமின்றி மற்ற இரு அமைச்சர் கண்களும் விஜயகுமாரனை வியப்புடன் நோக்கின. ''வேறு வழி இருக்கிறதா?'' என்றார் மகாராஜா.

''இருந்தது. இன்னும் இருக்கிறது. ஆனால்...'' என்று சற்றுத் தயங்கினான் விஜயகுமாரன்.

''தைரியமாகச் சொல்,'' என்று ஊக்கினார் மன்னர்.

விஜயகுமாரன் மன்னரையும் நோக்கினான்; மற்றோரையும் நோக்கினான். ''உண்மையைப் பேசுவதற்கு மன்னிக்க வேண்டும்,'' என்று தனது உரையையும் தொடங்கினான் துணிவுடன். ''மகாராஜா, தாங்கள் நினைப்பது போல் இன்று இந்த நாட்டில் இருக்கும் பெரும் சக்திகள் இரண்டுதான். அதில் ஒன்று நசித்துவிட்டது. மிகத் திறமைசாலியான அவுரங்கசீப்புக்குப் பிறகு டில்லியின் சக்தி ஒடுங்கிக் கிடக்கிறது. இரண்டாவது சக்தியான மகாராஷ்டிர சாம்ராஜ்யத்தின் சக்தி இன்று உச்ச நிலையிலிருக்கிறது. முன்பே அதன் சக்தியை ரகோஜி போன்ஸ்லா இந்தத் தென் திசையில் உரைத்திருக்கிறார். இன்றுகூட இந்த வெள்ளைக்காரர்கள், தொண்டைமண்டலத்தை அடுத்துள்ள மலைச்சாரலில் தங்கியிருக்கும் முராரிராவின் படையைக் கண்டு அஞ்சுகிறார்கள். இந்தத் தஞ்சை ராஜ்யம் ஆதியிலிருந்து மகராஷ்டி தாயகத்திலிருந்து பிரிந்து தனித்து நிற்கிறது. அத்துடன் இதை இணைய வைக்க சிவாஜி மகாராஜா முயன்றார்; முடியவில்லை. இந்தத் தஞ்சை ராஜ்யம் தனித்து நிற்

மனை எடுக்கக் கூடாது. நிலங்களைப் பண்டைத் தமிழர் மண் சோதனை மூலமாக நிர்ணயித்தனர். ஒரு முழ நீள—அகல குழிதோண்டி மண்ணை வெளியே எடுத்து மீண்டும் அதே மண்ணால் மூடும் போது மண் மிகுந்தால் நல்லதென்றும் சமமாக இருந்தால் தேவலை என்றும் குறைந்தால் தீது என்றும் முடிவு செய்யப்பட்டது.

—நா. பாலசுப்பிரமணியன்

காமல் மகாராஷ்டிரப் பேரரசுடன் இணைந்துவிட்டால் இதை அணுகவும் பிறர் அஞ்சுவார்கள்,'' என்று கூறினான் விஜயகுமாரன்.

இதைக் கேட்ட பிரதாபசிம்ம மகாராஜாவின் முகம் உணர்ச்சியற்ற கல்லாகிவிட்டது. சிறிது நேரம் அந்த ஆலோசனை அறையில் நிலவிய மௌனத்தை மகாராஜாவே கலைத்து, ''இதுவரை அரசாக இருந்து வரும் தஞ்சை ராஜ்யத்தை ஸதாராவின் சிற்றரசாக்கப் பார்க்கிறாய்,'' என்றார் மிக மெதுவாக. அந்த மெதுவில் கடினம் கலந்திருப்பதை உணர்ந்தான் விஜயகுமாரன். ஆனால் இளங்கன்று பயமறியாது என்ற முதுரைக்கு விளக்கம் தரத் தனது சொரூபதைக் காட்டத் தொடங்கி, ''மகாராஜா! தந்தை தனயர்களுக்குள் ஆண்டான்—அடிமை உறவு கிடையாது. மகாராஷ்டிர அரசுகளுக்குள் பேரரசு சிற்றரசு என்ற வேறுபாடு கிடையாது. ஆதி முதல் தமது பாரத மன்னர்கள் தாயாதிச் சண்டையாலும் வீண் பெருமைகளாலும் தங்கள் அரசுகளை இழந்திருக்கிறார்கள். மகாராஷ்டிரர்கள் எங்கிருந்தாலும் ஒரு இனந்தானே! அவர்கள் பிரிந்து எதிராளிகளுக்கு வலுவை அளிப்பானேன்?'' என்று வினவினான்.

மகாராஜா இதைக் கேட்டுக் கோபிக்கவில்லை. இதழ்களில் இளநகையே கூட்டினார். ''சிறுவனே! நீ நினைப்பது போல் அரசியல் சிக்கல்கள் அத்தனை சுலபமாகத் தீருவதில்லை. சாம்ராஜ்யங்கள் உருவாவதும் அழிவதுங்கூடத் தனி மனிதர்களின் திறமையாலும், திறமையின்மையாலுமே நடைபெறுகின்றன. சிவாஜி மகாராஜா சின்னஞ்சிறு மலைக்கோட்டைகளைக் கொண்டு சாம்ராஜ்யத்தைச் சிருஷ்டித்தார். அவுரங்கசீப் சக்கரவர்த்தி பெரும் படையிருந்தும் தமது சாம்ராஜ்யத்தை அழித்தார். ஆகவே, எண்ணிக்கையும் அரசுகளின் சேர்க்கையும் பலத்தை நிர்ணயிப்பதில்லை. தனி மனிதர்களின் தீர்க்காலோசனை, துணிவு, ஊக்கம், சமயமறிந்த ராஜதந்திரம், இவைதான் அரசுகளைத் தப்ப வைக்கின்றன. இந்தத் தஞ்சை அரசையும் தப்பவைக்க அப்படித்தான் முயலுகிறேன். எனக்குத் தெரிந்த ராஜதந்திரத்தின்படி இப்பொழுது இந்தப் பகுதியில் நமக்கு வேண்டியது ஸதாராவின் துணையல்ல. இதை நீயே காலத்தில் புரிந்துகொள்வாய்,'' என்று கூறிய பிரதாபசிம்மன் மானுஜியை நோக்கி, ''மானுஜி, நமது கோட்டை நீண்ட கால முற்றுகையைத் தாங்க ஏற்பாடு செய்யுங்கள். பண்டிதரே! அதற்கு வேண்டிய உணவு வகையறுக்களைச் சேர்க்க நீர் முனைந்து பணி செய்யும்,'' என்று உத்தரவிட்டார். அத்துடன் மீண்டும் சிந்தனையிலும் இறங்கினார் மன்னர். அதற்கு மேல் ஏதும் பேச விரும்பவில்லை என்பதை உணர்ந்த மூவரும் அறையை விட்டு வெளியேறினார்கள். அறைக்கு வெளியே வந்ததும் இரு அமைச்சர்களும் ஒருவருக்கொருவர் ஏதோ பேசத் தொடங்கினாலும் அதில் கலந்து கொள்ளாத விஜயகுமாரன் நேராகத் தனது அறைக்குச் சென்றான்.

அறையிலிருந்த கட்டிலில் சிறிது நேரம் படுத்துச் சிந்தனையில் ஆழ்ந்தான். பிறகு ஏதோ முடிவுக்கு வந்தவன்போல் துள்ளி எழுந்து உடைகளை ஒரு மூட்டையாகக் கட்டி ஆயுதங்களையும் அணிந்து கொண்டான். அத்துடன் அங்கிருந்த ஒரு கண்ணாடியில் அழகும் பார்த்துக் கொண்டான். அந்தக் கண்ணாடியில் அவனுக்குப் பின்னாலும் ஓர் உருவம் நின்று கொண்டிருந்தது. அதன் கையில் ஒரு கைத்துப்பாக்கியும் இருந்தது. அதுவும் நன்றாக எழுந்து அவன் முதுகை நோக்கிப் பிடிக்கப்பட்டு இருந்தது. கைத்துப்பாக்கியின் குதிரை மெல்ல இழுக்கப்படுவதையும் விஜயகுமாரன் கண்ணாடியில் பார்த்தான். தவிர, அந்த உருவத்தின் கண்களில் கொலை புரியக்கூடிய உக்கிரமும் உறுதியுங்கூட இருந்ததை அவன் சந்தேகமறப் புரிந்து கொண்டான்.

(தொடரும்)

சிக்கிய எதை எதை மீட்க முடியுமோ, அதையெல்லாம் காப்பாற்றப் பரபரந்தனர்.

"ஐயா! ஐயா!" கதறினாள் மாரி.

"என்ன அம்மா! உள்ளே யாராவது இருக்காங்களா?" தீயணைப்புப் படை ஆள் வினவினார்.

"படுபாவி கண்ணு வச்சா... ஒரு பானை நிறையச் சோறும், சட்டி நிறைய மீன் குழம்பும் ஆக்கி இப்பத்தான் இறக்கிவச்சேன் ஐயா!"

அந்த ஆள் உள்ளே ஓடினார். சோற்றுப் பானையும், குழம்புச் சட்டியும் மற்றுத் தட்டுமுட்டுச் சாமான்களும் அவளெதிரில் வந்துவிட்டன.

அப்பா! சோறு பிழைத்தது. அவள் அடிவயிற்றின் நிதில் சமனப்பட்டது. அப்போது பெரிய பையன் ஓடிவந்து தாயைக் கட்டிக் கொண்டான். "அம்மா பயம்மா இருக்கும்மா!"

மாரியின் அடிவயிறு இப்போது ஒரு பெரிய நெருப்புப் பந்தை வேலால் செருகினாற்போல், குபீரென எரிய ஆரம்பித்தது.

"ஐயோ என் பிள்ளை ராசு! என் மவன் ராசு!... பாவி! அவனை விட்டுட்டு சோற்றுப் பானையைத் தூக்கிகிட்டுவரச் சொன்னேனே... தாளிப் பிள்ளை நெருப்பிலே வேகிறானே..."

இப்போது அவள் குடிசை, உச்சிக் கூரை விழுந்து உள்ளே எரிந்து கொண்டிருந்தது.



கராத்தே அடியைச் சமாளித்து விடலாம். ஆனால் கராத்தே பார்வையை ஜீரணிப்பது தான் கஷ்டம்.

ஸ்ரீப்ரியா முறைக்கிறது—'நல்லதுக்குக் காலமில்லே.'

# ராஜ பேரிகை

சாண்டில்யன்

## 6. கோட்டை மருந்து

கண்ணாடியில் தெரிந்த உருவத்தைக் கண்டதும் கணநேரம் திகைத்துவிட்ட விஜயகுமாரன் வதனத்தில் அந்தத் திகைப்பு வந்த நேரத்தில் மறைந்து, மந்தகாசம் அது இருந்த இடத்தைப் பிடித்துக் கொள்ளவே சரேலெனத் திரும்பினான். பின்னாலிருந்த உருவத்தை நோக்கி, "இது சௌகரியம்," என்றும் சொல்லிச் சிரிப்பை லேசாக உதிர விடவும் செய்தான் தன் வலிய உதடுகளிலிருந்து. அத்துடன் கதவுப் பக்கம் திரும்பி அது தாளிடப்பட்டிருப்பதையும் நோக்கிப் புன்முறுவலும் கொண்டான். பிறகு அவன் பேசவில்லை. அந்த உருவத்தின் ஒவ்வொரு அம்சத்தையும் கண்களால் விழுங்கவே செய்தான்.

நந்தினி அன்று மிக அழகாக அலங்காரம் செய்து கொண்டிருந்தாள். அவள் தலைக்குழலை அலங்கரித்த தஞ்சை முல்லைச் சரம் அவள் கண்களிலிருந்த உக்கிரத்தைக் கேலிக்கூத்தாக அடித்துக் கொண்டிருந்தது. அவள் கழுத்தைச் சுற்றிக் கிடந்த மாணிக்க மாலை, அவள் கன்னத்தில் ஏறிக் கிடந்த கோபச் சிவப்பைப் பார்த்துத் தனது செவ்விய கிரணங்களைக் கொண்டு போராடக் கிடந்தது. அவள் அணிந்திருந்த காசிப் பட்டுச் சேலைகூட உடல் முழுவதையும் மறைக்க முடியாததால், அவள் உடல் வழவழப்பின் முன்பு தனது வழவழப்பு அர்த்தமற்றது என்பதை நிரூபித்துக் கொண்டிருந்தது. அவள் கையிலிருந்த தங்க வளையல்கள் நான்கும் நாக சர்ப்பங்களைப் போல் செய்யப்பட்டிருந்தாலும், அவள் கொல்லும் விழிகளின் முன்பு தங்கள் விஷம் பயனளிக்காது என்ற நினைப்பால் சத்தமின்றித் தலைகளைச் சாய்த்து எதிர்க் கணுக்களைக் கவ்விக் கொண்டிருந்தன.

கோபம் அவள் கண்களில் மட்டுந்தான் தோன்ற முடியுமென்ற நியதியில்லையென்பதை, கூரிய முனைகளுடன் நின்ற அவள் மார்புகளிரண்டுங்கூட எடுத்துக் காட்டின. அவள் கை நீட்டிய துப்பாக்கியின் முனையுமாகச் சேர்த்து மூன்று முனைகள் அந்த வாலிபனைக் கடுமையுடன் பார்க்கவே செய்தன. அத்தனையிலும் ஒரு பலவீனம் மட்டும் அவளிடமிருந்ததை ஒருகளித்த அவள் சிற்றிடை நிரூபித்தது. 'எனக்கு அத்தனை திராணியில்லை,' என்பதைக் கூறுவதுபோல், இடை துவண்டு ஒருகளித்து, கீழ்ப்பெரும் பகுதிகளை ஒருபுறமாக ஒதுக்கி விட்டதால் எந்த இளைப்பையும் அடுத்து பலம் தர மலைபோன்ற சக்திகள் வாழ்வில் உண்டு என்ற பெரிய தத்துவம் அவள் அழகிய உடலில் விளங்கிக் கொண்டிருந்தது.

இப்படி அலைந்த அவன் கண்களை நந்தினியும் பார்க்கவே செய்ததால், அவள் உக்கிரம் முன்னைவிட அதிகப்பட்டது. தவிர தன்னை அலசிப் பார்க்கு முன்பு அவன், "இது



சௌகரியம்,'' என்று சொன்ன வார்த்தைகளின் பொருள் என்ன என்று ஆராயவும் செய்தாள் அவள். 'நேராகத் திரும்பி விட்டால் என்னைப் பார்க்கச் சௌகரியமாயிருக்குமென்று சொல்கிறார், சே! வெட்கமின்றி சொல்கிறாரே இந்த ஆண்மகன்,' என்று தன்னைக் கேட்டுக்கொள்ளவும் செய்தாள் நந்தினி, வெட்கம் விஜயகுமாரனுக்குத்தானிருக்க வேண்டுமென்ற எண்ணத்தில். 'என்ன ஊடுருவும் கண்கள்! சேசே! ஆண் வர்க்கமும் ஒரு வர்க்கமா! அந்த விழிகளைத் தோண்டினாலென்ன?' என்று தன்னை மீண்டும் கேட்டுக் கொண்டாள் தஞ்சை மன்னன் மகள். 'அதிருக்கட்டும். அவர் பார்ப்பதை நான் ஏன் சகித்துக் கொள்ள வேண்டும்?' என்றும் கேட்டுக் கொண்டாள். அதற்குமேல் ஓடிய எண்ணங்களை நினைக்கவும் வெட்கம் கொண்டாளாகையால் நந்தினி தன் கைத்துப்பாக்கியின் குதிரையைச் சற்று அதிகமாகவே இழுத்து, ''இது சௌகரியம் என்று சொன்னீர்களே, என்ன சௌகரியம்?'' என்றாள்.

விஜயகுமாரன் இதழ்களில் இளநகை அளவுக்கு அதிகமாகவே விரிந்தது. ''இப்படி நான் இங்கே எதிராக நிற்பது,'' என்று மெள்ளக் கூறினான் அவன் முறுவலின் ஊடே.

''இதில் என்ன சௌகரியத்தைக் கண்டுவிட்டீர்கள்?'' குரலில் சீற்றத்தைக் கூட்டிக் கேட்டாள் நந்தினி.

''முன்பு நான் கண்ணாடியைப் பார்த்து நின்று கொண்டிருந்தேன்..'' என்றான் விஜயகுமாரன்.

''ஆம். அழகு பார்த்துக் கொண்டிருந்தீர்கள்,'' என்றாள் நந்தினி இகழ்ச்சியுடன்.

''ஆம்,'' என்று ஒப்புக் கொண்டான் விஜயகுமாரன்.

''என்ன ஆம்?''

''அழகு பார்த்துக் கொண்டிருந்தேன். அதாவது....''

''அதாவது?''

''பின்னால் தோன்றிய அழகைப் பார்த்துக் கொண்டிருந்தேன்.''

இதைக் கேட்ட நந்தினியின் முகம் கோபத்தில் அதிகமாகவே சிவந்தது. ''உங்களுடன் நான் விளையாட வரவில்லை,'' என்ற அவள் குரலிலும் கோபம் உச்சத்தில் தெரிந்தது.

''இல்லை.''

''என்ன இல்லை?''

''விளையாட வரவில்லை.''

''புரிந்து கொண்டீர்கள் அதை?''

''புரிந்து கொண்டேன், கைத்துப்பாக்கியைப் பார்த்ததும்.''

''அப்படியும் ஏன் திரும்பினீர்கள்?''

''முதுகில் சுடுவதைவிட..''

'அடுத்த வாரம் இரண்டு லிட்டருடன் அங்கு வருவேன்,' என்று என் மனோகரி எழுதியிருந்தாள். இரண்டு லிட்டர் கோதுமையா, அரிசியா என்று தெரியாமல் குழம்பித் தவித்தேன். மனோகரி வந்தவுடன்தான் விளங்கியது. அவளுடன் வந்து சேர்ந்தது அவளுடைய ஓர்ப்படி. (ஒரு படி—இரண்டு லிட்டர்.)



—டி. வி. ராஜு

---

என்று கூறிச் சற்று நிதானித்த விஜய குமாரன், அவள் மார்பைக் காட்டி, "இங்கு சுடுவது சௌகரியம். அதனால் தான் திரும்பினேன். இது சௌகரியம் என்றும் சொன்னேன்," என்று கூறினன்.

நந்தினி சுயநிலையை அறவே இழந்தாள். அடுத்த விநாடி அவன் இடது கை தன்னைச் சுற்றி வளைத்து விட்டதாலும், வலது கையும் வாளா விருக்காததாலும், தனது கையிலிருந்த கைத்துப்பாக்கியை நழுவ விட்டாள் நந்தினி. அந்தச் சமயத்தில் அவன் அவள் காதுக்கருகில் குனிந்து, "நந்தினி," என்று ரகசியமாக உதிர்த்த சொல்லும் பிறகு கழுத்தில் ஆழப் புதைத்துவிட்ட அவன் முரட்டு உதடுகளும் அவள் சுய உணர்வையெல்லாம் பறித்துக் கொண்டதால், "நந்தினி," என்று அவன் அழைப்பதற்குப் பதிலும் சொல்லவில்லை அவள்.

என்ன காரணத்தாலோ அவன் கைகள் அன்று அவளை அளவுக்கு அதிகமாக நெறித்தன. கழுத்தில் புதைந்த உதடுகள் மீண்டும் ஒரு கன்னத்திலும் புதைந்து விலகின. அவை அவள் உச்சியை நெருங்கி, "நந்தினி! நந்தினி!" என்று மீண்டும் இருமுறை அழைத்தன.

'உம்' என்று உம் மட்டும் கொட்டினள் நந்தினி உணர்ச்சிகளின் கொந்தளிப்பால். அந்த உம்முக்குக் காரணங்கூடப் புரியவில்லை அவளுக்கு.

ஆனால் அந்த 'உம்'மிலிருந்த குழைவு வீணையின் கமகம் போல் இழைந்து ஒலித்தது அவன் செவிகளில். ஆகவே அவளைத் தழுவி நின்ற நிலையிலேயே அவன் சொன்னன்: "நந்தினி! நீ கைத்துப்பாக்கியைக் கீழே போட்டிருக்கக்கூடாது."

"ஏன்?" அவள் கேள்வியில் ஆவேசமில்லை இப்பொழுது. ஆசை தானிருந்தது.

"இந்த நிலையில் என்னைச் சுட்டுவிட்டால் ஆனந்தத்துடன் இறப்பேன்," என்றான் விஜயகுமாரன்.

"உங்களைச் சுட என்னால் எப்படி முடியும்?" என்று வினவினாள் அவள் பெருமூச்சின் ஊடே.

"பின் எதற்காகக் கைத்துப்பாக்கியை நீட்டினாய்?"

"உங்களைத் தடை செய்ய."

"எதிலிருந்து?"

"என்னை விட்டு ஓடுவதிலிருந்து."

"யார் சொன்னது நான் ஓடப்போவதாக?"

அத்தனைத் துன்பத்திலும் அவள் இன்பமாக நகைத்தாள். அவன் பிடியிலிருந்து மெள்ள விலகி அவள் பஞ்சணையைப் பார்த்தாள். கையால் அங்கிருந்த மூட்டையைச் சுட்டிக்காட்டி, "இதற்கு என்ன அர்த்தம்?" என்று வினவினாள்.

விஜயகுமாரன் அவளை மீண்டும் ஒருமுறை வலிய அணைத்தான். பிறகு அவளை அழைத்துக்கொண்டு பஞ்சணையில் தனது மூட்டைக்குப் பக்கத்தில் உட்கார வைத்தான். அவள் எதிரே நின்று அவளை உற்றுப் பார்த்துவிட்டுச் சொன்னான்: "இந்தப் பயண மூட்டையைப் பார்த்துத் தவறாகப் புரிந்து கொண்டாய் நந்தினி."

அவள் அழகிய விழிகள் அவனை ஏறெடுத்து நோக்கின. "இந்த மூட்டை மட்டுமல்ல. உங்கள் அலங்காரமும் பயணத்திற்கு அத்தாட்சி கூட்டுகிறது," என்றாள் நந்தினி தனது பவள உதடுகளை அசைத்து.

"அதனால்?" என்று வினவினான் விஜயகுமாரன்.

"உங்களைத் தடுப்பது என் கடமையாயிற்று."

"என்ன கடமை அது?"

"ஒரு பெண்ணைத் தொட்டு விட்டுச் சொல்லாமல் கொள்ளாமல் ஓடும் வாலிபர்களைத் தடுப்பது ஒவ்வொரு பெண்ணின் கடமையாகும்."

இதற்குப் பிறகு இரண்டு விநாடிகள் சிந்தனையில் இறங்கினான் விஜயகுமாரன். "ஆமாம் நந்தினி! பயணமெல்லாம் ஓட்டமாகுமா!"

என்று வினவினான் முடிவில்.

"எதுவும் சந்தர்ப்பத்தைப் பொறுத்தது." என்று விளக்கினாள் நந்தினி.

"எந்தச் சந்தர்ப்பத்தைக் குறிக்கிறாய்?"

"இந்தச் சந்தர்ப்பம்தான்.. இப்பொழுது நடுநிசி."

"ஆம்."

"நீங்கள் என் தந்தை அறையிலிருந்து படை வீடு வந்த போது மிக வேகமாக வந்தீர்கள்."

"அதை நீ பார்த்தாயா?"

"பார்த்தேன், இந்தப் படை வீடுகளில் ஏற்படும் எந்த அசைவும் என் உப்பரிகை அறையிலிருந்து தெரியும்."

"அந்தப்புரம் வேவு பார்க்கும் அரங்கம் போலிருக்கிறது."

"அப்படி நினைத்துத்தான் எந்த அந்தப்புரத்திற்கும் காவல் போடப்படுகிறது."

"காவல் அதற்காக அல்ல நந்தினி."

"வேறு எதற்காக?" என்று கேட்டாள் நந்தினி மெல்ல நகைத்து.

விஜயகுமாரன் கண்களில் விஷமம் கொட்டியது. "பெண்களைப் பாதுகாப்பதற்கு."

"பெண்கள் நள்ளிரவில் ஓடிவிடுவார்களென்ற பயமா?" என்று கேட்டாள் அவளும் விஷமமாக.

"மாட்டார்கள். ஓடுபவர்களைத் தடுப்பார்கள்," என்றான் விஜயகுமாரன். அத்துடன் அவளை அணுகி பஞ்சணையில் அவள் பக்கத்திலும் அமர்ந்து கொண்டான். பிறகு இருவருமே நகைத்தார்கள்.

அந்தச் சிரிப்பு ஒரு விநாடிதான் நிலைத்தது. அடுத்த கணம் இருவருமே சிரிய எண்ணங்களுக்கு இலக்காயினர். "ஆம். எதற்காகத் தந்தை அறையிலிருந்து கோபத்துடன் வந்தீர்கள்? இங்கு வந்ததும் ஏன் மூட்டை கட்ட ஆரம்பித்தீர்கள்?" என்று வினவினாள் நந்தினி.

விஜயகுமாரன் அவளை அடுத்திருந்த தனது உடைப் பையின்மீது சார்த்தினான். அவள் அழகைப் பருகிக் கொண்டே சொன்னான் "நந்தினி!



## மாடியிலே நிற்கிற

ஜூன் மாதம் 8'ந் தேதி. ஒலிபெருக்கியில் "அம்மா! தாயே! அம்மா!" என்று அலறும் ஓசை கேட்டுப் போய்ப் பார்த்தபோது, டாக்ஸியில் ஒருவர் கைகளை வெளியே நீட்டியபடி, "அம்மா! தாயே! பெரியம்மா! உங்களைத்தானே! உதயசூரியன் மறந்துடாதீங்க அண்ணே! சைக்கிள்லே போற அண்ணே! குதிரை வண்டிலே போற அண்ணே! உங்களைத்தான், உதயசூரியனுக்குப் போடுங்க. உங்க கால்லே விழுந்து கேட்குறேன், உதயசூரியனை மறந்துடாதீங்க. கார்லே போற அண்ணே, மாடியிலே நிக்கற அம்மா, குழந்தையைத் தூக்கிட்டுப் போற - அக்கா எல்லோரும் உதயசூரியன், உதயசூரியனுக்கே ஓட்டுப்போடுங்க போடுங்க," என்று கெஞ்சிக் கொண்டே போனார்.

—சுப்புலட்சுமி ஜெகதீசன்

## அக்கா!

சுப்பிரமணிய சுவாமி தி. நகரில் தேர்தல் கூட்டம் ஒன்றில் ஆங்கிலத்தில் உரையாற்றினார். அப்போது ஒருவர் "நீங்கள் தமிழர்தானே! தமிழிலேயே பேசலாமே," என்றார்.

"நான் அதிக நாள் வடக்கேயும், மேல்நாட்டிலும் பேசியதால் தமிழ் சரியாகப் பேச வராது. நான் பேசும் தமிழைத் தமிழில் மொழிபெயர்க்க நேரிடும். அப்போது அதவும் பிடிக்காமல் நீங்கள் எல்லோரும் ஓடிப்போய் விடுவீர்கள். நீங்கள் ஜனதாவுக்கு தமிழ் நாட்டில் வெற்றி தேடிக்கொடுத்தால் நான் தமிழை நன்றாகக் கற்று நல்ல தமிழில் பேசுகிறேன்," என்றார் அவர்.

—சங்கரிபுத்திரன்

## ஓட்டுப் போடுங்க!

உன் தந்தையின் அரசியல் முடிவுகள் எனக்குப் பிடிக்கவில்லை.'' என்று.

''அதனால்?''

''நான் வேறிடத்துக்குப் போகிறேன்.''

''அங்குள்ள அரசியல் முடிவுகள் பிடிக்குமா உங்களுக்கு?''

''சொல்ல முடியாது. ஆனால் என் சபதம் நிறைவேற அங்குகிடைக்கும் பயிற்சி உதவும். அது மட்டுமல்ல, பின்னால் அது உன் தந்தைக்கும் உதவும்.''

''அப்பேர்ப்பட்ட இடம் எதுவோ?''

''ஸெய்ண்ட் டேவிட் கோட்டை.''

இதைக் கேட்டதும் துடித்து எழுந்தாள் நந்தினி. அவளை மீண்டும் உடைப் பையின் மீது சாய்த்த விஜய குமாரன் அவள்மீது தானும் லேசாகச் சாய்ந்தான். அந்த நிலையில் சொன்னான், ''இனி என் சபதம் நிறைவேற அங்குதானிருக்கிறது மருந்து.'' என்று.

நந்தினியின் அழகிய விழிகள் அவன் விழிகளை நன்றாகச் சந்தித்தன. அவள் கைகள் அவன் கழுத்தை வளைத்துத் தலையை எடுத்து மார்பு மீது சாய்த்துக்கொண்டன. ''என்னை விட்டுப் போகிறீர்கள்,'' என்ற அவள் முணுமுணுப்பில் வேதனை நிரம்பி நின்றது.

''ஆம். ஆனால் மீண்டும் திரும்பி வர. உன்னை நிரந்தரமாக என் சொத்தாக்கிக்கொள்ள,'' என்ற விஜய குமாரன் குரலிலும் சோகம் ததும்பி நின்றது.

''அப்படி என்ன மருந்து இருக்கிறது ஸெய்ண்ட் டேவிட் கோட்டையில்?'' என்று மெதுவாக வினவினாள் அவள்.

அவள் மார்பிலிருந்து முகத்தை நிமிர்த்திய விஜயகுமாரன் அவள் காதுக்கருகில் மருந்தின் பெயரைச் சொன்னான். அவன் சொற்களைக் கேட்ட அவள் அம்புஜ விழிகளில் வியப்பு மிதமிஞ்சி நின்றது. அந்த வியப்பைப் போக்கவோ என்னவோ அவன் உதடுகள் அந்தப் பங்கஜ விழிகளின் மீதும் மாறி மாறிப் பதிந்தன.

(தொடரும்)

---

### ...கழுதையைக் கத்த வைப்பதற்குள்...



சிவகாசியில் நடந்த பொருட்காட்சியில் மியூஸிக் டைரக்டர் இளையராஜா '16 வயதினிலே' படத்தில் கமலஹாசனும், ஸ்ரீதேவியும் பாடும் ஒரு பாடலைப் பாடி விட்டுக் கூறியதாவது: ''இப்பாடலின் இறுதியில் ஒரு கழுதையின் குரல் வந்தது. கேட்டீர்கள் அல்லவா? இந்தப் பாடல் ரிகார்டிங்கின்போது நாங்கள் ரொம்பவும் சிரமப் பட்டுவிட்டோம். இப்படத்தின் டைரக்டர் கழுதையின் குரலை எப்படியும் நீங்கள் தந்தே தீர வேண்டும் என்றுகூறி விட்டார். பிறகு என்ன செய்வது? 10 கழுதைகளைப் பிடித்துவந்து அதில் ஒன்றை 'பெஸ்ட் வாய்ஸ்' என்று செலக்ட் பண்ணி அதையே குரல் கொடுக்கக் கூறினோம். அது என்னடாவென்றால் பாதாள பைரவி, மிஸ்ஸியம்மா போன்ற பழைய படங்களின் போஸ்டர்களைத் தந்தால்தான் போச்சு என்று அடம் பிடிக்க ஆரம்பித்துவிட்டது. பிறகு என்ன செய்வது? கொடுத்து விட்டுக் சத்தச் சொன்னோம். இப்பொழுது உங்களுக்கு அந்தக் கழுதையைக் காட்டப்போகிறேன்.''

இவ்வாறு கூறிவிட்டு தன் குழுவிலுள்ள சுந்தர் என்பவரை, ''இவர் தான் அந்தக் கழுதைக் குரல் கொடுத்தவர்,'' என்று அறிமுகம் செய்து வைத்தார்.

கே. பரமானந்தம்

# சொல்கிறார்கள்

அவர்-ராஜ்நாராயண் அப்படிப் பேசியிருக்கக் கூடாது. அவர் சார்பில் நான் வருத்தம் தெரிவித்துக் கொள்கிறேன்.

—மொரார்ஜி தேசாய்

ஜெகஜீவன்ராமும் சரண்சிங்கும் வெறுப்புப் பிரசாரத்தில் இறங்கியுள்ளனர். தனி நபரின் மீது பழி சுமத்திப் பொய்யான இழிமொழிகளை மக்களிடையே பரப்புவதில் ஈடுபட்டுள்ளனர்.

—ஷேக் அப்துல்லா

பட்ஜெட்டில் பல நாராயண்கள் இருக்கிறார்கள். ஜெயப்பிரகாஷ் நாராயணின் கொள்கையும், ராஜ்நாராயணின் அரசியலும், ஸ்ரீமன் நாராயணின் பொருளாதாரமும் இருக்கின்றன.

—என். வி. காட்கில்

ஜனதா கட்சி முதலமைச்சர்கள் தேர்வில் ஜனசங்கம், பாரதீய லோக் தளம் ஆகியவை தங்களுக்குள் கோட்டா முறை வைத்துப் பிரித்துக் கொண்டன.

—ராம்தன்.

ஜனதா கட்சியின் முதல் பட்ஜெட் சுதந்திரா கட்சியின் பட்ஜெட் போல இருக்கிறது.

—சி. சுப்பிரமணியம்

பா. ராமச்சந்திரன் வெற்றி பெற்ற 6 சட்ட மன்றத் தொகுதிகளில் ஜனதா வேட்பாளர்கள் தோற்றுவிட்டார்கள். அமைச்சர் ராமச்சந்திரன் தன் எம்.பி. பதவியை ராஜினுமா செய்ய வேண்டியதுதானே?

—கயிலைமன்னன்.

வாக்காளர் பட்டியலில் காணப்பட்ட குறைபாடுகள் நிதி, வசதியின்மை, கட்சியின் கொடி, சின்னம் முதலியவை மக்களிடையே பரவாமை, பிரசாரத்துக்கு அவகாசம் போதாதது ஆகியவையே தமிழ் நாட்டில் ஜனதா தோல்வியுற்றதற்குக் காரணம்.

—பா. ராமச்சந்திரன்.

முன்பு வெளிநாடுகளில் இந்தியாவின் கௌரவம் மிக மோசமாக இருந்தது. இப்போது உயர்ந்துவிட்டது.

மொரார்ஜி தேசாய்.

ஏப்ரல் 13-ம் தேதியன்று டில்லி—டௌரா ஏர்கண்டிஷன் எக்ஸ்பிரஸ் ராஜ்நாராயண் வருகைக்காக 15 நிமிடம் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது. அதற்காக வருத்தம் தெரிவித்துக் கொள்கிறேன்.

—மது தந்தவாதே.

எந்தவிதக் கட்சித் தாவலையும் நான் விரும்பவில்லை. ஆனால் எதிர்க்கட்சிகள் அந்த அளவு தயாராயில்லை என்று தோன்றுகிறது.

—மொரார்ஜி தேசாய்.

ஜாதிவெறி அடிப்படையில் ஜனதா கட்சி மேலிடத் தலைவர்கள் சிலர் அரசியல் நடத்த ஆரம்பித்து விட்டனர்.

—ராம்தன்.

மத்திய அரசின் பட்ஜெட் நடுத்தர ஏழை மக்களைத் தண்டிப்பதாக உள்ளது. காங்கிரஸ் அரசின் சாதனைகளை ஈவு இரக்கமின்றி அழித்து விட்டது.

—கருப்பையா மூப்பனர்.

இந்திரா காந்தியுடனும், காங்கிரஸ் கட்சியுடனும் சேர்ந்து நான் சதி செய்வதாகக் கூறுவது சுத்தப் பொய்.

—சரண் சிங்.

இந்திரா காந்தியையும் அவர் குமாரரையும் கைது செய்திருந்தால் மக்களின் கோபத்தைத் தணிக்க அது உதவியாயிருக்கும். பலர் இப்பொழுதும் கோபமாகவே இருக்கிறார்கள். என்னுடைய கோபம் இப்போது கூடப் பூரணமாகத் தகர்ந்துவிடவில்லை.

—சரண் சிங்.

# ராஜ பேரிகை

## 7. காலத்தின் துரித நடை

உடலோடு உடல் இழைந்ததால் உலகை மறந்த நிலை; உணர்ச்சிகளின் சுழற்சியால் காதல் விசித்த வலை, இவை இரண்டையுமே விஜயகுமாரன் அவள் காதில் உதிர்த்த மந்திரச் சொல் சுதறிடித்து விடவே, அவள் விழிகளில் அவன் இதழ்கள் மாறி மாறிப் பதிந்தபோதுகூட அவன் பழைய மயக்கத்தின் வசப்படாமல் வியப்பின் வசமே சிக்கியதால் "அந்த மருந்தின் பெயரை இன்னொரு முறை சொல்லுங்களேன்," என்று மெள்ள வினவினான், சொர்க்கத்திலிருந்து சாதாரண நிலைக்குத் திரும்பி.

"க்ளேவ்," என்று மீண்டும் சொன்ன விஜயகுமாரன் அவள் மீது சாய்ந்த நிலையிலிருந்து மீண்டு அவள் பக்கத்தில் உட்கார்ந்து அவள் இடையைத் தனது இரு கைகளாலும் வளைத்தான்.

அவன் உடை மூட்டையில் சாய்ந்து படுத்த வண்ணம் அவனை நோக்கிய நந்தினி, "யார்? திருச்சி சாலைச் சத்திரத்தில் நமது உதவிக்கு வந்தானே அந்த வெள்ளைக்காரனா?" என்று வினவினாள் கண்களிலே விரிந்த வியப்பின் சாயை உதடுகளிலும் பரவ.

"ஆம், அவன்தான்," என்றான் விஜயகுமாரன், அவள் அழகைப் பருகிய வண்ணம்.

அவன் அப்படிப் பதில் கூறிய சமயத்திலும் அவன் கண்கள் மட்டும் தனது ஆடையையும் ஊடுருவிப் பார்ப்பது போன்ற பிரமை தஞ்சை மன்னன் மகளுக்கு ஏற்பட்டதால் அவள் முகத்தில் மீண்டும் நாணத்தின் சாயை படர்ந்தது. உடலின் கவர்ச்சி அம்சங்களை அவன் கண்களிலிருந்து மறைக்கவோ என்னவோ அவள் லேசாகத் திரும்பிப் படுத்தாள். அதனால் அவன் வேட்கை அதிகமாகவே செய்தது. திரும்பியதால் அவள் மார்பு அவன் கண்களிலிருந்து மறைந்தாலும் இடைக்கும் கீழே எழுந்த ஒருபுறத்து மலை அழகு அவன் இதயத்தைச் சிதைத்ததால் அவன் கையொன்று அதன்மீது தவழ்ந்தது. இதனால் நந்தினி நகைத்தாள். ஒரு கண் உடை மூட்டையில் பதிந்திருந்ததால் இன்னொரு கண்ணால் அவனைப் பார்க்கவும் செய்தாள். இரு கண்களின் பார்வையைவிட ஒரு கண்ணின் பக்கப் பார்வையின் வேகம் எத்தன்மையதென்பதைப் புரிந்து கொண்ட விஜயகுமாரன் இதயம் மிக வேகமாக அடித்துக் கொண்டதால் அந்த ஆபத்திலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ளக் கையை எடுத்துக் கொண்டான் அவன். படுக்கையிலிருந்து எழுந்து எட்ட நின்று கொள்ளவும் செய்தான்.

நின்ற நிலை படுத்த நிலையைவிட எந்த விதத்திலும் ஆதரவு அளிக்கவில்லை அந்த வாலிபனுக்கு. பஞ்சணையில் கிடந்த அந்த மோகன உருவத்தின் வளைந்த நிலையும் கண்ணைக் கவர்ந்த பல்வேறு அம்சங்களும் அவனை மீண்டும் வெறி பிடிக்கும் நிலைக்கு அழைத்துச் சென்று கொண்டிருந்தன. அதனால் அவன் அவளைப் பார்ப்பதை விட்டு அறையில் அங்குமிங்கும் உலாவினான் சில விநாடிகள். அந்த உலாவலால் சிறிது உணர்ச்சிகள் ஒரு கட்டுக்குள் அடங்கவே அவன் கனவில் பேசுவது போல் பேசினான். "ஆம், அவன்தான், நந்தினி! அந்த வெள்ளைக்கார வாலி

சாண்டில்யன்




பன்தான். அவன்தான் என் கவலைக்குத் தகுந்த மருந்து. அவன் சாதாரண மனிதனல்ல. ஏதோ பெரிய காரியத்தைச் சாதிக்கப் பிறந்தவன்." என்று கூறினான்.

நந்தினி படுக்கையில் எழுந்து உட்கார்ந்தாள். "ஏதோ சொப்பனத்தில் இருக்கிறீர்கள். தஞ்சை ராஜ்யம் அளிக்க முடியாத உதவியை அந்த வாலிபன் உங்களுக்கு எப்படி அளிக்க முடியும்?" என்று வினவினாள் குனிந்த தலை நிமிராமலே.

விஜயகுமாரன் உலாவலை நிறுத்தி அவளை உற்று நோக்கினான். குனிந்த நிலையிலும் அவள் அழகு அவன் கண்களைப் பறித்தது. உடை மூட்டையில் தலை உருண்டதால் தலையிலிருந்த மலர்ச்சரத்தில் பாதி மலர்கள் உதிர்ந்து சில இடங்களில் நார் மட்டும் தெரிந்தது. குழலும் கலைந்து விட்டது. கலைந்ததிலும், மலர்ச் சிதறலிலுங்கூட அழகு இரட்டிப்பாக முடியும் என்பதை அந்த நேரத்தில் புரிந்து கொண்டான் விஜய குமாரன். குனிந்த தலை அவள் கழுத்தின் வெளுப்பை எத்தனை மடங்கு அதிகமாக அறை வெளிச்சத்தில் காட்ட முடியும் என்ற ஆராய்ச்சியும் அவன் சித்தத்தில் சுழன்றது. மீண்டும் உணர்ச்சிப் பிரவாகத்தில் தான் இழுபடுவதைத் தவிர்க்க உரையாடலின் உதவியை நாடிய அந்த வாலிபன் சொன்னான்: "தஞ்சை ராஜ்யத்தின் உதவி தற்சமயம் மிகவும் பஞ்சை, பயனற்றது. உன் தந்தையின் உள்ளம் ஸதாரா அரசின் உதவியை, அதன் கத்தியைப் பயன்படுத்திக் கொள்ள மறுக்கிறது. இந்து அரசர்களுக்குள்ள வீண் கௌரவம் தஞ்சை அரசின் அஸ்திவாரத்தைத் தோண்டிக்



"மெட்டுக்காகப் பாட்டு எழுதுகி றீர்கா அல்லது பாட்டுக்காக மெட்டா?"

வானொலி பேட்டியில் கவிஞர் வாலி கூறிய பதில்: [illegible]'ம் பக்கம் —ப. சரஸ்வதி

கொண்டிருக்கிறது: ரகோஜி போன்ஸ்லாவும் முராரிராவும் உதவிக்கு வராவிட்டால் பல ஆண்டுகளுக்கு முன்பே தஞ்சை ராஜ்யம் மகாராஷ்டிரர் கைகளை விட்டுப் போயிருக்கும். அந்தப் படிப்பினையைக்கூட உன் தந்தை பயன்படுத்திக் கொள்ளவில்லை. இப்பொழுது மீண்டும் சந்தா சாகிப்பின் கை உயர்ந்துவிட்டது. அந்தக் கையை வலுப்படுத்த டூப்ளே கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறார். வெள்ளைக்காரரர் போர் முறை நமது பேரர் முறையை விடப் பல மடங்கு உயர்ந்தது என்பதை ப்ராடிஸ் என்ற பிரஞ்சு என்ஜினீயர் சென்னைக்கருகில் நடந்த அடையாற்றுப் போரில் நிரூபித்துவிட்டார். ஆகையால் அவர்கள் அணிவகுப்பு, படை நடத்தும் முறை, இவற்றை நாம் கற்றாலொழிய நமக்கு நாடு நிலைப்பது கஷ்டம்: அதை மானாஜி நன்றாயறிவார். ஆனால், அவர் இஷ்டப்படி இப்பொழுது தஞ்சையில் விவகாரங்கள் நடைபெறவில்லை. ஆகவே, தஞ்சை வெகு சீக்கிரம் எதிரிகளின் தாக்குதலுக்கு இலக்காகும்: சந்தா சாகிப்பின் படைகளையும், பிரஞ்சுப் படைகளையும் ஒரே சமயத்தில் சமாளிக்கும் அளவுக்குத் தஞ்சைக்குத் திராணியில்லை. வெளி உதவி அவசியம்: அதை உன் தந்தை ஏற்க மறுக்கிறார்.''

இப்படி விடுவிடு என்று உணர்ச்சியுடன் விஜயகுமாரன் பேசியதால் நந்தினியின் சித்தமும் அரசியலுக்குத் திரும்பவே அவளும் மெள்ளப் பஞ்சணையிலிருந்து எழுந்து நின்று அவனை நேருக்கு நேர் நோக்கினாள். ''தந்தையின் போக்கு உங்களுக்குப் பிடிக்கவில்லை?'' என்றும் கேட்டாள் சற்றுச் சினத்துடன்.

''ஆம்,'' என்றான் விஜயகுமாரன் திடத்துடன்.

''அவர் எத்தனை அபாயங்களைச் சமாளித்திருக்கிறார் தெரியுமா?''

''தெரியும்.''

''அவர் அனுபவம்...?''

''மிக அதிகம்.''

''உங்களைவிட அவருக்கு அனுபவம் அதிகம்.''

''மறுக்கவில்லை நான்.''

''அப்படியிருக்க நீங்கள் அவரிடம் நம்பிக்கை வைத்து இங்கேயே தங்கினால் என்ன? தஞ்சைப் படையில் இப்பொழுதுள்ள பதவியைத் தொடர்ந்து வகித்தாலென்ன?'' இந்தக் கேள்வியை நந்தினி மிக உக்கிரத்துடன் கே:டாள்.

விஜயகுமாரன் மூகம் சிந்தனைக் கடலாயிருந்தது. ஆனால் அக்கடலில் அலைகள் கொந்தளிக்கவில்லை. சேதுவைப் போல் நிச்சலமான தடாகம் போலிருந்தது. அந்த நிதானத்துடன் மெள்ளப் பதில் கூறத் தொடங்கிய விஜயகுமாரன் தனது இடது கையால் வலது கையைப் பிடித்துக்கொண்டான். ''நந்தினி! நான் எனது ஊரைவிட்டு வந்தது பதவி ஏற்க அல்ல. இந்த நாட்டைக் காப்பாற்றக்கூட அல்ல. எனது சபதமொன்றை அரங்கன் சந்நிதானத்தில் செய்ய, அதை நிறைவேற்ற. அந்த லட்சியத்துக்கு எந்த ராஜ்யம் இடம் கொடுக்கிறதோ அந்த ராஜ்யத்தில் நானிருப்பேன். எந்த இனம் அது நிறைவேற உதவுகிறதோ அந்த இனத்துடன் சேருவேன். எந்தப் பயிற்சி அதை நிறைவேற்றத் தேவையோ அந்தப்

பயிற்சியை மேற்கொள்வேன். எனக்கு மாட்ச்லாக்கால் சுடத் தெரியும், மகாராஷ்டிரர்களின் வளைவு வாளால் தலைகளைச் சீவத் தெரியும், புரவிப் படையை இயக்கத் தெரியும். வேலைக்கூடக் குறி தவறாமல் ஓடும் குதிரையிலிருந்து எறிவேன். இலக்குத் தவறாமல் அம்பெய்யவும் முடியும். ஆனால் தற்காலப் போர் முறைக்கு இவைமட்டும் போதா. படை அணிவகுப்பு முறைகளில் வெள்ளையர் சில புது முறைகளைக் கையாளுகிறார்கள். அதை நான் அறிய வேண்டும். அந்தப் பயிற்சி சுதேச மன்னர்கள்மீது எனக்கொரு புது உயர்வை அளிக்கும். அதைப் பெற நான் செய்ண்ட் டேவிட் கோட்டையை நாடிச் செல்கிறேன். அங்கு க்ளைவிடம் சேர்ந்து அந்தப் பயிற்சியை முழுதும் பெறுவேன். அப்படிப் பெற்று இங்கு திரும்புவேன் ஒருநாள். அந்த நாள் தஞ்சை ராஜ்யத்துக்குப் பொன்னாளாகும். எனக்கும் நன்னாளாகும். எனது சபதம் நிறைவேற அந்த நாளில் இந்தச் சோழ மண்டல மண்ணில் வித்திடுவேன்,'' என்று ஆவேசத்துடன் கூறினான் விஜயகுமாரன்.

''இந்தப் பயிற்சிக்கு க்ளைவை ஏன் தேர்ந்தெடுத்தீர்கள்? பிரெஞ்சுக்காரர் உதவாதா?''

''உதவாது. அவர்கள் தஞ்சை மண்டலத்தின் விரோதிகள்.''

''பிரிட்டிஷார்?''

''தற்சமயம் அவர்களுடன் நாம் சமாதான ஒப்பந்தம் செய்து கொண்டிருக்கிறோம். தவிர க்ளைவ் மகா வீரன்.''

திரும்பத் திரும்ப அவன் க்ளைவைப் பற்றிச் சொன்னது அவளுக்கு எரிச்சலாக இருந்தது. ''க்ளைவ் என்ன மந்திரவாதியா இந்த மாநிலத்தை மாற்றிப் படைக்க?'' என்றாள்.

''இல்லை. தந்திரவாதி. தவிர அவன் கண்களில் சதா ஒரு கனவு இருக்கிறது,'' என்றான் விஜயகுமாரன்.

''பகற்கனவா?'' அவள் குரலில் கேலியும் கோபமும் இருந்தன.

விஜயகுமாரன் இதழ்களில் இளநகை அரும்பியது அவள் சினத்தைப் பார்த்து. ''கனவு அர்த்தமற்றதல்ல அரச குமாரி. வாழ்க்கையே கனவென்று தத்துவம் இருக்கிறது. ஆனால் வாழ்க்கை அர்த்தமற்றதாக ஆகவில்லையே. நீயும்




எங்கள் அலுவலகத்தில் வேலை பார்க்கும் ஒருவரை எல்லோரும் 'வெல்டர்' என அழைக்கிறார்கள். ஆனால் வெல்டிங் வேலைக்கும் அவருக்கும் சம்பந்தமே கிடையாது.

ஒரு நண்பர் ரகசியமாய் விளக்கினார்: ''நம்மைப் பற்றி யாரிடமாவது பற்ற வைப்பதே இவர் வேலை. அதனால்தான் 'வெல்டர்' என்று அழைக்கிறார்கள்.''

—'விஜேன்.'

---

நானும் வருங்கால வாழ்க்கை பற்றிக் கனவு காண்கிறோம். அது அர்த்தமற்றதா? பயனற்றதா? கனவு காண்பவன் காரியங்களைச் சாதிக்கிறான். என் மனத்தில் ஏதோ ஒன்று சொல்கிறது, க்ளைவின் கனவுடன் என் சபதமும் சம்பந்தப்பட்டிருக்கிறதென்று. ஆகவே அவனை நாடி நான் செல்கிறேன்; ஆனால்...''

''ஆனால்?''

''திரும்பவும் வருவேன் உன்னை அழைத்துச் செல்ல,'' என்று கூறிய விஜயகுமாரன் அவளை நெருங்கி இரு தோள்களையும் பிடித்தான். அத்துடன் கேட்கவும் செய்தான், ''நந்தினி, என்னுடன் வடக்கு வாசல் வரையில் வருவாயா?'' என்று.

''எதற்கு? நம்மிருவர் உறவையும் பறைசாற்றவா?'' என்று வினவிப் புன்னகை பூத்தாள் அவள்.

''இல்லை. அதை இனிமேல் பறைசாற்றத் தேவையில்லை.''



சீனிவாச சாஸ்திரி ஹாலில் உஸ்தாத் அகமத்கான் அவர்களின் சிதார் இசை நிகழ்ச்சி நடைபெற்றது.

பிரதான விருந்தினர் டாக்டர் பாலமுரளி கிருஷ்ணுவுடன் அவரது இரு மனைவியரும் வந்திருந்தனர். இரண்டாவது மனைவி ரொம்பவும் சிம்பிளாக வந்திருந்தார். வலது கையில் ஒரே ஒரு வளையல்.

விழாவிற்கு பி. பி. ஸ்ரீனிவாசும் வந்திருந்தார். பி. பி. எஸ். சட்டைப் பையில் ஏழெட்டு பேனுக்கள் செருகிக் கொண்டிருந்தார். கையில் ஒரு நோட்டுப் புத்தகத்தை வைத்துக்கொண்டு ஏதேதோ கணக்குப் போட்டுக் கொண்டிருந்தார். பாலமுரளி அவரை வரவேற்றுப் பேசியிருந்தும் கடைசிவரை இருக்காமல் பாதிக் கச்சேரியில் புறப்பட்டுவிட்டார்.

—பிரபுசங்கர்

''ஏன்? உலகமறிந்த கதை போலிருக்கிறது?'' என்றுள் அரசகுமாரி.

''ஆம்.''

''அப்படியானுல் நான் வருவானேன்?''

''நான் வெளியில் செல்ல உதவியாயிருக்கும். தவிர தஞ்சை ராஜ பேரிகை சப்திக்கும், அரசகுலத்தவளான நீ வருவதால்.''

''ராஜபேரிகை முழக்கமா?''

''ஆம்.''

''நான் உங்களே வெளியே அனுப்புவது தந்தைக்குத் தெரிய வேண்டுமா?''

''அதுவும் ஒரு காரணம். அந்தப் பேரிகை ஒலியைக் காதில் வாங்க ஆசைப்படுவதும் ஒரு காரணம்.''

''எதற்கு அந்த ஆசை?''

''ராஜபேரிகை பின்னுல் ஒரு காலத்தில் ஒலிக்கும்.''

''எப்பொழுது?''

''என் சபதம் நிறைவேறும் போது.''

''அதற்காக?''

''அந்த ஒலி இப்பொழுது என் காதில் மட்டுமல்ல இதயத்திலும் விழும். அந்த வேகம் என் சிந்தனையை இலக்கை விட்டுத் தடம் புரளாதிருக்கச் செய்யும்.'' இதை மிகுந்த உணர்ச்சியுடன் சொன்னுன் விஜயகுமாரன்.

அவள் பதிலேதும் சொல்லவில்லை. தனது தலைப்பை எடுத்து முக்காடு போட்டுக் கொண்டாள். விஜயகுமாரன் தனது உடை மூட்டையை எடுத்துக்கொள்ள அவனைத் தொடர்ந்தாள் அரசகுமாரி.

வடக்கு வாசலை அரசகுமாரி அடைந்ததும் ராஜபேரிகை தடதடவென முழங்கியது. அந்த முழக்க அடிகள்—அல்ல, இடிகள்—அரசகுமாரியின் இதயத்தைத் தாக்கினுலும் அதை அவள் வெளிக்குக் காட்டிக் கொள்ளவில்லை. புரவியின் முதுகின் மீதிருந்த அவள் கையை அவன் பிடித்தபோது அவள் கண்கள் அவனை நோக்கித் திரும்பின. கண்களில் ஏதோ யோசனை பிறந்தது. சட்டென்று கையை எடுத்துக்கொண்டு அவள் தனது தலைச் சுட்டியை எடுத்து அவன் கையில் திணித்துவிட்டு விலகி நின்றுள். சுட்டியை ஒருமுறை விளக்கொளியில் பார்த்த விஜயகுமாரன் அதைத் தனது கச்சையில் பத்திரப்படுத்திக் கொண்டான். பிறகு புரவி மீது திடீரெனத் தாவி ஏறி அதைச் செல்லவிட்டான் மெதுவாக.

புரவியின் நடையில் அசைய அசைய மிகக் கம்பீரமாகச் சென்ற விஜயகுமாரனின் வீர உருவத்தைப் பார்த்துக் கொண்டே நீண்ட நேரம் நின்றுள் நந்தினி. அவள் கண்களில் நீர் திரளவில்லை, இதயத்தில் திரண்ட காரணத்தால்.

(தொடரும்)

நேரம் என்னப்பா பண்ணீங்க? மணி மூணுச்சே!'' என்று பதறினான்.

அவனோடு சேர்ந்து கமலமும் காத்திருந்தாள். ''நீங்க போன் பண்ண திலேருந்து அவனுக்கு இருப்பே கொள் ளலே, பாவம்!''

சட்டையைக் கழற்றி, சன்னல் கதவில் மாட்டிக் கொண்டே துரைசாமி சொன்னார். ''வர வழியிலே உமாவையும் மாப்பிள்ளையையும் பார்த் தேனே.''

மகள் பேச்சை எடுத்ததுமே கமலத்தின் முகம் மலர்ந்துவிட்டது: ''நல்லாயிருக்காளா உமா? மாப்பிள்ளே எப்படியிருக்கார்? பார்த்து ரொம்ப நாளாச்சு...''

''உமா ரொம்ப சௌக்கியமா இருக்கா. மாப்பிள்ளே போன வாரந்தான் புது ஸ்கூட்டர் வாங்கியிருக்கார். ஜம்முன்னு ரெண்டு பேரும் சினிமாவுக்கு வந்தாங்க.''

''பாபுவைப் பார்த்தீங்களா?''

''ஓ! கண் பட்டுடும் போலிருக்கான்! என்ன ஜோரா குலாப் ஜாமுன் தின்னான், தெரியுமா!''

''ஓட்டலுக்குப் போனீங்களா?''

''ஆமா. மாப்பிள்ளேக்கும் உமாவுக்கும் மனசார டிபன் வாங்கிக் கொடுத்தேன். பேரனுக்குப் பொம்மை வாங்கிக் கொடுத்தேன்!''—துரைசாமிக் குப் பெருமை பிடிபடவில்லே.

''ஆச்சரியமாயிருக்கே!''

வாசு குறுக்கே புகுந்தான். ''காலேஜுக்கு நேரமாச்சப்பா.''

அவர் தயங்கியபடி சொன்னார். ''இல்லே வாசு, முப்பது ருபா செலவாயிட்டுது. உன் புரோக்ராமைக் கான்சல் பண்ணிட வேண்டியது தான்.''

வாசுவின் முகம் சுருங்கியது.

''வருத்தப்படாதே, வாசு. எனக்கு மகன் மட்டுமில்லே; ஒரு மருமகனும் இருக்கார். மகன் என்கிற முறையிலே உனக்கு எவ்வளவோ செய்திருக்கேன்; இன்னும் செய்வேன். ஆனா, மருமகன் என்கிற முறையிலே அவருக்குத் தகுந்தாப் போல இதுவரை எதுவுமே செய்ய முடிஞ்சதில்லே. அவரும் வாய் திறந்து கேட்டதில்லே. ஏதோ, கடவுள் கிருபையிலே இன்னிக்குக் கையிலே பணமிருந்தது. மாப்பிள்ளேக்கு முன்னாலே மாமனாரா நடந்துக்கிட்டேன்.''

''போங்கப்பா. இவ்வளவு கஷ்டப்பட்டு, அலேஞ்சு பணம் வாங்கியும் உபயோகமில்லாமப் பண்ணிட்டீங்களே!''

''ஒரு தகப்பன் மனசு உனக்குப் புரியுதோ இல்லேயோ, ஒரு மாமனாரின் மனசு நிச்சயம் புரியலே, வாசு. நம்ம வீட்டுப் பெண்ணே அழைத்துக் கொண்டு போய்த் தன் வீட்டு ராணியாய் வாழ வைக்கிற ஒருத்தருக்கு நாம் எவ்வளவு கடமைப்பட்டிருக்கோம்னு சிந்திச்சுப் பாரு. அடுத்த வருஷம் நீ எக்ஸ்கர்ஷன் போகலாம்,'' என்ற துரைசாமி, தம் மகள், பேரன், மாப்பிள்ளையைப் பற்றி மறுபடி கமலத்திடம் பேசத் தொடங்கிவிட்டார்.

கமலமும் மகனின் விஷயத்தை மறந்து போனவளாக, ஆர்வத்தோடு கேட்கத் தொடங்கினாள்.

அது மாமனார்—மாமியார் உலகம்! வாசுவுக்கு அங்கே வேலே யில்லே; அவன் சோர்வாக வெளியே நடந்தான்.

1+2+3+4+5+6+7+8+9+10

**16'ம் பக்க விடை:**

**எப்படி அவ்வளவு சீக்கிரம் கூட்டினான்?**

**''முதலில் வரும் ஒன்றும் கடைசியில் வரும் பத்தும் சேர்ந்தால் பதினொன்று. இரண்டாவதாக வரும் இரண்டும், கடைசிக்கு முன்னாடி உள்ள ஒன்பதும் சேர்ந்தால் பதினொன்று. இந்த மாதிரி 5 ஜோடிகள் இருக்கின்றன. ஐந்து பதினொன்று 55,'' என்றான் குழந்தை.**




## ४. சந்திப்பு

காலம் அத்தனை துரித நடை போடும். கர்நாடகத்தின் சரித்திரம் அத்தனை சீக்கிரம் மாறும் என்பதை அரச குமாரி நந்தினி என்ன, அவளைப் பிரிந்து சென்ற விஜயகுமாரனும் அந்த இரவில் உணரவில்லை: அரசகுமாரி அரண்மனையின் வடக்கு வாயிலுக்கு வந்ததால் ஒலித்த ராஜ பேரிகையின் சத்தம் மட்டும் டமடம வென பலமாக அவர்கள் காதுகளில் விழுந்தாலும் அந்தப் பேரிகை சப்தத்திலும் ஒரு துரிதமிருப்பதை அவர்கள் இருவருமே கவனிக்கவுமில்லை, உணரவுமில்லை, உணர்ச்சிகள் தங்கள் சொந்த ஆசாபாசங்களில் லயித்திருந்த காரணத்தால். அவன் புரவி கண்ணுக்கு மறையுமட்டும் அவன் செல்வதைப் பார்த்துக் கொண்டே நின்ற அரச குமாரி, திரும்பவும் அந்தப்புரத்துக்குச் சென்று பஞ்சணையில் துன்பத்தோடு விழுந்தபோது, அவள் மார்புகூட வேகமாக அடித்துக் கொண்டது காலம் வேகமாக ஓடப் போகிறது என்பதை அறி



வுறுத்த! வாலிபனை விஜயகுமாரனின் புரவி கூடக் காற்றுவேகத்தில் பறந்து சென்றது. தஞ்சையின் நெடுஞ் சாலையை அடைந்த பின்பு குளம்புகள் தரையில் பாவுவது கூடத் தெரியாமல் அம்புபோல் அது பாய்ந்து சென்ற வேகத்தில் தன்னை மறந்த விஜயகுமாரனை, காலம் மறக்காமல் இரண்டாவது நாளே ஸெயிண்ட் டேவிட் கோட்டையின் அருகே கொண்டு சேர்த்திருந்தாலும், தான் தேடி வந்த கிளைவ் அங்கில்லை என்பதையும் சென்னைக்குச் சென்றுவிட்டானென்பதையும் அறிந்ததால் மீண்டும் தனது பயணத்தைத் துவங்கினான் விஜயகுமாரன். அப்படிப் பயணத்தைத் துவக்கியபோது பழைய உடைகளை மாற்றிக்கொண்டு வாணிப வேடம் பூண்டு கிளம்பினான், வழியில் பிரெஞ்சுப் படைகள் நடமாட்டம் அதிகமாயிருக்கிறதென்று ஸெயிண்ட் டேவிட் கோட்டையில் கிடைத்த செய்தியின் விளைவாக. புரவிக்கு இருபுறத்திலும் தொங்கவிட்ட தோற்பைகளுக்குள் பல விற்பனைப் பொருள்களை வாங்கி அடைத்துக்கொண்டும், தனது வாளைப் பல துணிகளில் சுற்றிப் புரவியின் வயிற்றில் லேசாகக் கட்டி மறைத்தும், கைத்துப்பாக்கியை மட்டும் அங்கிக்குள்ளிருந்த பையில் போட்டுக்கொண்டும் ஸெயிண்ட் ஜார்ஜ் கோட்டையை நோக்கி விரைந்தான்.

ஸெயிண்ட் டேவிட் கோட்டையில் கிடைத்த எச்சரிக்கை சரியானதென்பதை வழியில் பல இடங்களில் கண்ட விஜயகுமாரன் எந்த வினாடியிலும் ஸெயிண்ட் டேவிட் கோட்டையோ தஞ்சைக் கோட்டையோ தாக்கப்படலாமென்பதை உணர்ந்தான். எங்கும் பெரும் படைகள் நடமாட்டம் மிக அதிகமாயிருந்தது. புதுச்சேரியை அணுகாமல் அதன் எல்லைக் கிராமங்களில் அவன் புகுந்து சென்றபோதும் கூட ஆங்காங்கு பலமான பாதுகாப்பு இருந்ததை அவன் கவனித்தான். அவன் உணவோ, சிற்றுண்டியோ அருந்தத் தங்கிய விடுதிகளில்கூடப் படையெடுப்புப் பேச்சே அதிகமாயிருந்ததால், அதைப் பற்றி மேலும் தகவல் அறியப் புதுவையிலிருந்து அரை காத தூரத்துக்கு அப்பாலிருந்த சாலைச் சத்திரமொன்றில் அடுத்த நாள் இரவு வேண்டுமென்றே தங்கினான். பழங்காலத்து மன்னர்கள் கட்டி

வைத்த சத்திரமாதலால் அங்கு எந்த விதமான சௌகரியத்துக்கும் குறை வில்லாததால், தனது புரவியை லாயத் தில் கட்டிவிட்டு நீராடிப் புத்தாடை அணிந்து உணவருந்தச் சத்திரத்துக் கூடத்தின் ஒரு மூலையில் உட்கார்ந் திருந்தான். சத்திரம் முழுவதிலும் சாதாரண மக்களைவிடப் போர்வீரர் களே அதிகமாயிருந்ததால் அவன் உணவருந்திய சமயத்திலும் பேச்சு போரைப் பற்றியதாகவே இருந்தது. கூடத்தின் மத்தியில் உட்கார்ந்திருந்த இஸ்லாமிய வீரனொருவன் சற்று அதிகமாகக் குடித்துவிட்டிருந்த காரணத்தால், "நம்ம நவாப் பத்து நாளில் கிளம்பறான். ஒழிந்தான் தஞ்சாவூர் ராஜா!" என்று கூறிவிட்டுப் பெரிதாக நகைத்தான்.

"அரே! நவாப் தனியாகப் போகலே. அந்தப் பிரெஞ்சுக்காரனும் வர்ரான்," என்றான் இன்னொரு இஸ்லாமிய வீரன்.

அவர்களில் குடிக்காத ஒருவன் எச்சரித்தான். "பிரெஞ்சுப் படைத் தலைவர் அதுவின்லே அவமரியாதையாகப் பேசாதே," என்று

"அதுவில் நவாபா?" என்றான் முதல் வீரன்.

"நவாபின் அள். நவாப் சம்பளம் கொடுக்கிறானில்லே?" என்றான் இரண்டாமவன்.

இந்த வழியில் சம்பாஷணை முற்றவே விஜயகுமாரன் அவசரமாக உணவருந்திக் கையலம்பி அவர்களிருந்த இடத்துக்கு வந்து, "அதுவின் எப்பொழுது கிளம்புகிறார் தஞ்சைக்கு?" என்று அவர்கள் சம்பாஷணையில் கலந்து கொண்டான்.

அவன் வந்துங்கூட முதல் இரு இஸ்லாம் சிப்பாய்களும் பேச்சை நிறுத்தவில்லை. குடிக்காத மூன்றாவது வீரன் மட்டும் கேட்டான். "எப்பொழுது கிளம்பினால் உனக்கென்ன?" என்று.

"நானும் அவருடன் பேச வேண்டும்," என்று கூறினான் விஜயகுமாரன் முகத்தில் கவலையைக் காட்டி.

"நீ சிப்பாயா?" என்று கேட்ட அந்த வீரன், விஜயகுமாரனின் உடையைச் சந்தேகத்துடன் பார்த்தான்.

"இல்லை. அவர் ஒற்றன்."

"வணிகன் மாதிரி இருக்கிறாய்....?"

# ரகசியம்



"ஒற்றர்கள் பல வேஷங்களைப் போடுகிறார்கள்."

"அச்சா!" என்று கூறியவன் ஏதோ நினைத்துக் கொண்டு, "ஆனால் சரி வா. அவரிடம் அழைத்துப் போகிறேன்," என்று கூறியபடி சரேலென்று தனது கைத்துப்பாக்கியை எடுத்து விஜயகுமாரனின் மார்பை நோக்கி நீட்டினான்.

"இதற்கென்ன அர்த்தம்?" என்று சீறினான் விஜயகுமாரன்.

"சொல்கிறேன். இப்படி வா," என்ற அந்த வீரன், விஜயகுமாரன் மார்புக்கு எதிரில் கைத்துப்பாக்கியைக் குறி வைத்துக்கொண்டே கூடத்தின் பவர்விளக்கு தொங்கிக் கொண்டிருந்த இடத்துக்கு வந்து, "இப்பொழுது என்னை நன்றாகப் பார்," என்றான்.

அவனைப் பார்த்த விஜயகுமாரன் கண்கள் பிரமிப்பைக் காட்டாவிட்டாலும் உள்ளத்தில் வியப்பு மிக மிஞ்சி நின்றது. "உன்னை எங்கோ பார்த்த மாதிரி இருக்கிறது," என்று சொன்னான்.

"நன்றாக நினைவுபடுத்திப் பார்," என்று கூறி பயங்கரமாக நகைத்தான் அந்த இஸ்லாமிய வீரன்.

சிந்தனைக்குத் தேவையில்லாவிருந்தாலும் சிந்தனைக்குறியை முகத்தில் காட்டிய விஜயகுமாரன், சில விநாடிகளுக்குப் பிறகு, "இந்த ஏழை தங்களை எங்கு பார்த்திருக்கப் போகிறான்?" என்று வினவினான்.

சிவாஜிக்கும் கமலஹாசனுக்கும் ஓர் ஒற்றுமை உண்டு. 'நிரபராதி' படத்தில் முக்கமாலாவிற்குக் குரல் கொடுத்தவர் சிவாஜி. 'சுடரும் சூறாவளியும்' படத்தில் சந்திரமோகனுக்குக் குரல் கொடுத்தவர் கமல். 'இந்தத் தகவலை நினைவு படுத்திச் சொன்னவர் குகநாதன். கமலிடம் இந்தச் செய்தியைச் சொன்னபோது அவர் காதோடு காதாக இதுபற்றி மேலும் ஒரு நியூஸ் சொன்னார்: அப்பாடி— அதை மட்டும் சொல்லக்கூடாது!



சுஜாதாவிற்குத் திருமணமான அடுத்த நாளே 'துணையிருப்பாள் மீனாட்சி' படத்துக்காக தெருவில் பிச்சையெடுக்கவேண்டிய சீன் ஒன்றில் நடித்தார். அடையாறில் ஒரு சந்தடியில்லாத தெருவில் அவர் பிச்சை யெடுத்தார். ''சுஜாதா இன்னும் சற்று நேரத்தில் உங்கள் வீட்டுக்குப் பிச்சையெடுக்க வருவார்'' என்று முன் கூட்டியே சொல்லி வைத்திருந்தார்கள். ஒரு கிழிசல் புடவையைக் கட்டிக்கொண்டு பல வீடுகளில் பிச்சை யெடுத்தாராம்.

— —ராதா

---

''உன் மூளை வேலை செய்யவில்லை.'' என்றான் இஸ்லாமிய வீரன்.

''தங்கள் மூளை வேலை செய்கிறது போலிருக்கிறது?''

''ஆம். அதனால்தான் உன்னை யாரென்று கண்டுபிடித்தேன்.''

''யார்?''

''ஒற்றன்.''

''அதை நானே கூறிவிட்டேனே?''

''கூறியதில் ஒரு தவறு இருக்கிறது.''

''என்னவோ?''

''நீ ஒற்றன்தான். ஆனால் பிரெஞ்சு ஒற்றனல்ல. பிரிட்டிஷ் ஒற்றன்,'' என்று கூறிய அந்த வீரன், ''இந்த ஏழை இப்ராஹீமை நீ இதற்குள் மறந்திருக்கமாட்டாயென்று நினைக்கிறேன்,'' என்று கூறி நகைத்தான். ''அன்று நீ அந்த பிரிட்டிஷ்காரனுடனும் ஒரு பெண்ணுடனும் வந்தாய். அந்தப் பெண் நல்ல அழகாயிருந்தாள். அவள் எங்கே?'' என்றும் ஏளனமாகக் கேட்டான்.

விஜயகுமாரன் மனத்தில் மெள்ள இகில் உதயமாயிற்று. சந்தா சாகேபின் வலது கரமான இப்ராஹீமை அத்தனை நாள் கழித்துப் புதுவைக் கருகில் சந்திக்க முடியும் என்பதை அவன் சொப்பனத்தில்கூட நினைக்கவில்லை. சமயபுரத்திலிருந்து தப்பி யோடியபொழுது தஞ்சைச் சாலை சத்திரத்தில் பல நாட்களுக்கு முன்பு சந்தித்த இப்ராஹீம் தன்னை அத்தனை நினைவு வைத்துக் கொண்டிருக்கிறான் என்பதும் விஜயகுமாரனுக்கு வியப்பாயிருந்தது. ஆனால் அது எதையும் வெளிக்குக் காட்டாமல் ''நவாப் அவர்களின் வலது கை போன்ற வீரரை இன்று சந்திக்கும் பாக்கியம் பெற்றது எனது அதிர்ஷ்டம்.'' என்றான்.

''இல்லை. அதிர்ஷ்டமில்லை.'' இப்ராஹீமின் சொற்கள் இகழ்ச்சியுடன் வெளிவந்தன.

''ஏன்?''

''உயிரிழப்பது துரதிருஷ்டமல்லவா?'' என்ற இப்ராஹீம் சரேலென்று கைத்துப்பாக்கியின் குதிரையை இழுத்துவிட்டான்.

அப்படி வேகமாகவும் வெகு அருகாமையிலும் குதிரையை இழுத்தும் அவன் துப்பாக்கி ரவை விஜயகுமாரன் இதயத்தில் பாயவில்லை. இப்ராஹீமின் நோக்கத்தை உணர்ந்திருந்த விஜயகுமாரன் சரேலென அவன் கையைப் பிடித்து உயரத் தூக்கி விட்டபடியால் அடுத்து வந்த இரு ரவைகளும் மேலே இருந்த பவர் விளக்கில் பாய்ந்து சிம்னியை உடைத்து விடவே கூடத்தில் அந்தகாரம் சூழ்ந்தது. அடுத்த வினாடி இரும்புக் குண்டுபோல் இப்ராஹீமின் கழுத்தில் பாய்ந்தது விஜயகுமாரனின் முஷ்டி. இப்ராஹீமைக் குடை சாய்த்து விடவே அவன் பின்னாலிருந்த இரு ஜடிகாரர்கள்மீது விழுந்தான். விழும்போது, ''பிடியுங்கள் அவனை;

# கண்ணில்லாதவர்களுக்குக்

## கைக் கடிகாரம்

பெங்களூர் எச்.எம்.டி. வாட்ச் தொழிற்சாலை பார்வை யில்லாதவர்களுக்கு விசேஷ கைக்கடியாரம் தயாரித்திருக்கிறது. முதல் பாட்சில் சுமார் 175 வாட்ச் செய்திருக்கிறது. பார்வையில்லாதவர்கள் பக்கத்திலிருப்பவர்களிடம் நேரம் கேட்காமல் அவர்களே டயலைத் தடவிப் பார்த்து நேரம் தெரிந்துக் கொள்ளலாம். வாட்ச் வாங்க விரும்புபவர்கள் டாக்டரின் சான்றிதழுடன் விண்ணப்பிக்க வேண்டும். பார்வையிழந்தவர்களுக்காகத் தயாராகும் முதல் வாட்ச் இந்தியா விலேயே இதுதான்.

—எஸ். நடராஜ்

தப்ப விடாதீர்கள்,'' என்றும் இரைந்தான்.

அவன் கூச்சலால் ஏற்பட்ட குழப்பத்தில் அங்குமிங்கும் குடிவெறியில் தள்ளாடி ஓட முயன்ற வீரர்கள் மத்தியில் புகுந்து சத்திரத்துப் பின்கட்டு வழியாகத் தப்பிய விஜயகுமாரன், லாயத்திலிருந்து தனது புரவியை அவிழ்த்துக் கொண்டு வெகு வேகமாக அதன் மீது பாய்ந்து வெளியிலிருந்த பெருஞ்சாலையில் காற்றெனப் பறந்து சென்றான். குடித்திருந்த வீரர்கள் வேகத்துடன் தன்னைத் தொடர முடியாதென்று நினைத்தான். ஆனால் எங்கிருந்தோ பீரிட்ட பெரும் பிகிலின் ஓசை பக்கத்துத் தோப்புக்களிலிருந்த பல வீரர்களைக் கிளப்பி விட்டபடியால் அவனைப் பிடிக்க புரவி வீரர்கள் பலர் வேகமாக விரைந்தனர்.. பின்னாலிருந்த பல துப்பாக்கிகளும் தன்னை நோக்கிச் சந்திப்பதை அறிந்த விஜயகுமாரன் அங்கிக்குள்ளிருந்த தனது கைத்துப்பாக்கியையும் எடுத்துப் பின்னால் தன்னைத் துரத்தி வந்த புரவி வீரரைக் குறி பார்த்துச் சுட்டான். அந்தச் சுடுகையில் ஒரே வீரன் மாண்டாலும் மற்றும் பலர் துரத்துவதை உணர்ந்ததால் விஜயகுமாரன் தான் சிறைப்படுவது நிச்சயம் என்றே நம்பினான். அந்த நம்பிக்கையின் விளைவாகவும் சிறைப்பட்ட சில வினாடிகளில் இப்ரஹிம் தன்னைத் தீர்த்துக் கட்டி விடுவான் என்ற எண்ணத்தாலும், தனது புரவியைச் சாலையை விட்டுக் குறுக்கு வழியொன்றில் இறக்கி விரைந்தான்.

எதிரிகளிடமிருந்து குண்டுகள் அவனை நோக்கிச் சீறி வந்தன. அவனும் மீண்டும் பவுடரையும், ரவைகளையும் பொருத்தித் திரும்பச் சுட்டுக் கொண்டே புரவியைப் பறக்க விட்டான். அப்படி பறக்க விட்டவன் சற்றுத் தூரத்தில் ஒரு விளக்கொளி தெரிவதைக் கண்டு புரவியைச் செலுத்தினான்.

விளக்கு தெரிந்த இடம் அவனை விரைந்து அணுகி வந்தது. அவன் புரவியும் அந்த இடத்தின் வேலியை ஒரே தாவில் தாவி உள்ளேயிருந்த தோப்பை ஊடுருவி அதன் மரத்திலிருந்த பங்களாவை நோக்கி விரைந்தது. அந்தப் பங்களாவுக்கு முன்பு தனது புரவியை நிறுத்திக் கீழே குதித்த விஜயகுமாரன் திரும்பித் தான் வந்த சாலையை நோக்கினான். எதிரிப் புரவிகள் எதையும் காணோம், புரவி லகானை அதன் முதுகில் எறிந்துவிட்டு பங்களாவின் கதவைத் தட்டினான். கதவும் மெல்லத் திறந்தது. திறந்த கதவின் மூலம் ஒருவன் தள்ளாடித் தள்ளாடி மயக்கத்துடன் வெளியே நடந்து வந்தான். "ஹூ யூ?....நீ....யார்? தும் கோன்?'' என்று மூன்று மொழிகளால் வார்த்தைகளைக் குளறிக்கொட்டி திடீரென அவன்மீது சாய்ந்துவிட்டான்.

அவனைத் தாங்கிப் பிடித்த விஜயகுமாரன், 'வந்த இடத்தில் இதென்னடா இழவு,' என்று உள்ளூரச் சபித்துக் கொண்டே அந்த மனிதனைத் திடமாகப் பிடித்தான் விழாமல். அந்த மனிதன் உடம்பு தணலாகக் கொதித்துக் கொண்டிருந்தது. மெள்ள அவனை பங்களாவுக்குள் அழைத்துச் சென்ற விஜயகுமாரன் பங்களா கூடத்திலிருந்து மஞ்சத்தில் கிடத்தினான். அப்படிக் கிடத்தியபோது, கூடத்தின் விளக்கு அந்த மனிதன் முகத்தில் நன்றாக விழவே திக்பிரமைக்கு உள்ளானான் வீரனான விஜயகுமாரன். மஞ்சத்தில் கிடந்தவன் கிளைவ்!

(தொடரும்)



## 9. காதலுக்கும் கண் உண்டு,

எந்த மனிதனைக் காணத் தஞ்சையைவிட்டு, காதலித்த வஞ்சியையும் துறந்து வந்தானோ, அந்த மனிதனை அந்த நிலையில், சென்னைக்கு வெகு தூரத்துக்கு முன்பே சந்திக்கப் போகிறோம் என்ற நினைப்பு சிறிதளவும் இல்லாததால், அந்தப் பங்களாவின் கூடத்தின் பவர் விளக்கின் வெளிச்சத்தில் அவன் முகத்தைக் கண்டதும் பெரும் பிரமிப்புக்கே உள்ளானான் விஜயகுமாரன். மஞ்சத்தில் தன் கண் முன்னால் கண்களை மூடிப் படுத்துக் கிடந்த அந்த முகத்தில் அழகு அதிகமில்லையானாலும் வீரக்களை சுடர்விட்டதைக் கண்ட விஜயகுமாரன், 'உறங்கினாலும் மயங்கினாலும் விழித்திருந்தாலும் வீரன் வீரன்தான்' என்று உள்ளூரச் சொல்லிக் கொண்டு மஞ்சத்தின் பக்கத்தில் மண்டியிட்டு உட்கார்ந்து அந்த வெள்ளை வாலிபனின் நெற்றியின்மீது தனது கையை வைத்துப் பார்த்தான். அளவுக்கு மீறிய சுரம் அந்த வாலிபனை வாட்டிக்கொண்டிருப்பதையும் தானாக நிர்ணயித்துக் கொண்ட விஜயகுமாரன் தானிருந்த நிலையையும் மறந்து, "யாரங்கே! பாத்திரத்தில் சிறிது சுடுநீர் கொண்டு வா," என்று இரைந்து உத்தரவிட்டு, கிளைவின் அங்கியையும் பிரித்துவிட்டு இதய வேகத்தையும் பரிசோதித்தான். பிறகு நாடியைப் பார்த்துத் தானாகத் தலையை ஆட்டிக் கொண்டு தனது தலைப்பாகையினை அவிழ்த்துத் துணியின் ஒரு பக்கத்தால் கிளைவின் முகத்தில் துளிர்த்திருந்த வியர்வைத் துளிகளைத் துடைத்தான். அதற்குள் ஒரு பாத்திரத்தில் சுடுநீர் அவனிடம் நீட்டப்பட்டதால், அதை யார் நீட்டுகிறார்களென்பதை அறியத் தலையைத் திருப்பாமலே தனது தலைப்பாகைத் துணியின் மற்றொரு பாகத்தை அந்தச் சுடுநீரில் தோய்த்துத் தனது நண்பனின் முகத்தில் இதமாக ஒற்றி ஒற்றித் துடைத்தான்.

பாத்திரத்தைப் பக்கவாட்டில் ஏந்தியவன், "சுரத்தை இறக்கப் பனிக்கட்டி அல்லது குளிர் நீரைத்தான் தலையில் உபயோகிக்க வேண்டும். சுடுநீரை உபயோகிக்கக் கூடாது," என்று ஆங்கிலத்தில் மொழிந்தான்.

# ராஜ பேரிகை

"எங்கள் வைத்தியம் வேறு: உஷ்ணம் உஷ்ணேன சாம்யதே, அதாவது உஷ்ணத்தை உஷ்ணத்தால் குணப்படுத்த வேண்டும் என்பது ஆயுர்வேதம்," என்று விஜயகுமாரன் தலை

யைத் திருப்பாமலே கூறிவிட்டு, சிகிச்சையைத் தொடர்ந்தான்.

அப்புறமோ இப்புறமோ திரும்பாமல், நண்பன் அவஸ்தையிலிருக்கிறான் என்ற ஓர் எண்ணத்தைத் தவிர வேறு எண்ணாமல், துணியை வெந்நீரில் பிழிந்து கிளைவின் நெற்றியிலும் கன்னிலும் பலமுறை ஒற்றி எடுத்து அவனது வயிற்றையும் விஜயகுமாரன் லேசாக அழுத்திக் கொடுத்தான். பிறகு அவன் கச்சையிலிருந்த கைத்துப்பாக்கியை எடுத்துக் கீழே வைத்துவிட்டுக் கச்சையைத் தளர்த்திவிட்டான். கிளைவின் சட்டைப் பையிலிருந்த பெரிய சிமிழ் ஒன்றையும் அவன் எடுக்க முயன்றபோதுதான் மயங்கியிருந்தவன் கை அவன் கையைப் பிடித்துத் தேக்கியது. "அது அங்கேயே இருக்கட்டும்," என்று கண்களை மூடியிருந்தாலும் உதடுகளை அசைத்துக் கூறினான் வியாதியஸ்தன். பிறகு மெள்ள விழிகளை விரித்து அரை மயக்கத்தில், தன் முகத்தை நோக்கியிருந்த விஜயகுமாரன் முகத்தைக் கவனித்தான். மீண்டும் அவன் கண்கள் மூடி முகத்தில் சிந்தனை ஓடுவதற்கான சாயை நன்றாகத் தெரிந்தது. நெற்றி ஒருமுறை சுருங்கி மீண்டது. மறுமுறை விழித்த கண்களில் தெளிவு இருந்தது. பழைய ஒளியும் பளிச்சிட்டது. "யார்? நீயா!" என்ற சொற்களும் சற்றுத் தடிப்புடனும் சந்துஷ்டியுடனும் சுரக்காரன் வாயிலிருந்து உதிர்ந்தது.

தன்னை இன்னாரென்று கிளைவ் புரிந்து கொண்டு விட்டதை உணர்ந்ததால் முகத்தில் ஏற்கனவே இருந்த கவலையுடன் மகிழ்ச்சியையும் படரவிட்டுக் கொண்ட விஜயகுமாரன், "ஆம், நான்தான்! நீங்கள் இங்கு எப்பொழுது வந்தீர்கள்? எதற்காக வந்தீர்கள்? அருகில் பிரெஞ்சுப்படை இருப்பது உங்களுக்குத் தெரியுமா?" என்று மெதுவாகக் கேள்விகளை உதிர்த்தான்.

கிளைவ் அத்தனை சுரத்திலும் தனது இதழ்களில் புன்முறுவலைப் படரவிட்டுக் கொண்டான். "தெரியும், ஆனால் அவர்கள் இந்தப் பங்களாவிலிருந்து இரண்டு பர்லாங்கு தள்ளியே இருப்பார்கள்," என்று கூறிவிட்டு லேசாக ஏதோ சிந்தித்து மீண்டும் வினவினான். "ஆம், நீ எப்பொழுது இங்கு வந்தாய்? எதற்காக இங்கு வந்தாய்?" என்றும் கேட்டான்.

பதில் சொல்லத் துவங்கிய விஜயகுமாரன், "நீங்கள் . . . ." என்று ஏதோ ஆரம்பிக்கவே தனது கையை உயர்த்தி அவன் பேச்சைத் தடுத்த பிரிட்டிஷ் லெப்டினன்ட், "நீ என்று சொன்னாலே போதும். நண்பர்களுக்குள் மரியாதை அவசியமில்லை," என்று கண்டித்துச் சொன்னான்.

விஜயகுமாரன் வியப்பு மிதமிஞ்சியது. வெள்ளைக்காரனான கிளைவ் தமிழ்மொழியை நன்றாகப் பேசக் கற்றுக் கொண்டுவிட்டதையும், ஆங்கிலமும் தமிழும் கலந்த பழைய மணிப்பிரவாளம் அவனிடமிருந்து மறைந்து விட்டதையும் கண்டதால் வியப்புடன் சந்துஷ்டியையும் அடைந்து, "முன்னைவிடத் தமிழை நன்றாகப் பேசுகிறாய்," என்று சிலாகிக்கவும் செய்தான்.

"ஹிந்துஸ்தானிகூட நன்றாகப் பேசுவேன். அதையும் பழகிக் கொண்டிருக்கிறேன்," என்று கிளைவ் பதில் சொல்லிவிட்டுத் தலையைச் சிறிது திருப்பி, "நீங்கள் போகலாம்," என்று கூறிவிட்டு, "எட்மண்ட், நீ கூடப் போ. கீப் தி வெஸல் ஆன் தி ப்ளோர்," என்று உத்தரவிட்டான். அதற்குப் பிறகே அந்த அறையில் மேலும் பலர் இருப்பதையும் பக்கத்தில் வந்த சுடு நீர்ப் பாத்திரத்தை அலாவுதீன் அற்புத விளக்குக் கொண்டு வரவில்லையென்பதையும் உணர்ந்த விஜயகுமாரன் தனது பார்வையை அக்கம் பக்கத்தில் திருப்பினான். சுமார் பத்துப் பதினைந்து வெள்ளைக்காரர்கள் அந்தக் கூடத்தில் நின்றிருப்பதையும், தனது பக்கத்திலும் கிளைவின் வயதுக்கு ஈடான வயதுடைய ஒரு வாலிபன் பாத்திரமேந்தி நிற்பதையும் கண்ட விஜயகுமாரன் பாத்திரமேந்தி நிற்பவனை நோக்கி, "உங்கள் பெயர் எட்மண்டா?" என்று வினவினான்.

அந்த வாலிபன் கையிலிருந்த சுடுநீர்ப் பாத்திரத்தைக் கீழே வைத்து விட்டு, "தட்ஸ் ரைட்," என்று கூறியதன்றிச் சிறிது புன்முறுவலும் காட்டினான்.

"தென் யூ மஸ்ட் பி தட் எட்மன்ட் மாஸ்கலீன்," என்று விஜயகுமாரன் ஆங்கிலத்தில் கூறினான்.

இதற்குமேல் எட்மண்ட் ஏதும் பேசாவிட்டாலும் அவன் முகத்தில் ஆச்சரிய ரேகை படர்ந்தது. "உங்களுக்கு எப்படி என்னைத் தெரியும்?" என்று தமிழில் வினவினான்.

''சில நாட்களுக்கு முன்பு திருச்சிக்கருகில் கிளைவ் தனது சுயசரிதையை சொன்னார். அது தவிர கிளைவுக்கு ஒரு நெருங்கிய நண்பன் உண்டு. அவர் பெயர் எட்மண்ட் மாஸ்கலீன் என்று பலரிடம் கேள்விப்பட்டிருக்கிறேன். ஒரு மனிதன் பெயர் பிரசித்தமாகும்போது அவன் நண்பர்கள் பெயரும் சேர்ந்து அடிபடுகிறது. ஆகவே...'' என்று இழுத்தான் விஜயகுமாரன்.

''ஆகவே?''

''என் பெயரும் உங்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும். நான் தான் விஜயகுமாரன்.''

இதைக் கேட்ட எட்மண்ட் ஸ்தம்பித்து நின்றான். பிறகு விஜயகுமாரனின் இரு கைகளையும் பிடித்துக் கொண்டு, ''எனது நண்பனின் உயிரைக் காப்பாற்றியவர்,'' என்றும் கூறினான். நன்றி குரலில் நன்றாக ஒலிக்க. பிறகு எட்மண்ட், பாத்திரத்தைத் தரையில் வைத்துவிட்டு அவ்விடத்தைவிட்டு நகரவே மற்ற வெள்ளையரும் கூடத்திலிருந்து வெளியேறினர். கூடத்தில் இரு நண்பர்கள் மட்டும் தனித்து விடப்பட்டார்கள். எனினும் இருவரும் நீண்ட நேரம் பேசவில்லை. அந்த மௌனத்தைக் கடைசியில் விஜயகுமாரனே கலைத்து. ''கிளைவ்! இதென்ன சுரம். வாட் இஸ் தி ரீஸன் ஃபார் திஸ். இதற்கு என்ன காரணம்?'' என்று ஆங்கிலமும் தமிழுமாகக் கலந்து விளாசினான்.

கிளைவின் கண்களும் சிரிப்பைக் கக்கின. ''இது ஒரு புதுமாதிரி சுரம். இதற்குக் காரணம் எங்கள் வைத்தியர்களுக்குத் தெரியவில்லை. இந்த ஊர் சுரம் மாதிரி தெரிகிறது,'' என்றான் புன் முறுவலை உதட்டில் காட்டி.

''எப்படி வருகிறது?''

''முதலில் வயிற்று வலி வருகிறது; தாங்க முடியவில்லை; பிறகு சுரம் வருகிறது.''

''அதற்கு வைத்தியம்?''

''கொஞ்சம் அபின் சாப்பிடுகிறேன். வயிற்று வலி அடங்க.''

''உம்.''

''பிறகு மயக்கத்தில் படுத்து விடுகிறேன். மயக்கம் வலியை, என் உலகத்தை, சுரத்தை, சகலத்தையும் மறக்க அடிக்கிறது.'' இதைச்சொன்ன கிளைவ் லேசாக நகைத்தான்.

விஜயகுமாரன் முகத்தில் கோபம் மிதமிஞ்சி உதயமாயிற்று. ''வலியை அடக்க அபினி சாப்பிட்டால் உடம்பு குட்டிச்சுவராகப் போய்விடும்.'' என்று கடுமையுடன் இரையவும் செய்தான்.

கிளைவ் தனது கையொன்றால் விஜயகுமாரன் கையைப் பற்றிக் கொண்டான். ''ப்ரண்ட்! உனக்கு அந்த வலி எத்தனை கடுமையானதென்பது தெரியாது,'' என்று பரிதாபத்துடன் சொன்னான்.

''ஒரு கொடுமையை இன்னொரு கொடுமையால் அழிக்க முயலுவது அறிவீனம்,'' என்று கடுமையுடன் சொன்ன விஜயகுமாரன், ''உன் சுரம் ச்லேஷ்ம சுரம். அதற்கு ஆயுர்வேதத்






இங்கிலாந்து நாட்டு துரித ரயில்கள் புறப்பட்ட இடத்திலிருந்து சில குறிப்பிட்ட நகர்களில் மட்டும் நிற்கக் கூடியவை. ஆகவே ரயில்கள் ஓடிக்கொண்டிருக்கும்போதே டிக்கெட் பரிசோதகர்கள் டிக்கெட்டை பரிசோதித்து, பிறகு தங்கள் பாக்கெட்டில் போட்டுக் கொண்டுவிடுகின்றார்கள். ஸ்டேஷனை விட்டு பிரயாணிகள் வெளியே செல்லும்போது காலதாமதம் ஏற்படுவதைத் தவிர்க்கவே ரயிலிலேயே அவற்றைப் பெற்றுக் கொண்டு விடுகின்றனர். பிரயாணிகள் வண்டியை விட்டு இறங்கி நேராக ஸ்டேஷனை விட்டு வெளியே சென்றுவிடலாம்.

—பி. நாராயணன்.

---

தில் மருந்திருக்கிறது; ஆனால் இந்த அபினி சாப்பிடுவதை விட்டால்தான் உன்னைக் குணப்படுத்த முடியும்,'' என்று விளக்கினான். ''சரி! இந்தப் பங்களாவில் ஏன் தங்கியிருக்கிறாய்? எங்கே போகிறாய்?'' என்று மீண்டும் கேட்டான்.

''திருச்சிக் கோட்டைக்கு உணவுப் பொருள் கொண்டு போகிறேன். விஜயகுமாரா! இப்பொழுது கிளைவ் சோல்ஜரல்ல, ஒரு வியாபாரி; அது தெரியுமா உனக்கு?'' என்று வினவினான் கிளைவ்.

''வியாபாரியா! நீயா!'' நம்பிக்கை அறவே இல்லாத குரலில் கேட்டான் விஜயகுமாரன்.

''உனக்கு வியப்பாயிருக்கலாம்; ஆனால் கவர்னர் ப்ளாயருக்கு வியப்பாயில்லை. தேவிக்கோட்டையை நான் பிடித்த பிறகு இந்த உத்தியோகத்தைத்தான் கொடுத்தார் எக்ஸலன்ஸி; ஆனால் இதில் நல்ல லாபமிருக்கிறது; பணம் நிறையச் சேர்த்திருக்கிறேன்,'' என்று கிளைவ் இகழ்ச்சி கலந்த நகைப்பை உதிரவிட்டுக் கூறினான்.

''பணத்தால் என்ன லாபம்?'' என்று எரிச்சலுடன் கேட்டான் விஜயகுமாரன்.

''பணத்தால் எதையும் வாங்கலாம்; சந்தா சாகிப் பிரெஞ்சுக்காரரை விலைக்கு வாங்கியிருக்கிறார்; பிரிட்டிஷ்காரரை விலைக்கு வாங்க முகம்மது அலி முயல்கிறார். இப்பொழுது கர்நாடக அரசியலே வியாபாரமாக மாறியிருக்கிறது. ஒன்று தெரியுமா உனக்கு? இந்த உணவுப் பொருள்களை நான் திருச்சியில் சேர்த்ததும் முகம்மது அலி எனக்கு மட்டும் ஆயிரம் பகோடா கொடுப்பார்,'' என்று கூறி மீண்டும் நகைத்தான்.

விஜயகுமாரன் அந்தச் சிரிப்பில் கலந்து கொள்ளவில்லை. ''திருச்சிக்கு நானும் வருகிறேன். முதலில் உன் உடல் நலத்தைக் கவனிப்போம்; பிறகு மற்ற விஷயங்களைக் கவனிப்போம்,'' என்ற விஜயகுமாரன், ''உன் ஷர்ட் பையிலிருக்கும் சிமிழை எடுத்துக் கொடு,'' என்று கையை நீட்டினான்.

கிளைவ் ஒரு விநாடி சிந்தித்தான்; பிறகு கேட்டான். ''அது எதற்கு உனக்கு?'' என்று.

''அதிலிருக்கிற அபினியைக் குப்பையில் கொட்ட,'' என்று சீறினான் விஜயகுமாரன்.

''அதில் அபின் இல்லை,'' என்றான் க்ளைவ்.

''வேறென்ன இருக்கிறது?''

''அதைவிடப் பெரிய மயக்கப் பொருள்.''

''அப்படியானால் அதை நான் அவசியம் பார்த்தாக வேண்டும்.''

''பார்க்கலாம்; ஆனால் ஒரு நிபந்தனை.''

''என்ன நிபந்தனையோ?''

''அதை எட்மண்டிடம் காட்டக் கூடாது. அது என்னிடமிருப்பதாக அவனுக்குத் தெரியவும் கூடாது.''

''ஏன்?''

கிளைவ் மிக விசித்திரமான பதிலைச் சொன்னான் சிறிது தயக்கத்திற்குப் பிறகு. ''அது எட்மண்டுக்குச் சொந்தம். நான் திருடினேன்,'' என்று கூறினான்.

விஜயகுமாரன் முகத்தில் வியப்பு விரிந்தது. ஆனால் கிளைவ் பையில் கையை விட்டுக் கொணர்ந்த வஸ்துவைப் பார்த்ததும் அவன் வியப்பு அதிகமாகியது. அது வெறும் சிமிழல்ல. லாக்கெட்டைப் பிரித்தான். அதற்குள் இருபாகங்களிலும் தீட்டப்பட்டிருந்தன இரு ஓவியங்கள். இரண்டும் ஒரு வெள்ளை அழகியின் உருவங்கள். வெவ்வேறு நிலையில் இருந்தன; அந்த அழகி



இரண்டு பேரிடமும் 'ஸ்ரீ' இருக்கிறது. இரண்டு பேரிடமும் 'சிரி' இல்லை.

படம்: நல்லதுக்கு காலமில்லை' ஸ்ரீப்ரியா ஸ்ரீகாந்த்.

விஜயகுமாரனைப் பார்த்துச் சிரித்தாள் படத்திலிருந்து. விஜயகுமாரன் வியப்பு எல்லை கடந்தது. "இவள்...." என்று துவங்கினான் மெள்ள.

"என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டவள். எட்மண்டின் சகோதரி. பெயர் மார்கரெட் மங்கலின்," என்ற சொற்கள் கிளைவின் உதடுகளிலிருந்து மிக மிருதுவாக உதிர்ந்தன.

விஜயகுமாரன் பதில் கூறவில்லை. வியப்பு நிரம்பிய விழிகளைக் கிளைவ் மீது திருப்பினான். "ஏன்? கிளைவுக்குக்கூடக் காதலா என்று திகைக்கிறாயா விஜயகுமாரா? அந்த விபரீதம் கூட என் வாழ்க்கையில் ஏற்பட்டுவிட்டது," என்று கூறினான் கிளைவ். "விஜயகுமாரா! இந்த லாக்கெட்டை சென்னையில் தன் மேஜையின் மீது போட்டிருந்தான் எட்மண்ட். பிரித்துப் பார்த்தேன். இவள் என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டாள். ஆகவே லாக்கெட்டை நான் கொள்ளையடித்தேன். ஒரு கொள்ளை இன்னொரு கொள்ளையைச் சரிப்படுத்திவிட்டது. 'யூ ஸி. லவ் ஈஸ் நாட் ப்ளைண்ட். இட் ஹாஸ் ஐஸ்—' பார்த்தாயா! காதலுக்குக் கண்ணில்லையென்பது பொருத்தமில்லை. கண் இருக்கிறது. இல்லா விட்டால் இது என் கண்ணில்படுமா?"

(தொடரும்)

# ஹார்லிக்ஸ்

## உங்களுக்கு முக்கியமாக தேவைப்படும சமயத்தில் இன்றியமையாத ஊட்டச் சக்தியை அளிக்கிறது








**கருவுற்றிருக்கும் சமயத்தில்**

கருவுற்ற பெண்களுக்கு நன்கு சமச்சீருள்ள, எளிதில் ஜீரணமாகக் கூடிய உணவு அவசியம் தேவை. அதனால்தான், கருவுற்ற சமய்த்தில் ஹார்லிக்ஸ் முக்கியமாக தேவைப்படுகிறது. ஹார்லிக்ஸ் தாய்க்கும், சேய்க்கும் உடல் வளர்க்கும் புரதங்களையும், கார்போஹைட்ரேட்டுக்களையும் சரியான அளவில் அளிக்கிறது. இரவில் ஹார்லிக்ஸ் அருந்தினால் அது மலச்சிக்கலை தவிர்த்து, காலை வேளையில் ஏற்படும் குமட்டலையும் தடுக்கிறது.

**நோய் வாய்ப்பட்டு தேறிவரும் சமயத்தில்**

நீங்கள் நோய் வாய்ப்படும் பொழுது, உங்கள் உடல் அரும்பொருளான புரதத்தையும் சத்துப் பொருட்களையும் இழக்கிறது. இதனால் பலவீனம் ஏற்படுகிறது. இந்த இழப்பை ஈடுசெய்ய ஹார்லிக்ஸ் திசுக்களை வளர்க்கும் புரதங்களையும், சக்தியளிக்கும் கார்போஹைட்ரேட்டுகள், கனிஜங்களையும் எளிதாக ஜீரணிக்கும் வகையில் அளித்து, உடலை வேகமாக தேறிவரச் செய்கிறது. நோயை எதிர்க்கும் சக்தியை வளர்த்து, மீண்டும் நோய் வராமல் பாதுகாக்கிறது.

உலகமெங்கிலும் டாக்டர்களால் சிபாரிசு செய்யப்படுவது

## முழுமையான ஊட்டம்பெற-ஹார்லிக்ஸ்

ஹார்லிக்ஸ் ஒரு பதிவுபெற்ற ட்ரேட் மார்க்.

## 1750

அந்த இரவில் கிளைவும் சரி விஜயகுமாரனும் சரி, இருவருமே உறங்கவில்லை. தமிழகத்தின் நவீன வரலாற்றில் பங்கு கொண்டு விதிவசத்தால் அங்கேயே ஆழ்ந்துவிட்ட இருவரும், தஞ்சையிலிருந்து தாங்கள் பிரிந்துவிட்ட பிறகு ஏற்பட்ட நிகழ்ச்சிகளைப் பற்றிப் பேசி மகிழ்ந்து கொண்டே காலத்தைக் கழித்தார்கள். அந்த உரையாடலின் விளைவாக கிளைவ் தனது வயிற்று வலியையும் சரவேகத்தையுங்கூட ஓரளவு மறந்தான். விஜயகுமாரன் கையிலிருந்த லாக்கெட்டை வாங்கி மீண்டும் பையில் திணித்துக் கொண்டான். மறுநாட் காலை கிளைவின் ஜுரம் ஓரளவு இறங்கியிருந்ததால் இரு நண்பர்களும் அந்தப் பங்களாவுக்குப் பின்னாலிருந்த மாந்தோப்பில் உலாவவும் சென்றார்கள். அந்த உலாவலின் போதுதான் கிளைவ் மெள்ள விஜயகுமாரன் பிரெஞ்சுக்காரர்களிடம் சிக்கிய காரணத்தை விசாரிக்கத் துவங்கி, ''விஜயகுமாரா! நீ எதற்காக இந்தப் பக்கம் வந்தாய்? யாரைப் பார்க்க?'' என்று கேட்டான்.

''உன்னைப் பார்க்கத்தான் வந்தேன் கிளைவ். இந்தப் பக்கமாக வந்தால் சென்னையை எளிதில் அடையலாம் என்று நினைத்தேன். மாறுவேடத்திலிருந்ததால் என்னை யாரும் கண்டு பிடிக்க மாட்டார்களென்றும் எண்ணினேன். மூன்றும் தவறிவிட்டது.'' என்று விஜயகுமாரன் பதிலிறுத்தான்.

''இரண்டுதானே சொன்னாய். மூன்று என்கிறாயே?'' என்று வினவினான் கிளைவ், பக்கத்திலிருந்து ஒரு மாமரத்தின் கிளையிலிருந்த இலையில் ஒன்றைப் பிய்த்துக் கொண்டு.

''மூன்று இருக்கிறது.''

''எப்படி? ஒன்று, சென்னையை எளிதில் அடைய இப்புறம் வந்தது. இரண்டு, மாறுவேடம் பூண்டது. மூன்றாவது உன்னைச் சென்னையில் சந்திக்கப் போவதாக நினைத்தது.'' என்று கூறிய விஜயகுமாரன், ''கிளைவ்! எல்லாமே கதை போலிருக்கிறது,'' என்று வாசகத்தை முடித்தான்.

''அந்த எல்லாமேயில் இன்னும் ஏதோ தொக்கி நிற்பதுபோல் தெரிகிறது,'' என்று கூறினான் கிளைவ்.

''ஆம். உன் காதல் விஷயம்,'' என்ற விஜயகுமாரன் புன்சிரிப்புக் கொண்டான்.

''அதில் என்ன புதுமை இருக்க முடியும்? நான் காதல் புரியக்கூடாதா? அதற்குண்டான வயது எனக்கில்லையா?'' என்று கேட்ட கிளைவும் புன்முறுவல் கொண்டான்.

விஜயகுமாரன் சிந்தனையில் இறங்கினான். பிறகு கூறினான் நிதானமாக: ''கிளைவ்! உன் வாழ்க்கையில் காதலுக்குப் பிரதான இடம் இருக்குமென்று எனக்குத் தோன்றவில்லை, காரணம் கேட்காதே. உன் பார்வையில் கனவு இருக்கிறது. ஆனால் அது காதல் கனவு அல்ல. அதைவிடப் பெரிய மகத்தான சாதனை எதையோ உன் உள்ளம் எதிர்பார்ப்பதாகக் கண்கள் சதா சொல்கின்றன.''

இதைக் கேட்ட கிளைவின் கண்களும் கனவில் இறங்கின. ''யூ ஆர் ரைட். மார்க்கரெட் மாஸ்கலீனிடம் என் இதயம் பெரிதும் பறி போயிருக்கிறது. ஆனால் அதையும் அழித்துக் கொண்டு டூப்ளேயின் உருவம் அடிக்கடி என் மனத்தில் தோன்றுகிறது. டூப்ளேயையும் பிரெஞ்சுக்காரரையும் அடக்காவிட்டால் என் மனத்தில் சாந்தி இருக்காது போல் தோன்றுகிறது,'' என்று சுற்றிலுமிருந்த மரங்களின்மீது கண்களை ஓட்டிக்கொண்டே சொன்னான்.

அவன் சொற்களிலிருந்த வெறியையும் வேகத்தையும் கண்ட விஜயகுமாரன் தன் மனத்திலும் அத்தகைய வெறியொன்று வேரூன்றியிருப்ப



**சாண்டில்யன்**

2-8-1.77

தையும், அது டுப்ளேயைப் பற்றியில்லாவிட்டாலும் வேறொரு மனிதனைப் பற்றியதென்பதையும் எண்ணியதால், தங்கள் இருவருக்குமுள்ள ஒற்றுமையை எண்ணிப் பார்த்தான். "இவன் காதலை பிரெஞ்சு பலம் மறைக்கிறது. எனது காதலைப் பழி வாங்கு படலம் மறைக்கிறது" என்று தனக்குள் கூறிக்கொண்டான்.

இத்தகைய யோசனை கிளைவின் புத்தியிலும் ஓடிக்கொண்டிருந்ததால் இருவரும் சிறிது நேரம் ஏதும் பேசாமலே தோட்டத்தில் உலாவினர்கள். பிறகு அந்தச் சிந்தனையைக் கலைத்துக் கொண்டு க்ளைவ் வினவினான், "என்னை எதற்காகப் பார்க்கக் கிளம்பினாய்?" என்று.

"உன்னிடம் சிப்பாயாகச் சேர்ந்து போர்ப் பயிற்சி பெற," என்று கூறினான் விஜய குமாரன்.

"ஏன்? உங்கள் போர் முறைக்கு என்ன?" என்று கிளைவ் கேட்டான்.

"மகாராஷ்டிரர் போர் முறை, புரவிகளின் வேகத்தையும் வாள் வீச்சையும் பொருத்ததாக இருக்கிறது. ஆனால் உங்கள் போர் முறையில் படைகளின் அணிவகுப்பு, கட்டுப்பாடான முன்னேற்றம், பீரங்கிகளின் பலம் இத்தனையும் இருக்கின்றன. இதை நாங்கள் உணர்ந்தாலொழிய உங்களை வெற்றி கொள்ள முடியாது," என்று பதிலிறுத்தான் விஜயகுமாரன்.

கிளைவ் திடீரெனத் திரும்பி விஜயகுமாரனை நோக்கி, "எங்களிடமிருந்து நீ போரைக் கற்றால் நீ எங்களைத்தானே அழிப்பாய்?" என்று கேட்டான்.

"ஆம். எங்கள் சுதந்திரத்தைக் காக்க அதுதான் வழி," என்ற விஜயகுமாரன், "கிளைவ், நீ எதற்காக இந்த வர்த்தகத் தொழிலை வெறுக்கிறாய்?" என்று கேட்டான்.

"நான் வெறுக்கிறேனென்று யார் சொன்னது?" என்று வினவினான் கிளைவ் குரலில் வியப்பைக் காட்டி.

"நேற்றிரவு உன் குரல் சொல்லியது; அத்தனை சுரத்திலும் நீ வீரன் என்பதைக் காட்டினாய்; உனக்கும் வர்த்தகத்துக்கும் சம்பந்தமில்லை; நீ காண்பது பணக் கனவல்ல, சாம்ராஜ்யக் கனவு. பிரெஞ்சு பலத்தை அடக்கி பிரிட்டிஷ் பலத்தை இங்கு நிறுவப் பார்க்கிறாய், உங்கள் நாட்டுச் சிறப்புக்காக. நான் அதை எதிர்க்கப் பார்க்கிறேன் எங்கள் நாட்டுச் சுதந்திரத்துக்காக. இருவருக்கும் நோக்கம் சொந்த நாட்டு நன்மை ஒன்றுதான். பாதைகள்தான் வித்தியாசம்."

கிளைவின் முகத்தில் மகிழ்ச்சி தாண்டவமாடியது. கொஞ்சநஞ்சமிருந்த சுரம்கூட அவனை விடுவதை அவன் முகத்திலிருந்த வியர்வைத் துளிகள் நிரூபித்தன. அந்த மகிழ்ச்சியின் விளைவாக, நண்பனின் கையொன்றைப் பற்றிக் கொண்ட கிளைவ், "எனக்குத் தெரிந்த போர் முறையை உனக்குச் சொல்லிக் கொடுக்கிறேன் விஜய குமாரா. ஆனால் நான் அறிந்தது அதிகமல்ல. அதுவும் தற்சமயம் வணிகத் தொழில் புரிகிறேன். இருப்பினும் இதிலும் சிறிது போருக்கு வாய்ப்பு இருக்கும். முகம்மது அலிக்கு உணவுப் பொருள் செல்வதை டுப்ளே தடுக்க முயலுவார். அதனால் சண்டை ஏற்படலாம் சிறிதளவு. அதுவும் இப்பொழுது பிரான்ஸுக்கும் இங்கிலாந்துக்கும் சமாதானமிருப்பதால் நேரிடையாக அவர் எங்களுடன் போரில் இறங்க முடியாது. நவாபுகளுக்கு உதவுவதைச் சாக்காக வைத்துக்கொண்டு சிறு சச்சரவுகளில் ஈடுபடலாம். அந்த வாய்ப்புத்தான் உனக்கும் கிடைக்கும். ஆனால் நிலைமை இப்படியே இருக்காது. வெடிக்கும் ஸ்திதிக்கு ஒருநாள் வரும். யூ ஹாவ் டு வெய்ட் டில் தென்...." என்றான்.

கிளைவின் சொற்களுக்கு உடன்பட்டதாகத் தலையை அசைத்தான் விஜயகுமாரன். நண்பன் கையைக் குலுக்கிய கிளைவ், "விஜய குமாரா! ஆனால் நீ ஒரு சத்தியம் செய்யவேண்டும்," என்றான்.

விஜயகுமாரன் முகத்தில் வியப்பின் சாயை மெல்லப் படர்ந்தது. "என்ன சத்தியம்?"

"எந்தக் காரணத்தை முன்



விட்டும் பிரிட்டனுக்கு எதிராக நீ போரிடக் கூடாது.''

விஜயகுமாரன் இதற்கு உடனடியாகப் பதில் சொல்லவில்லை. பிறகு கூறினன்: ''ஒரு நிபந்தனையின் பேரில் நான் சத்தியம் செய்ய முடியும்.''

கிளேவ் நண்பனைக் கூர்ந்து நோக்கினன். ''என்ன நிபந்தனை?''

''ஒரு நவாபைக் கொல்வதாக நான் அரங்கன் முன்பு ஆணையிட்டிருக்கிறேன். அந்த ஆணைக்கு விரோதமில்லாத எந்தச் சத்தியத்தையும் நான் செய்ய முடியும்.''

''அந்த நவாப் யார்?''

''தற்சமயம் அது என் ரகசியம்,'' என்றான் விஜயகுமாரன்.

''சரி, அப்படி இக்கட்டு ஏற்படுமானல் என்னிடம் சொல்லிவிட்டு எங்களிடமிருந்து விலகு.''

இதை ஒப்புக்கொண்ட விஜயகுமாரன் நண்பனைக் கட்டித் தழுவிக் கொண்டான். ''கிளேவ், என் உயிருள்ள வரை உன்னை எதிர்க்க மாட்டேன். பிரிட்டனுக்கு எதிராகக் கத்தியையும் உருவ மாட்டேன். இப்பொழுதுள்ள நாட்டுச் சூழ்நிலையை நோக்கினல் எங்கள் நாட்டு சுதந்திரம் அதிக நாள் நிலைக்காது. ஆனல் ஒரு வேளை எங்கள் மன்னர்களுக்குப் புத்தி சீர்பட்டு அவர்கள் ஒன்றுபட்டுச் சுதந்திரத்தை நிலை நிறுத்த முற்பட்டால் அப்பொழுது உயிரை நாட்டுப்பணியில் விடத் தயங்கமாட்டேன். அந்த ஒரு சந்தர்ப்பத்தில் மட்டும் பிரிட்டனை என்ன, உலக நாடு எதுவாயிருந்தாலும் அதற்கு எதிராகப் போராடுவேன்,'' என்று வேகத்துடன் கூறினன்.

கிளேவ் நண்பனின் வேகத்தைக் கண்டு மகிழ்ச்சி கொண்டான். ஆனல் கர்நாடகம் இருக்கும் நிலையில் அத்தகைய ஒற்றுமை ஒருநாளும் ஏற்படாதென்ற தீர்மானத்தில் நண்பன் சத்தியத்தை அவன் சொன்ன நிபந்தனையுடன் ஏற்றான். அதன் விளைவாக பங்களா திரும்பியதும் எட்மண்டை அழைத்து விஜயகுமாரன் பிரிட்டிஷ் படையில் சேர்ந்துவிட்டதாக அறிவித்தான். அத்துடன் அவனைச் சுதேசியாக நினைத்து யாரும் நடத்தக்கூடாதென்றும் தனது வர்த்தகப்படைப் பிரிவில் எட்மண்டுக்கு அடுத்த ஸ்தானம் விஜயகுமாரனுக்கு இருக்குமென்றும் கூறினன்.

இந்த ஏற்பாட்டுடன் துவங்கிய விஜயகுமாரன்—பிரிட்டிஷ் உறவு, காலக் கிரமத்தில் மெள்ள மெள்ள உயர்ந்தது. திருச்சிக்கு உணவுப் பொருள்களைக் கொண்டு சேர்த்ததும் அங்குள்ள சிறந்த ஆயுர்வேத வைத்தியங்களைக் கொண்டு கிளேவின் சுரத்துக்கும் வலிக்கும் சிகிச்சையும் செய்தான் விஜயகுமாரன்.

மெள்ள மெள்ள அடிக்கடி வந்த சுரவேகம் குறைந்தது கிளேவுக்கு. விஜயகுமாரன் கிளேவின் அருகிலேயே இருந்ததால் அபினி சாப்பிடுவதும் பெரி

தும் குறைந்தது. இப்படி மெள்ள உடல் குலைப்பட்டதால் அதிக வாணிபத்தில் கிளைவ் இறங்கினன். திருச்சிக்குச் செல்லப் பல புதுவழிகளையும் கண்டுபிடித்தான். கிளைவின் பண பலமும் பெருகியது. அவன் உடல் பலமும் பெருகியது. 1750வது ஆண்டின் ஆரம்பத்தில் கிளைவ் சிறிது ஓய்வுபெறவும் வைத்தியத்தைத் தொடரவும் வங்காளத்துக்குச் சென்ருன்.

அந்த 1750'வது ஆண்டில் பிரெஞ்சு பலம் உச்சியை எட்டியது கர்நர்டகத்தில். முகம்மது அலிக்கு ஆற்காடு அரசு வந்து வந்து போய்க் கொண்டிருந்தது. மூன்று லட்சம் வீரர்களுடன் சந்தா சாகிபுவையும் முஸபர் ஜங்கையும் முறியடிக்க வந்த நிஜாம் நாஸிர் ஜங், டூப்ளேயின் வஞ்சகத்தாலும் டி புஸ்ஸியின் தந்திரத்தாலும் கொல்லப்பட்டார். எந்தச் செஞ்சிக் கோட்டையை யாரும் தகர்க்க முடியாதென்று கர்நாடகம் நினைத்ததோ அந்த செஞ்சிக்கோட்டையை புஸ்ஸி அனயாசமாகப் பிடித்து முகம்மது அலியை அங்கிருந்து மீண்டும் திருச்சிக்கு விரட்டிஞன். முஸபர்ஜங்கை நிஜாமாக்க ஹைதராபாத்துக்கு புஸ்ஸி செல்லுகையில், வழியில் முஸபர் ஜங்கைக் கர்நூல் நவாப் கொன்றுங்கூடப் பழைய நவாபின் சிறுவனை ஸலபத் ஜங்கை நிஜாமாக்கி விட்டான், புஸ்ஸி. ஆற்காட்டில் சந்தா சாகிப் அமர்க்களத்துடன் அரியணை ஏறினர். பிரெஞ்சுக்காரரான டூப்ளேகூட சுதேசி உடைகளை அணிந்து கர்நாடக சுபேதாரர்க விளங்கினர். டூப்ளேயின் தந்திரத்தால் யாரும் அசைக்க முடியாத சாம்ராஜ்யத்துக்குப் பிரான்ஸ் அடிகோலிவிட்டது. அதை நோக்கி டூப்ளே உள்ளம் பூரித்தார்.

ஆனல் எந்த மேதாவியும் ஏதோ ஓரிடத்தில் தவறு செய்கிருன். அந்தத் தவருல் அவன் வீழ்கிருன். அந்தத் தவறின் அஸ்திவாரம் சுயநலமாகவும் இருக்கலாம், பொருமையாகவும் இருக்கலாம். இரண்டும் இணைந்தும் இருக்கலாம். அத்தகைய ஒரு இணைப்பு டூப்ளேயின் இதயத்தில் ஏற்பட்டிருந்தது. பிரெஞ்சு சாம்ராஜ்ய அஸ்திவாரத்தை அது மெள்ள அரிக்கலாயிற்று. அது மட்டுமல்ல, 1751வது ஆண்டில் ஸெய்ண்ட் டேவிட் கோட்டைக்கு ப்ளாயருக்குப் பதில் ஒரு புது கவர்னர் வந்து சேர்ந்தார். அவர் பெயர் ஸாண்டர்ஸ்.

(தொடரும்)

# அதிர்ச்சி

கடந்த மாதம் 7'ம் தேதி, ஒரு படப்பிடிப்புக்காகக் கமலஹாசன், சுந்தரராஜன் ஆகியோர் தாம்பரத்துக்கு அருகில் உள்ள நல்லம்பாக்கம் என்னும் கிராமத்திலுள்ள மலைக்கு வந்திருந்தார்கள். அங்கு தொழிலாளிகள் வெடிவைத்துக் கல் உடைத்துக்கொண்டிருந்தார்கள்.

கமலஹாசன் மோட்டார் சைக்கிளை எடுத்துக்கொண்டு புறப்பட்டார். ''அந்தப் பக்கம் போகாதீங்க!'' என்று பலர் குரல் கொடுத்தும் அது அவர் காதில் விழவில்லை. டுமீலென்று ஒரு வெடி வெடித்தது! நல்லவேளையாகக் கல் ஏதும் அவர் மீது படவில்லை.

அடுத்த ஷாட் தயாரான சமயம். ஓடிவந்தார் ஒருவர், கமலஹாசனின் தாயார் இறந்துவிட்டாரென்ற செய்தியுடன்.
வெடி அதிர்ச்சியைச் சந்தித்த கமலஹாசனுக்கு இடி அதிர்ச்சி!

—வி. ராஜசீனிவாசன்.



# ராஜ பேரிகை

சாண்டில்யன்

## 11. இரும்பு மனிதன்

கவர்னர் தாமஸ் ஸாண்டர்ஸ் செய்ண்ட் டேவிட் கோட்டைக்கு வந்ததிலிருந்து அங்கிருந்த நிலைமை அடியோடு மாறிவிட்டதை அந்தக் கோட்டையிலிருந்தவர்கள் மட்டுமல்லாமல் புதுவையிலிருந்த பிரெஞ்சுக்காரரும் உணர்ந்து கொண்டார்கள். அவர் வந்ததும் வராததுமாக மதுபானமும் சீட்டாட்டமும் பெரிதும் அடங்கிவிட்டதையும், கோட்டையில் கெடுபிடி மிக அதிகமாகிவிட்டதையும் கோட்டையிலிருந்தவர்கள் கண்கூடாகக் கண்டதால், 'கவர்னர் ப்ளாயர் காலத்திலிருந்த கோலாகலம் கவர்னர் ஸாண்டர்ஸ் காலத்தில் நடவாது,' என்று ஆங்காங்கு ரகசியமாகப் பேசிக்கொண்டார்கள். கவர்னர் ஸாண்டர்ஸ் தாம் வந்த அன்றே தாம் இன்னாரென்பதைச் சொற்களால் அறிவிக்கவில்லை, முகத்தாலேயே காட்டினார். கப்பலிலிருந்து இறங்கியதும் தமக்கு மரியாதை செய்ய அணி வகுத்து நின்ற ஆங்கில, ஸ்விஸ் சோல்ஜர்களைக் கூர்ந்து நோக்கினார். ஸ்விட்ஸர்லாந்தைச் சேர்ந்தவனும் ஆங்கிலப்படையில் பிரதான காப்டனுமான ஜின்ஜின்ஸ் முகத்தில் புன்சிரிப்பைக் காட்டிக் கூறிய வரவேற்பு மொழிகளை மிகுந்த வெறுப்புடனும் மௌனத்துடனும் ஏற்றுக் கொண்டார் கவர்னர் ஸாண்டர்ஸ். பிறகு ராணுவ நடை நடந்து கோட்டையை நோக்கிச் சென்றபோது அப்புறமும் இப்புறமும் கண்களைச் செலுத்திக்கொண்டே சென்றதையும், அப்படிச் செலுத்திய சமயங்களிலெல்லாம் அவர் முகத்தில் அருவருப்பு அதிகமாயிருந்ததையும் காப்டன் ஜின்ஜின்ஸும் மற்ற சோல்ஜர்களும் கண்டாலும், ஏதும் பேசாத அந்த மௌன கவர்னரைப் பின்தொடர்ந்து, 'யதா ராஜா ததா ப்ரஜா' என்ற வடமொழிப் பழமொழியில் எத்தனை உண்மையிருக்கிறதென்பதை வலியுறுத்த அவர்களும் பேசாமலே கவர்னரைத் தொடர்ந்தார்கள். கோட்டையை அடைந்து கவர்னர் தமது மாளிகைக்கு வந்ததும், காப்டன் ஜின்ஜின்ஸும் மற்றவர்களும் தம்மைத் தொடர அவசியமில்லையென்பதை அறிவுறுத்தத் தமது கையை மட்டும் அசைத்துச் சைகை செய்துவிட்டு மாளிகைக்குள் நுழைந்துவிட்டார்.

அவர் மாளிகைக்குள் நுழைந்து சென்ற பிறகு தனது சோல்ஜர்களை, ''டிஸ்மிஸ்!'' என்று உத்தரவிட்ட ஜின்ஜின்ஸ் அந்த மாளிகை வாயிலேயே பார்த்துக்கொண்டு நின்றான். ''இவருக்கு இங்கு வந்ததில் அதிகத் திருப்தியில்லை போலிருக்கிறது?'' என்று பக்கத்திலிருந்து காப்டன் கோப்பை நோக்கிக் கேட்கவும் செய்தான்.

''இங்குள்ள உபத்திரவத்தில் மாட்டிக்கொள்ள யாருக்குத்தான் திருப்தியிருக்கும்?'' என்று காப்டன் கோப் பதிலுக்கு வினவினான்.

அன்று காலையிலிருந்து இரவு வரை செய்ண்ட் டேவிட் கோட்டையிலிருந்த சோல்ஜர்களும் சிப்பாய்களும் புது கவர்னரின் சிடுமூஞ்சித்தனத்தைப் பற்றியே பேசிக்கொண்டார்கள். அவர் அடுத்த இரண்டு நாட்கள் மாளிகையை விட்டு வெளிவராதது, அவர்களது முடிவை ஊர்ஜிதப்படுத்தவே செய்தது. ஆனால் மூன்றாவது நாளிலிருந்து, புதிதாக வந்திருக்கிற கவர்னர் ப்ளாயரைப் போல் கலகலப்போ சோம்பேறித்தனமோ உள்ளவரல்லவென்பதையும்,



இதயத்தில் கடினம் மிக்க ஓர் இரும்பு மனிதருடன் தாங்கள் பழக வேண்டியிருப்பதையும் சந்தேகமற உணர்ந்து கொண்டார்கள்.

மூன்றாவது நாள் விடியற்காலை ஐந்து மணிக்கு ஓசைப்படாமல் பூனைபோல் வந்த கவர்னரைக் கவனிக்காமல் ஒரு சாய்வு நாற்காலியில் கால் மேல் காலைப் போட்டுக் கொண்டு படுத்திருந்த காப்டன் ஜின்ஜின்ஸ் கவர்னர் அருகில் வந்ததுமே அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்திருந்து மிலிடரி சல்யூட் அடித்தான்.

* கவர்னர் ஸாண்டர்ஸ் பூரண ராணுவ உடையில் கையில் ஒரு சிறு பிரம்புடன் அவனெதிரே அவனைப் பல விநாடிகள் கூர்ந்து மௌனமாகவே நோக்கிக் கொண்டு நின்றார். அந்த மௌனத்தின் சங்கடத்திலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ள முயன்ற காப்டன் ஜின்ஜின்ஸ், "யுவர் எக்ஸலென்ஸி, நீங்கள் உலாவ வருவது எனக்குத் தெரியாது," என்றான் நடுக்கத்தைக் காட்டி.

---

"Governor Saunders was dour and silent with a will of steel" - Lawford's 'Clive'—Page 2

ஸாண்டர்ஸ் அதற்குப் பதிலேதும் சொல்லவில்லை. தமது பையிலிருந்த ஒரு வெள்ளிக் கெடிகாரத்தை எடுத்து மணியைக் கவனித்தார். அதைத் திருப்பி ஜின்ஜின்னிடம் காட்டினார்.

"எஸ் யுவர் எக்ஸலென்ஸி. இப்பொழுது காலை ஐந்து மணி," என்று அறிவித்தான் மரியாதையுடன்.

"எஸ். இது பரேட் டைம். சோல்ஜர்கள் அணி வகுத்து நடைபோடும் சமயம்." என்று கூறிய கவர்னர் சரேலென்று ஜின்ஜின்ஸ் படுத்திருந்த சாய்வு நாற்காலியைச் சுட்டிக்காட்டி. "வாட் ஈஸ் திஸ்?" என்று வினவினார்.

"ஈஸி சேர்," என்று அறிவித்தான் ஜின்ஜின்ஸ்.

"வீ ஆர் நாட் ஹாவிங் ஆன் ஈஸி டைம் ஹியர் (இங்கு நமது நிலை அத்தனை சுலபமானதல்ல)," என்று கூறிவிட்டுத் தமது கைகளாலேயே காப்டன் ஜின்ஜின்ஸின் சாய்வு நாற்காலியை எடுத்து மடித்துக் கீழே போட்டுவிட்டுக் கடற்கரையை நோக்கி ஒரே சீராக நடை போட்டுத் தாம் சோல்ஜரென்பதைக் காட்டிக்கொண்டு சென்றார்.

நடந்தது இந்த ஒரு நிகழ்ச்சி



புட்டுமல்ல. அன்றிரவு சோல்ஜர்களின் சாப்பாட்டுக் கூடத்தில் கவர்னர் திடீரென நுழைந்து சோல்ஜர்களுடன் தாமும் உணவருந்த ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தார். கவர்னர் வந்ததால் அனைவரும் எழுந்து அணிவகுப்பு நிலையில் நின்றார்கள். கவர்னர் அவர்களை உட்காரச் சொல்லி, சைகை மட்டுமே காட்டி பட்லரை உணவு தமக்கும் பரிமாறும்படி சிரக்கம்பத்தால் உத்தரவிட்டார். முதலில் அவருக்கு விஸ்கியை ஓர் அழகிய க்ளாஸில் ஊற்றிக் கொடுத்த பட்லரைக் கவர்னரின் சுட்டிக் கண்கள் நோக்கின. பிறகு, "இது அதிகம். இன்று முதல் உணவுடன் மது பானம் அளவுடன் பரிமாற வேண்டும்," என்று உத்தரவிட்டு, சாப்பிடு முன்பு எத்தனை மது அருந்தலாமென்பதை நிரூபிக்கத் தமது கிளாஸிலிருந்த விஸ்கியில் பாதியை வேறொரு கிளாஸில் ஊற்றி, காப்டன் ஜின்ஜின்ஸிடம் நீட்டினார். பிறகு அனைவருடன், "டு ஹிஸ் மெஜஸ்டி த கிங்," என்று கூறிவிட்டு ஒரே உறிஞ்சில் விஸ்கியைப் பருகினார். பிறகு எதையோ கவனிக்கச் சுற்றுமுற்றும் நோக்கினார்.

"யுவர் எக்ஸலென்ஸி! என்ன தேவை?" என்று வினவினான் காப்டன் ஜின்ஜின்ஸ்.

"இங்கு யாரும் சிப்பாய்கள் இல்லையே?" என்றார் ஹிஸ் எக்ஸலன்ஸி.

"அவர்கள் உணவுக் கூடம் தனி," என்றான் ஜின்ஜின்ஸ்.

கவர்னர் அதற்குமேல் ஏதும் பேசாமல் அவர்களுடன் உணவருந்திவிட்டுச் சென்றார். அவர் சென்றதை பிரமிப்புடன் கண்ட சோல்ஜர்களுக்கு மறுநாள் அதைவிட அதிகப் பிரமிப்பு தரும் செய்தி கிடைத்தது. கவர்னர் சம்பிரதாயத்தை அடியோடு உடைத்து விட்டதையும் அவர் சுதேசி சிப்பாய்களுடன் அவர்கள் உணவுக் கூடத்தில் உணவருந்தியதையும் பற்றிக் கேள்விப்பட்டதும் உண்மையிலேயே வெள்ளைக்கார சோல்ஜர்கள் கொதிப்படைந்தார்கள். அதைப் பற்றித் தங்கள் எதிர்ப்பைத் தெரிவிக்கவும் தீர்மானித்து கவர்னரிடம் காப்டன் ஜின்ஜின்ஸை அனுப்பினார்கள்.

காப்டன் ஜின்ஜின்ஸ் தான் வருவதை அறிவித்துவிட்டுக் கவர்னர் அனுமதி கிடைத்ததும் அவர் அறைக்குள் நுழைந்தபோது, கவர்னர் நெட்டுக் குத்தாக விறைத்து உட்கார்ந்து கொண்டு ராணுவ தஸ்தாவேஜுகளைப் புரட்டிக் கொண்டிருப்பதைக் கண்டான். நீண்ட நேரம் அவனை ஏறெடுத்துப் பார்க்காமலிருந்த கவர்னர், ஏடுகளிலிருந்து கண்களை உயரத் தூக்கிக் கண்களாலேயே, "என்ன விசேஷம்?" என்று கேள்வியை எழுப்பினார்.

கையிலே வைத்திருக்கும் பொடிக்குப் பேர் சொக்குப் பொடியா? கண்ணிலே தெரிகிறதே அது!

— இளையராணி ராஜலட்சுமியில் அநுபமா.



காப்டன் ஜின்ஜின்ஸ் ஹாட்டைக் கழற்றிக் கையில் பிடித்துக்கொண்டு அதன் ஓரங்களைப் பிடித்து நடுங்கும் விரல்களுடன் திருப்பினான். பிறகு மெள்ள தைரியத்தை வரவழைத்துக்கொண்டு, "இங்குள்ள பிரிட்டிஷ் சோல்ஜர்கள்...." என்று துவங்கி மேலே பேச முடியாமல் தயங்கினான்.

கவர்னர் மௌனமாக அவனைத் தமது ஈட்டிக் கண்களால் நோக்கிக் கொண்டிருந்தார். மேலே சொல்லலாம் என்ற அனுமதி அவர் பார்வையிலிருந்தது. ஆகவே தொடர்ந்து ஜின்ஜின்ஸ், "தாங்கள் சுதேசி சிப்பாய்களுடன் பழகுவதை விரும்பவில்லை," என்று சொல்லி முடித்தான்.

"ஐ ஸீ!" என்ற கவர்னரின் இதழ்களில் அவர் பார்வையைவிடக் கடுமையான புன்முறுவல் விரிந்தது.

"இது சம்பிரதாய விரோதம் என்று பிரிட்டிஷ் சோல்ஜர்கள் கருதுகிறார்கள்," என்றான் ஜின்ஜின்ஸ்.

"யூ ஆர் பிரிட்டிஷ்? (நீ பிரிட்டிஷ்காரனா?)" என்றார் கவர்னர்.

இதற்கு என்ன பதில் சொல்வதென்று தெரியாததால் ஜின்ஜின்ஸ் விழித்தான். பிறகு, "நான் அவர்கள் சார்பில் பேசவந்திருக்கிறேன்," என்றான் தட்டுத்தடுமாறி. "நாம் சுதேசிகளுடன் நெருங்கிப் பழகக்கூடாதென்பது பழைய கவர்னரின் அபிப்பிராயம். நாம் உயர்ந்தவர்கள். வெள்ளையர். கறுப்பர்களுடன் சகவாசம் நமது கௌரவத்துக்கு உகந்ததல்லவென்று பழைய கவர்னர் சொல்லியிருக்கிறார்."

கவர்னர் தொடர்ந்து மௌனம் சாதித்தார். கையிலிருந்த ராணுவ தஸ்தாவேஜுகளைப் புரட்டினார். திடீரென ஓரிடத்தில் நிறுத்தி, "யாரது பிரதாப் சிங்?" என்றார்.

"தஞ்சாவூர் ராஜா."

"நேடிவ்? (சுதேசியா?)"

"எஸ்."

"முகம்மது அலி?"

"அவரும் சுதேசி."

"அவர்கள் நட்பு எதற்கு?"

"அவர்கள் நட்பு இல்லாமல் நாம் பிரிட்டிஷ் ஆதிக்கத்தைப் பரவச் செய்ய முடியாது."

"அப்படியானால் அவர்களுடன் பழக வேண்டாமா?"

ஜின்ஜின்ஸ் மேற்கொண்டு பேசவில்லை. பேசாமடந்தையாக நீண்ட நேரம் நின்றான். அவன் போகலாமென்று ஸாண்டர்ஸ் சைகை செய்தார்.

ஏதும் பேசாமல் ஜின்ஜின்ஸ் மற்ற வெள்ளைக்கார சோல்ஜர்கள் இருந்த இடத்திற்கு வந்தான் மிகுந்த வெறுப்பை முகத்தில் காட்டி. "என்ன சொன்னார் கவர்னர்?" என்று பல சோல்ஜர்கள் ஒரே குரலில் வினவினார்கள்.

அதுவரை அடக்கி வைத்திருந்த சீற்றத்தை அவர்கள்மீது திருப்பினான் காப்டன். "நம்மை நமது வேலையைப் பார்க்கச் சொன்னார்," என்று சீறி விழுந்தான்.

"சம்பிரதாயம்?"

"குப்பையில் கொட்டச் சொன்னார்," என்று எரிந்து விழுந்த ஜின்ஜின்ஸ், தனக்கும் கவர்னருக்கும் நிகழ்ந்த உரையாடலைத் தெரிவித்தான்.

அதைக் கேட்ட சோல்ஜர்கள் வியப்பும் ஆத்திரமும் அடைந்தார்கள்.

அன்று பகல் அதிக ஆத்திரமூட்டும் செய்தி கிடைத்தது கவர்னரிடமிருந்து. கவர்னரின் மெய்காப்பாளரில் ஒருவன் அவர்கள் உணவருந்தும் நேரத்தில் வந்து அந்த உணவுச் சாலையின் சுவரில் ஒரு நீண்ட காகிதத்தை ஒட்டினான். அதில் பிரதிதினமும் கோட்டையின் நிகழ்ச்சிகள் எப்படியிருக்க வேண்டும் என்பதைப்பற்றி மணிக் கணக்கில் குறிப்பிடப்பட்டிருந்தது. 'நாலரை மணிக்கு ப்யூகில், ஐந்து மணிக்கு சோல்ஜர்கள் அணிவகுப்பு, 8 மணி—சிற்றுண்டி, 9 மணிக்குத் துப்பாக்கி பிரங்கிப் பயிற்சி, 12 மணிக்கு உணவு, ஓய்வு, இரண்டு மணிக்கு மீண்டும் ராணுவப் பயிற்சி, நான்கு மணிக்கு

மாலை ட்ரில், 2 மணிக்கு மேல் கவர்னர் அனுமதியுடன் கோட்டையை விட்டு ஊருக்குள் யாராவது நான்கு பேர் செல்லலாம். இரவு பத்து மணிக்குப் படுக்கை,' என தினசரி நடவடிக்கைகள் குறிப்பிடப்பட்டிருந்தன. அத்துடன் கவர்னரை, யாரும் பகல் ஒரு மணிக்குச் சந்திக்கலாம் என்று ஒரு குறிப்பும் இருந்தது.

இந்தக் காகிதத்தைச் சுவரில் ஒட்டிய மெய்காப்பாளன் அதே மாதிரி நான்கு காகிதங்களுடன் சிப்பாய்கள் உணவு விடுதிக்கும் சென்றான். அன்றிரவு சோல்ஜர்கள் பாசறையிலும் சிப்பாய்களின் பாசறையிலும் இதைப் பற்றிப் பலபடி விவாதம் நடந்தது. ஆனால் கவர்னரும் அந்தக் கட்டுப்பாடுகளை ஏற்று நடப்பதைக் கண்டதும் சோல்ஜர்கள் சிறிது ஆறுதலடைந்தார்கள். காலை ஐந்து மணிக்குச் சரியாக ராணுவ உடையுடன் வந்த ஸாண்டர்ஸ் அணிவகுப்பையும் அதைத் தொடர்ந்து ட்ரில்லையும் கவனித்தார். துப்பாக்கி பீரங்கிப் பிரயோகப் பயிற்சியில் தாமும் பங்கெடுத்துக் கொண்டார். இப்படி அவர் துப்பாக்கியைச் சுட்டுக் கொண்டிருந்த ஒருநாள் ஒரு பொதி வண்டித் தொடர் கோட்டைக்குள் நுழைந்தது. அவற்றை அழைத்துக் கொண்டு அவற்றுக்கு முன்னால் புரவியில் மராட்டிய உடையணிந்த ஒரு சுதேசி வீரன் வந்தான்.

வண்டிச்சாரி எட்டவே நிறுத்தப்பட்டது. அந்த வீரன் மட்டும் கவர்னரை அணுகி ராணுவ முறையில் ஸல்யூட் அடித்தான். கவர்னர் துப்பாக்கிப் பயிற்சியை ஒரு வினாடி நிறுத்தித் திரும்பி நோக்கினார் அவனை.

''நான் விஜயகுமாரன்,'' என்றான் வந்தவன்.

''அப்படியா!'' என்றார் கவர்னர் கண்களில் சிறிது சிரத்தை ஒளியை வெளியிட்டு.

''யுவர் எக்ஸலன்ஸி! என்னை உங்களுக்குத் தெரியாது,'' என்றான் விஜயகுமாரன்.

''தெரியும்,'' என்றார் கவர்னர்.

இதைக் கேட்ட விஜயகுமாரன் ஒரு வினாடி பிரமித்தான். பிறகு, ''நான் லெப்டினன்ட் கிளைவின் உத்தரவுப்படி..'' என்று ஏதோ சொல்ல முற்பட்டான்.

கவர்னரின் ஒரே பார்வை விஜயகுமாரனை ஸ்தம்பிக்கச் செய்தது. ''சோல்ஜர்..'' துவங்கினார் கவர்னர்.

''நான் சிப்பாய்,'' என்று குறுக்கிட்டான் விஜயகுமாரன்.

''நீ போரிடுகிறாயா?''

''ஆம்.''

''அப்படியானால் சிப்பாய்க்கும் சோல்ஜருக்கும் பணி ஒன்றுதான். ஆனால் ஒரு விஷயம் நீ புரிந்துகொள்ள வேண்டும்.''

''என்ன விஷயம்?''

''அதிகாரிகளின் பதவிகளைச் சரியாக உச்சரிக்க வேண்டும்.''

''எதைத் தவறாக உச்சரித்தேன்?''

கவர்னர் ஒரு வினாடி யோசிப்பதாகப் பாசாங்கு செய்தார். ''டிட் யூ ஸே லெப்டினன்ட் கிளைவ்?''

''எஸ் யுவர் எக்ஸலென்ஸி,''

''இட் ஈஸ் காப்டன் கிளைவ்,'' என்ற கவர்னர் மீண்டும் துப்பாக்கிப் பயிற்சியில் ஈடுபடத் துப்பாக்கியில் மருந்தைத் திணித்தார்.

அந்தச் சமயத்தில் அங்கு தோன்றிய கிளைவ், ''யுவர் எக்ஸலென்ஸி, லெப்டினன்ட் கிளைவ் ரிபோர்ட்டிங்,'' என்று தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டார்.

''எஸ் காப்டன் கிளைவ்.''

''எப்பொழுது காப்டனானேன்?''

''சற்று முன்பு.''

''எனக்கு அறிவிக்கப்படவில்லையே!''

''நீ நேரில் வராததால்,'' என்ற கவர்னர், ''கம் வித் மி,'' என்று கிளைவை அழைத்துக்கொண்டு தமது மாளிகையை நோக்கிச் சென்றார். தமது அறைக்குள் நுழைந்ததும் தமது மேஜை அறையைத் திறந்து ஒரு காகிதத்தை எடுத்துக் காட்டினார்.

அதைக் கண்டதும் கிளைவ் பெருவியப்படைந்தான். ''இதனால் எனக்குப் பண நஷ்டம்,'' என்றான்.

''பிரிட்டனுக்கு லாபம்,'' என்ற கவர்னர் ஸாண்டர்ஸ் தமது கண்களைக் கிளைவின் கண்களுடன் கலந்தார். ஓர் இரும்பு மனிதனைத் தான் சந்தித்துவிட்டதைக் கிளைவ் உணர்ந்தான்.

(தொடரும்)

ராஜ பேரிகை



கவர்னரின் கண்களைச் சந்தித்த சில விநாடிகளிலேயே, எதற்கும் அசையாத திடமனம் உள்ள ஒரு சிறந்த அறிவாளியைத் தான் சந்தித்து விட்டதை உணர்ந்ததால் உள்ளத்தில் சிறிது சாந்தியையும் பூரிப்பையுங் கூட அடைந்த ராபர்ட் கிளைவ் மீண்டும் ஒருமுறை தனது கையிலிருந்த காகிதத்தை நோக்கினான். அதில் பல வெள்ளைக்காரர்களின் பெயர்கள் சிவில் ஜாபிதாவிலிருந்து மிலிடரி ஜாபிதாவிற்கு மாற்றப்பட்டிருப்பதையும், அந்த ஜாபிதாவின் தலைப்பில் தனது பெயர் 'காப்டன் கிளைவ்' என்று பெரிய எழுத்தில் பொறிக்கப்பட்டிருப்பதையும் கவனித்த கிளைவ், அந்த ஜாபிதாவிலிருந்த நீண்ட கோடுகளுடன் காட்சியளித்த கையெழுத்தும் கவர்னருடையதாகத்தான் இருக்க வேண்டுமென்று ஊகித்ததால், புதிய கவர்னர் பல வேலைகளைத் தாமே ரகசியத்தில் செய்யக்கூடியவர் என்பதைப் புரிந்து கொண்டான். அத்துடன் திடீரெனத் தன்னைக் காப்டன் பதவிக்கு அவர் உயர்த்த வேண்டிய அவசியமென்னவென்ற சிந்தனையில் இறங்கியதால், காகிதத்தில் நீண்ட நேரம் பதித்து விட்ட கண்களை மீண்டும் உயர்த்தி கவர்னரை நோக்கினான்.

# 12. சொல்லம்பு

கவர்னர் ஒரு விநாடிதான் அந்தக் கனவுக் கண்களைச் சந்தித்தார் பிறகு ஏதோ யோசித்துவிட்டுத் தமது நாற்காலியில் செங்குத்தாக உட்கார்ந்து கொண்டு, மேஜை டிராயரைத் திறந்து மீண்டும் ஒரு சிறு காகிதத்தை எடுத்து மேஜைமீது போட்டுவிட்டு, மேஜை அறையிலிருந்த தமது புகைபிடிக்கும் நீண்ட குழாயை வாயில் கௌவிக் கொண்டு அதில் புகையிலைத் தூள்களை நிதானமாக அடைத்து, நெருப்புப் பெட்டியொன்றிலிருந்து குச்சியொன்றையும் கிழித்துப் பற்ற வைத்துப் புகையை லேசாக விட்டவண்ணம் நாற்காலியில் அலட்சியமாகச் சாய்ந்தார்.

கிளைவ் அவரது அசைவு ஒவ்வொன்றிலும் ஓர் உறுதியும் தீர்மானமும் இருப்பதைக் கவனித்தான். பிறகு அவர் மேஜைமீது போட்ட சிறு காகிதத்தையும் எடுத்துப் படித்தான். அவன் முகத்தில் எல்லை மீறிய பிரமை தட்டியது. அந்தப் பிரமை பிரதிபலித்த கண்களை, கவர்னர் முகத்தில் நாட்டி விட்டு, ''இதில் ஏதோ தவறு இருக்கிறது...'' என்று தயக்கத்துடன் அறிவிக்கவும் செய்தான்.

கவர்னர் வாயிலிருந்து ஒரு சொல்கூட உதிரவில்லை. 'என்ன தவறு?' என்பதைக் கேட்பதற்கான அறிகுறி மட்டும் நிதானமாக மேலெழுந்த அவருடைய புருவங்களில் தெரிந்தது.

"இவன் ஒரு சுதேசி," என்று தனது கையிலிருந்த காகிதத்தைத் தட்டிக்காட்டிக் கூறினான் கிளைவ்.

அப்பொழுதும் கவர்னர் பேசவில்லை. இஷ்டமில்லாததாலோ அல்லது வாயிலிருந்த பைப் இடங்கொடாததாலோ ஆமென்பதற்கு அறிகுறியாகத் தலையைமட்டும் ஆட்டினார். ஆகையால் கிளைவே மேற்கொண்டு உரையாடலைத் தொடர்ந்து, "இந்த விஜயகுமாரன்..." என்று இழுத்தான்.

"எஸ் காப்டன்?" என்ற இரு சொற்கள் கவர்னர் வாயிலிருந்து முத்துக்களாக உதிர்ந்தன, புகைக் குழாய் சிறிது அசைய.

அந்த இரு சொற்களையும், அவை உதிர்ந்த திடத்தையும் வேறு யார் கேட்டிருந்தாலும் அந்த இடத்திலேயே உணர்ச்சிகள் உறைந்து நின்றிருப்பார்கள். ஆனால் கிளைவும் தனது குரலில் கவர்னருக்குச் சமதையான கடுமையைக் காட்டி, "யுவர் க்ஸலென்ஸி! யூ காண்ட் டூ திஸ் (நீங்கள் இதைச் செய்ய முடியாது)," என்று திட்டமாக அறிவித்தான்.

"என்னை யார் தடுக்க முடியும்?" என்று கவர்னர் ஆங்கிலத்தில் மீண்டும் வினவினார்.

"சுதேசிகளுக்கு லெப்டினன்ட் பதவி கொடுப்பது கிடையாது. வழக்கமல்ல," என்றான் கிளைவ்.

"ஆனால் அவன் உனக்கு அடுத்தபடி பதவி வகிக்கிறான், உணவுப் பொருள்கள் சப்ளை வட்டத்தில்," என்ற கவர்னர் குறிப்பிட்டு கிளைவின் ஆச்சரியத்தை அதிகப்படுத்தினார்.

"ஹி இஸ் மை ப்ரண்ட்," என்று அதற்குச் சமாதானம் சொன்னான் கிளைவ்.

"எஸ். ஹி இஸ் எ ப்ரண்ட் ஆப் தி பிரிட்டிஷ் ஆல்ஸோ (அவன் பிரிட்டிஷ்காரருக்கும் நண்பன்)," என்றார் கவர்னர் பதிலுக்கு.

இதற்கு என்ன பதில் சொல்வதென்று கிளைவுக்குப் புரியாததாலும், விஜயகுமாரனை லெப்டினன்ட் ஆக்கினால் பிரிட்டிஷ் சோல்ஜர்களுக்கிடையே ஏற்படக்கூடிய கசப்பை அவன் உணர்ந்திருநததாலும் கவர்னரின பிடிவாதத்தை அகற்ற முற்பட்டு, "யுவர் எக்ஸலென்ஸி! இட் ஈஸ் பெட்டர் டு கோ ஸ்லோ (தாங்கள் சிறிது மெதுவாகக் காரியங்களைச் செய்வது நல்லது)." என்று குறிப்பிட்டான். அவன் குரலில் தெளிவும் உறுதியும் இருந்ததையும், தமக்கு ஆலோசனை சொல்லும் தொனியும் காணப்பட்டதையும் கவர்னர் கவனிக்கவே செய்தார்.

அதனால் கவர்னர் சிறிதும் அசைந்ததாகத் தெரியவில்லை. "ஆர் வீ ஃபாஸ்ட் நௌ? (இப்பொழுது நாம் வேகமாகச் செயல்படுகிறோமா?)" என்று வினவினார் கவர்னர். அதைக் கேட்டுவிட்டுக் கிளைவின் முகத்தைக் கூர்ந்து அவன் உள்ளத்தை ஊடுருவி விடுவதுபோல் பார்த்தார்.

அவர் கேள்வியின் பொருள் மிகத் தெளிவாகத் தெரிந்தது கிளைவுக்கு. பிரிட்டிஷ்காரர்களின் தாமதத்தையும் அதனால் சீர்கேடாகிவிட்ட அவர்கள் நிலைமையையும் கவர்னர் குறிப்பிடுகிறார் என்பதைச் சந்தேகமறத் தெரிந்து கொண்டாலும் அதை வெளிக்குக் காட்டாமல், "கவர்னர் எதைக் குறிப்பிடுகிறார் என்பது தெரியவில்லை எனக்கு," என்றான் மெதுவான குரலில்.

கவர்னர் அதற்குப் பதிலேதும் சொல்லவில்லை. நாற்காலியிலிருந்து டிரில் செய்யும் முறையில் செங்குத்தாக எழுந்து சற்று எட்டச்சுவரருகிலிருந்த ஒரு மரப் பீரோவைத் திறந்து நீண்ட காகிதச் சுருள் ஒன்றை எடுத்து வந்து, மேஜைமீது அதைப் பிரித்து டிராயரிலிருந்து இரண்டு மூன்று இரும்புக் கட்டிகளை எடுத்து அதன் ஓரங்களில் வைத்தார், காகிதம் மீண்டும் சுருண்டுவிடாதிருக்க. பிறகு வாயிலிருந்த புகைக் குழாயை எடுத்து அதனால் நான்கு இடங்களைத் தட்டிக்காட்டினார் பிரிக்கப்பட்ட காகிதத்தில்.

மேஜைமீது விரிக்கப்பட்டிருந்த தென்னிந்தியப் படத்தில் அவர் காட்டிய இடங்களைப் பார்வையிட்ட கிளைவ், "ஆம்! ஆற்காடு, வேலூர், செஞ்சி, பாண்டிச்சேரி," என்று அவ்

சாண்டில்யன்

விடங்களைக் கவனித்துத் தான் புரிந்து கொண்டதை கவர்னருக்கு உணர்த்தி னான்.

கவர்னர் முகத்தில் லேசாக மகிழ்ச்சி உதயமாயிற்று. கடுமை ஒரு விநாடி மறைந்தது. அவர் குரலில்கூடச் சிறிது மென்மை இருந்தது. "காப்டன்! யூ அண்டர்ஸ்டாண்ட் க்விக்," என்று கவர்னர் சிலாகிக்கவும் செய்தார். அத்துடன் நிறுத்தவில்லை. "இந்த ஆம் காட்டிலிருந்து பாண்டிச்சேரிக்கு ஒரு கோடு இழுத்தால் சென்னை துண்டிக்கப் படுகிறது. இன்னொரு கோடு செஞ்சிக்கு இழுத்தால் வேலூர் ஒதுக்கப்படு கிறது. தஞ்சையும் திருச்சியும் வெட்டப் படுகிறது." என்று ஆங்கிலத்தில் விவ ரித்த படத்தின்மீது மீண்டும் கண்களை நாட்டி தமது புகைக் குழாயால் ஒரு வட்டம் போட்டு, "ஆல் தீஸ் ஆர் ப்ரெஞ்ச் (இவையெல்லாம் பிரெஞ்சுக்காரரி டம் இருக்கின்றன)," என்று குறிப்பிட் டார்.

கவர்னர் கர்நாடகத்தில் காலடி எடுத்துவைத்த மூன்று நாட்களுக் குள் எத்தனை விஷயங்களைப் புரிந்து கொண்டிருக்கிறார் என்பதை அறிந்த இளைய பெருவியப்பில் ஆழ்ந்தான். ஆகவே அவர் சொன்னதை ஆமோதிக் கும் பாணியில் தலையை ஆட்டினான். கவர்னர் அதற்குமேல் நாற்காலியில் மீண்டும் உட்கார்ந்து நாற்காலியை லேசாகப் பின்னும் சாய்த்துப் புகைக் குழாயை வாயில் வைத்து இருமுறை அலட்சியமாகப் புகையை ஊதினார்! ஏதும் பேசாமல் இளையைக் கூர்ந்து நோக்கிப் புருவங்களை உயர்த்தினார்.

"ஆம். நமது நிலை பரிதாப மானதுதான்," என்று ஒப்புக்கொண் டான் இளைய அவருக்குப் பதில் சொல் லும் முறையில்.

"ஏன் அப்படி?" என்று விசாரித்தார் எக்ஸலென்ஸி.

"பிகாஸ்," என்று காரணம் சொல்லத் துவங்கிய இளையை இடை மறித்த கவர்னர், "பிகாஸ் யூ ஆர் ஸ்லோ. (நீங்கள் மிக நிதானம்.) டுப்ளேக்கு உங்களைவிட முன்னேற்கு அதிகம். அவர் வெள்ளைக்காரர் சுதேசி கள் என்று வித்தியாசம் பார்க்கவில்லை. சுதேச நவாப்புகளை நண்பர்களாக்கிக் கொண்டார். அவர்களுக்குப் பதவி களைப் போரினாலும், தந்திரத்தாலும் வாங்கிக் கொடுத்தார். அவரே நவாபு கள்போல் உடையணிந்து கர்நாடக நவாப் என்றும், தம்மை அழைத்துக் கொள்கிறார்," என்று சொல்லிக் கொண்டு போன கவர்னர், "ஒரு நாட்டுக்கு நீங்கள் வரும்போது அந்த நாட்டவருடன் இணையவேண்டும். இப் நாட் யூ வில் பி ஐஸலேட்டட் (இல்லா விட்டால் நீங்கள் ஒதுக்கப்படுவீர்கள்) அதுதான் இப்பொழுது நடந்திருக்கி கிறது."

"லோ?" என்று வினவி னான் இளைய.

காமராஜின் 75'வது பிறந்த தினவிழாவில கலந்து கொள்ள சென்னைக்கு வந்திருந்த தாரகேசுவரி சின்ஹா கூறினார்:
"மொரார்ஜியின் கீழே துணை அமைச்சராக இருந்தவள் நான். ரொம்பவும் அவர் தன்னை இப்போது மாற்றிக் கொண்டிருக் கிறார். ஆனால் இன்னமும் உண்மையான பிரசினைகளை நேரடியாகச் சந்திக்கவே அவ ருடைய மந்திரிசபை ஆரம்பிக்கவில்லையே?"



இந்த இதழ் அவசர பேட்டி

காங்கிரஸ்காரர்கள் மீது பழிதீர்த்துக் கொள்ளும் நடவடிக்கைகளைத்தானே தொடர்ந்து செய்து வருகிறார்கள்? விலைவாசி கள் எவ்வளவு உயர்ந்து கொண்டே யிருக்கின்றன. அவற்றைக் கட்டுப்படுத்த ஏதாவது உருப்படியாகச் செய்தால் எவ் வளவு நன்றாகஇருக்கும்!" —பாரு

''திஸ் விஜயகுமார் வில் பி லெப்டினன்ட்.''

''எக்ஸலென்ஸி...!''

''அது மட்டுமல்ல. எனிப்ரேவ் நேடிவ், வீரனை எந்த சுதேசியும் ராணுவத்தில் எடுத்துக்கொள்ளப் படுவான். சமமாக நடத்தப்படுவான். இன்னும் பலருக்குச் சந்தர்ப்பம் வரும்போது பிரமோஷன் கொடுப்போம்..''

''இதனால் பிரிட்டிஷ் லோல்ஜர்கள்...''

''காப்பாற்றப் படுவார்கள். வீணாக எலிப்பொறியில் அகப்பட்டவர்கள்போல் சாகமாட்டார்கள்,'' இதைப் பரம திட்டமாக அறிவித்த கவர்னர் மேலும் சொன்னார், ''காப்டன்! இரண்டு நாட்களாகப் பரேடைக் கவனித்து வருகிறேன். திருப்தியாயில்லை. தட் காப்டன் ஜின்ஜின்ஸ் ஈஸ் எ யூஸ்லெஸ் பெல்லோ...உதவாக்கரை,'' என்று.

இளைஞ் நகைத்தான். ''காப்டன் ஜின்ஜின்ஸ் இருப்பவர்களில் அதிக அனுபவமுள்ளவர்,'' என்று கூறவும் செய்தான்.

''அந்த அனுபவம் நமக்குப் பலனேதும் கொடுக்கவில்லை. கோப் தேவிக்கோட்டையில் தோற்றுத் திரும்பினவன். இங்குள்ள ராணுவ தஸ்தாவேஜுகள் எல்லாவற்றையும் படித்து விட்டேன். இங்கு நிலைமையைக் குட்டிச் சுவராக அடித்துவிட்டார்கள். ஆற்காடு நவாபின்மீது படையெடுப்பதற்குப் பதில் தஞ்சாவூர் ராஜாமீது அதாவது தேவிக்கோட்டைமீது படையெடுத்திர்கள். மேஜர் லாரன்ஸுக்குச் சம்பளத்தை உயர்த்தவில்லை. ராணுவ அனுபவமுள்ள அந்த ஒரு மேஜர் இங்கிலாந்துக்குப் போய்விட்டார். இ ஹேர்ல் திங்ஸ் எ மெஸ்,'' என்று கடுமையிலும் நிதானத்துடன் நிலைமையை விளக்கினார் கவர்னர்.

மிக நிதானஸ்தனான இளைவே வாயைப் பிளந்து கொண்டு நின்றான். சிறிது நேரம் இருவரும் பேசாததால் அறையில் பயங்கர அமைதி நிலவியது. கவர்னர் நாற்காலியைவிட்டு எழுந்திருந்து அறையில் அங்குமிங்குமாக நிர்க்காலோசனையுடன் புலி நடை போட்டார். சில விநாடிகள் கழித்து ஏதோ முடிவுக்கு வந்தவர்போல் இளைவை நோக்கித் திரும்பி, ''காப்டன்!'' என்றழைத்தார்.

''எஸ் யுவர் எக்ஸலென்ஸி!'' இளைவின் குரலில்கூடச் சிறிது ஆட்டமிருந்தது.

''இனிமேல் இங்கு விவகாரங்கள் பழையபடி நடக்காது.''

''அதைப்பற்றிக் கேள்விப் பட்டேன்.''

''எதைப்பற்றி?''

''விவகாரங்கள் பழையபடி இருக்காதென்று.''

''யார் சொன்னது? மற்றவர்களிடம் பேசக்கூட உனக்கு அவகாசமில்லையே?''

''நான் தங்களைத் தொடருமுன்பு விஜயகுமாரன் என் காதில் இரண்டொரு வார்த்தைகள் சொன்னான்.''

''தட் பெலோ ஈஸ் ஷ்ருட்,'' என்று கூறிய கவர்னர், ''ஐ நோ ஹி இஸ் யுவர் ப்ரண்ட்,'' என்றும் குறிப்பிட்டார்.

''ஆம்.''

''அது மட்டுமல்ல.''

''வேறு எது எக்ஸலென்ஸி?''



''புடவைக்குக் கஞ்சி போட்டது தானே அதிகம்.''

எக்ஸலென்ஸி உடனடியாகப் பதில் கூறவில்லை. "அவன் யாரையோ வெறுக்கிறான்." என்றார்.

கவர்வருக்கு ஜோஸ்யம் கூடத் தெரியுமோ என்று வியந்த க்ளைவ், "தங்களுக்கு எப்படித் தெரியும்?" என்று வினவினான்.

"அவனைப்பற்றி நேற்று ஆர்டர்லியிடம் விசாரித்தேன்."

"உம்."

"அவன் கதை இங்கு ஆர்டர்லிக்குக்கூடத் தெரிந்திருக்கிறது."

"அப்படியா!"

"ஆம். அதனால்தான் பிரிட்டிஷ் படையில் சேர்ந்திருக்கிறான்."

"எக்ஸலன்ஸ!"

"அவனால் கொல்லப்பட வேண்டியவன் நம்மிடமிருந்தால் இதே விஜயகுமார் பிரெஞ்சுப் படையில் சேர்ந்திருப்பான்."

"அப்படியானால் அவன் யாரைக் கொல்ல விரும்புகிறான்?" என்று வினவினான் கிளைவ்.

"யூ டு நாட் நோ?"

"நோ."

"தென் கால் ஹிம்," என்று கூறி, "ஆர்டர்லி!" என்று குரல் கொடுத்தார். உள்ளே வந்த ஆர்டர்லியை நோக்கி, "லெப்டினன்ட் விஜயகுமாரனை இங்கு அனுப்பு." என்று உத்தரவிட்டார்.

ஒரு விநாடி ஆர்டர்லி பிரமித்தான். "லெப்டினன்ட்..." என்று இழுத்தான் காதால் கேட்டதை நம்ப முடியாமல்.

"விஜயகுமார்." சுள்ளென வந்தது கவர்னரின் பதில்.

ஆர்டர்லி வெளியே பறந்தான். சற்று நேரத்திற்கெல்லாம் விஜயகுமாரன் உள்ளே நுழைந்து கவர்னருக்குத் தலை தாழ்த்தி, "லெப்டினண்ட் விஜயகுமார் அட் யுவர் சர்விஸ் எக்ஸலன்ஸி," என்று சுத்தமான ஆங்கிலத்தில் சம்பிரதாயம் வழுவாமல் பதில் சொன்னான். அவன் கடையிதழ்களில் சிறிது புன்முறுவலும் இருந்தது. ஆனால் கவர்னர் வீசிய அடுத்த கேள்வியால் அந்தப் புன்முறுவல் மறைந்தது. அவன் என்ன? கிளைவ்கூடக் கல்லெனச் சமைந்து நின்றான்.

"சந்தா சாகேபை ஏன் கொல்ல விரும்புகிறாய்?" என்ற சொல்லம்பைச் சர்வசாதாரணமாக வீசினார் கவர்னர் தாமஸ் ஸாண்டர்.

(தொடரும்)

## இவர் சேகரித்த பழங்களிலிருந்து



இறைவா, அபாயங்களிலிருந்து என்னைப் பாதுகாக்கும்படி உன்னை நான் பிரார்த்திக்க மாட்டேன். ஆனால் அபாயங்களை எதிர்நோக்கும் பயமற்ற தன்மையை எனக்குக் கொடு.

என்னுடைய வேதனைகளையும் வலிகளையும் மறைக்கும்படி உன்னைக் கெஞ்சமாட்டேன். ஆனால் அவைகளை வெல்லும் வலிமையுள்ள இருதயத்தை எனக்குக் கொடு.

வாழ்க்கைப் போராட்டத்தில் எனக்குத் துணைவர்களை நாடி நிற்க வேண்டாம். ஆனால் என்னுடைய சொந்த பலத்திலேயே போராட அருள் புரிவாயாக. பொறுமையில்லா பயத்தில் என்னைப் பதறவிடாதே. ஆனால் என்னுடைய சுதந்திரத்தைக் காக்க எனக்குப் பொறுமையைக் கொடு.

வெற்றியை மட்டும் உன்னிடம் யாசித்து பெறும் கோழையாக என்னை ஆக்கிவிடாதே. என்னுடைய தோல்விகளையும் நான் ஏற்று உன்னுடைய அருளால் வெற்றி அடையும் வாய்ப்பினையும் அருள் புரிவாயாக!

—ரவீந்திரநாத் தாகூரின் 'பழங்கள் சேகரிப்பில்' உள்ள பிரார்த்தனை.

அனுப்புதல்: எம். எஸ். மணியன்





18.8.77

# ராஜ பேரிகை

சாண்டில்யன்

## முன் கதை:

பதினெட்டாவது நூற்றாண்டின் இடைக்காலத்தில் ஒருநாள்; தஞ்சை மன்னன் பிரதாப் சிம்மனின் குமாரி நந்தினியும் அமைச்சர் டபீர் பண்டிதரும் அரங்கனைத் தனிமையில் தரிசிக்கத் திருவரங்கம் வருகிறார்கள். ஆனால் அவர்களுக்கு முன்பே கர்ப்பக்கிரகத்தின் முன் மண்டபத்தில் விஜய குமாரன் என்ற வாலிபன் மண்டியிட்டு, தன் அன்னையைத் தீக்குளிக்கச் செய்த நவாபின் தலையைக் கொத்திக் கொணர்வதாகப் பயங்கரச் சபதம் செய்வதைக் காண்கின்றனர். அதனால் அவனைச் சிறை செய்ய டபீர் பண்டிதர் முயல, விஜயகுமாரன் துப்பாக்கி முனையில் அரசகுமாரியைக் கவர்ந்து சென்று,





வழியில் முராரி ராவ் என்ற மகாராஷ்டிரத் தளபதியையும், ராபர்ட் கிளைவ் என்ற பிரிட்டிஷ் சோல்ஜரையும் சந்தித்து அவர்கள் உதவியால் தப்பித் தஞ்சை அரண்மனைக்கு வருகிறான்.

அந்தச் சம்பவங்களின் விளைவாக அவனுக்குத் தஞ்சை மன்னன் அன்பும், நந்தினியின் காதலும் கிடைக்கவே, தஞ்சைப் படையில் வேலைக்கு அமர்ந்து தேவிக்கோட்டையின் பாதுகாப்பில் தனது திறமையையும் காட்டுகிறான். இத்துடன் அவனுக்குக் கிளைவின் நட்புக் கிடைக்கிறது. இந்தச் சந்தர்ப்பத்தில் சதாராவில் சிறைப்பட்டிருந்த சந்தாசாகிப், பிரெஞ்சு கவர்னர் டுப்ளேயின் உதவியால் விடுதலைஅடைந்து விட்ட செய்தி கிடைப்பதோடு, பிரெஞ்சு பலம் உயர்வதும் தெரிகிறது. அதை ஒடுக்கவும் தனது சபதத்தை நிறைவேற்றவும் பிரிட்டிஷ் உதவி தேவை என்று கருதிய விஜயகுமாரன், நந்தினியைப் பிரிந்து கிளைவிடம் வேலைக்கு அமர்கிறான்.

*1750*'ம் ஆண்டில் பிரெஞ்சு பலம் உச்சஸ்திதியை அடைகிறது. அதை அடக்க பிரிட்டன், தாமஸ் ஸாண்டர்ஸ் என்பவரை ஸெய்ண்ட் டேவிட் கோட்டையின் கவர்னராக நியமித்து இந்தியாவுக்கு அனுப்புகிறது. சொற் குறைவும் இரும்பு மனமும் உள்ள ஸாண்டர்ஸ், வந்ததும் வராததுமாகக் கிளைவைக் காப்டன் பதவிக்கு உயர்த்தி, சென்னையை வலுப்படுத்த அனுப்புகிறார். தஞ்சை மன்னரையும் பிரிட்டன் பக்கம் இழுக்க விஜயகுமாரனையும் லெப்டினண்ட் ஆக்கித் தஞ்சையை நோக்கி அனுப்புகிறார். அப்பொழுது...

## 13. புதுக் கதை

இப்படியொரு கேள்வியைப் புதுக்கவர்னர் கேட்பாரென்பதை விஜயகுமாரன் சொப்பனத்திலகூட எண்ணிப் பார்க்காததால் பதில் சொல்லத் திராணியற்றுப் பல விநாடிகள் திகைத்து நின்று விட்டானென்றால், எதற்கும் அசையாத கிளைவின் நிலையும் விஜயகுமாரன் நிலையைவிட எந்த விதத்திலும் வித்தியாசப்பட்டதாயில்லை. ஆகவே, அவனும் பிரமை தட்டிய விழிகளைக் கவர்னரின்மீது நாட்டவே செய்தான். கவர்னர், கிளைவை அடியோடு புறக்கணித்து விஜயகுமாரனை நோக்கி, "உன்னை ஒரு கேள்வி கேட்டேன்," என்று தமிழில் சொன்னார் வறண்ட உணர்ச்சியற்ற குரலில்.

அவர் கேள்வியைவிடத் தமிழைக் கவனித்ததால் அதிக அதிசய வசப்பட்ட விஜயகுமாரன், "நீங்கள் நன்றாகத் தமிழ் பேசுகிறீர்கள்," என்று சிலாகித்தான்.

கவர்னர் அதற்கு நேரிடையாகப் பதில் சொல்லவில்லை. "எந்தக் காரியத்தை ஒரு மனிதன் மேற்கொண்டாலும் அதற்குத் தன்னைத் தகுதியாக்கிக் கொள்ளவேண்டும்," என்று ஒரு பெரிய சித்தாந்தத்தைச் சொன்னார்.

"தாங்கள் இங்கு கவர்னராக வரப்போவது.." என்றான் சற்றுத் தயக்கத்துடன் விஜயகுமாரன்.

"முன்னதாகத் தெரியாது. இந்த ஸப் காண்டினண்டில்..ஐ ஆம் ஸாரி.. இந்த உப கண்டத்தில் நடக்

ஓவியர் ரூபன்ஸின் 400'வது பிறந்த ஆண்டு ஐரோப்பாவெங்கும் கொண்டாடப்பட்டது. அவர் ஓவியமாகத் தீட்டிய பெண்கள் ரோஜாப் பூவை மட்டும் சாப்பிட்டு உடம்பை வளர்த்துக் கொண்டவர்கள் போல் இருப்பார்களாம்.



ளும் விஷயங்கள் சில வருஷங்களாக பிரிட்டனில் பெரிதும் அடிபடுகின்றன. நம்முடைய பலவீனமும் புத்திக் குறைவும் டூப்ளேயினுடைய திறமையும் யுக்தியும் வெற்றிகளும் பகிரங்கமாகப் பேசப்படுகின்றன. ஆகையால் இந்த நாட்டுக்கு வருவதென்று தீர்மானித்தேன். தீர்மானித்ததும் தமிழும் ஹிந்துஸ்தானியும் இங்கிருந்து வரும் வணிகரிடம் அரைகுறையாகப் பயின்றேன். பிறகு மெள்ள மெள்ளத் திருத்தி, மொழி உச்சரிப்பைச் சரிப்படுத்திக்கொண்டேன். இங்கு புது கவர்னரை அனுப்ப முயற்சி நடந்த போது ஒருவன்தான் அதற்குத் தகுதியாயிருந்தான். பிரிட்டிஷ் ஈஸ்ட் இந்திய கம்பெனி டைரக்டர்கள், போர் முறைகளிலும் வாணிபத்திலும் இந்த நாட்டு மொழிகளிலும் ஓரளவு பயிற்சியுள்ளவரைத் தேடினார்கள். நான்தான் கிடைத்தேன்..'' என்று சொல்லிக் கொண்டு போன ஸாண்டர்ஸ் சட்டென்று தமது சரிதையை நிறுத்தி,

''கம்பெனியில் சீப் டைரக்டர் என்னை என்ன கேட்டார் தெரியுமா?'' என்று வினவினார், இம்முறை கிளைவை நோக்கி.

''என்ன யுவர் எக்ஸலன்ஸி?'' என்றான் கிளைவ், கவர்னர் இங்கு வருமுன்பு செய்து கொண்ட முன்னேற்பாட்டினால் பெரு வியப்படைந்து.

கவர்னரின் இதழ்களில் ஒரு புன்னகை அரும்பியது. ''இங்குள்ள கன்ஃப்யூஷனை..இதற்குச் சரியான தமிழ்? எஸ்..எஸ்..குழப்பத்தை, குளறல்களைச் சரியாக்க முடியுமா என்று கேட்டார்கள்,'' என்று புன்னகையின் ஊடே அறிவித்தார்.

''தாங்கள்....?'' என்று கிளைவ் துவங்கினான்.

''முடியும் என்று பதில் சொல்லவில்லை.''

''வேறென்ன சொன்னீர்கள்?''



பிரிட்டிஷ் டெலிவிஷனில் இந்திரா காந்தியுடன் பேட்டி நடத்திய டேவி பிராஸ்ட் சொன்னார்: ''சாதாரண தேர்தல் தோல்வியாகத்தான் இந்திரா எடுத்துக் கொண்டிருக்கிறார். பூகம்பமாகக் கருதவில்லை.''



ஹிரண்யகர்ப அதிகாரி (கிருஷ்ண கான்ஷஸ்னஸ்)காயமடைந்தார். மாயாபூரிலுள்ள (வங்காளம்) சந்திரோதயா கோவிலில் உள்ளூர் வாசிகளுடன் ஏற்பட்ட மோதலே காரணம். இப்போது சமாதான உதயம் ஆகியிருக்கிறதாம்.



ஜார்ஜ்பெர்னாண்டஸின் வெடிகுண்டுத் திட்டங்கள் பற்றிய முழு விவரங்களை அவரது கூட்டாளியான வி. ஜி. கே. ரெட்டி புத்தகம் எழுதி வருகிறார். ('ஹிந்து' ஜி. கே. ரெட்டி அல்ல.)





படத்துக்குப் படம் ஆறு வித்யாசங்கள் இருக்கின்றன. அடுத்த பக்கத்தில் அவை.

"பிரெஞ்சு பலத்தை ஒடுக்குவதாகச் சொன்னேன்," என்ற கவர்னர், தாம் அதிகம் பேசிவிட்டதை உணர்ந்து, "ஸோ ஐ ஸ்டடீட் த டஸ்பாட்சஸ் ஃப்ரம் ஹியர்," என்று ஆங்கிலத்தில் இறங்கி, "இங்குள்ள கதையின் நுணுக்கங்களை அறிந்துதான் வந்தேன்," என்று முடித்தார். முடித்து எதிரேயிருந்த இருவரையும் ஒருமுறை மாறி மாறி நோக்கினார்.

அதற்கு மேல் கிளைவ் ஏதும் பேசாவிட்டாலும் விஜயகுமாரன் மட்டும் கேட்டான், "நான் சந்தா சாகேபைக் கொல்லப் போவதாக யார் சொன்னது உங்களுக்கு?" என்று.

கவர்னர் அவன் கேள்வியைக் காதில் வாங்கிக்கொண்டாலும் அதற்கு நேரிடையாகப் பதில் சொல்லவில்லை. "யூ ஆர் லைக் மி," என்று மட்டும் பதில் சொன்னார்.

அந்தப் பாராட்டுதலைக் கேட்ட விஜயகுமாரன் தலை வணங்கி, "ஹௌ யுவர் எக்ஸலன்ஸி?" என்று ஆங்கிலத்திலேயே கேட்டான்.

"உனக்கு பிரெஞ்சு மொழி தெரியுமா?"

"தெரியாது."

"தென் யூ ஆர் நாட் குட்."

"யுவர் எக்ஸ்லன்ஸி!" என்ற விஜயகுமாரன் குரலில் சிறிது சினம் தெரிந்தது.

கவர்னர் அவன் சினத்தை லட்சியம் செய்யாமல் அவனைக் கூர்ந்து நோக்கிவிட்டுச் சொன்னார்; "நீ எங்களிடம் சேர இங்கிலீஷ் பழகியிருக்கிறாய். தட் ஈஸ் குட். ஆனால் சந்தா சாகேபை அழிக்க பிரெஞ்சு மொழி பழகவில்லை. தட் ஈஸ் பாட். நாம் யாரை நசுக்கப் பார்க்கிறோமோ அவர்களுடைய போக்கைப் புரிந்து கொள்ள வேண்டும். போக்கைப் புரிந்து கொள்ள மொழியைப் புரிந்து கொள்ள வேண்டும். நீ சந்தாசாகேபைக் கொல்லத் தீர்மானித்திருக்கிறாய். அது தவறல்ல. அவர் உன் தாயைக் கொன்றிருக்கிறார்."

விஜயகுமாரன் கண்கள் பெரிதாக மலர்ந்தன. வாயை இருமுறை திறந்து மூடினாலும் சொற்கள் வெளிவரவில்லை. கவர்னரே விளக்கினார் மேற்கொண்டு. "சந்தா சாகேப் உன் தாயார் ராணி மீனாட்சியை நேரிடையாகக் கொல்லவில்லை. ஒரு ராணி மீனாட்சியை சந்தா சாகேப் காப்பதாகச் சத்தியம் செய்தார். ஆனால் சத்தியத்தை மீறினார். அவளைச் சிறையிட்டார். அதனால் அவள் தற்கொலை புரிந்துகொண்டாள் என்ற ஒரு கதை உலாவுகிறது பிரிட்டனில். அவளுக்கொரு வளர்ப்பு மகன் இருந்ததாகவும் அவன் பெயர் விஜயகுமாரன் என்றும் பேசிக்கொண்டார்கள். ஐ ரிகார்டட் தட் ஸ்டோரி இன் மை மைண்ட். அப்படியொருவன் இருந்தால் அவனை ஒரு கருவியாகக் கொண்டு சந்தாசாகேபையும் அவர் மூலம் பிரெஞ்சு பலத்தையும் அழிக்கலாமென இங்கிலாந்தி

லேயே திட்டம் போட்டேன். யூ ஸி தேர் ஈஸ் நோ பெட்டர் வெபன் தான் எ டிட்டர்மின்ட் மான் (உள்ளத்தில் ஒரு நிர்மானத்தை ஏற்படுத்திக் கொண்ட மனிதனைவிட பெரிய ஆயுதம் கிடையாது எதிரிகளைத் தொலைக்க). ஸோ ஐ டிஸைடட் டு யூஸ் யூ.'' அத்துடன் முடிக்கவில்லை கவர்னர். ''அண்ட் யூ (உன்னையுந்தான்),'' என்று கிளைவையும் நோக்கி ஆள்காட்டி விரலைக் காட்டினார்.

கிளைவோ, விஜயகுமாரனோ நீண்ட நேரம் பேசவில்லை. கவர்னர் மீண்டும் தமது நாற்காலிக்குச் சென்று அமர்ந்து கொண்டு இருவரையும் நோக்கியவண்ணம் மௌனம் சாதித்தார். அறையில் பலவினாடிகள் நிலவிய அந்த மௌனத்தைக் கிளைவ் கலைத்தான். ''என்னை எப்படி உபயோகப்படுத்த உத்தேசம்?'' என்று வினவினான்.

''என் பிரதிநிதியாக,'' என்றார் கவர்னர்.

---

**விடை:**

1. பேனாக்கள்
2. கடியார விநாடி முள்
3. டெலிபோன் ஒயர்
4. மேஜைக் கால்கள்
5. கைப்பையில் பூ
6. கிருதா

---

''நான் காப்டனாகி ஒரு மணி நேரங்கூட ஆகவில்லை.''

''நேரம் வீரனை சிருஷ்டிப்பதானால், புத்திசாலிகளை சிருஷ்டிப்பதானால், கிழவர்கள் அத்தனை பேரும் வீரர்களாகவும் புத்திசாலிகளாகவும் இருப்பார்கள்,'' என்றார் கவர்னர்.

''எனக்கு அதிக ராணுவ அனுபவம் கிடையாது.''

''மூளையிருக்கிறது. வெற்றிக்கு அதுதான் முக்கியம்.''

கிளைவ் மேற்கொண்டு எதுவும் பேசவில்லை. கவர்னர் தாமதிக்காமல் உத்தரவுகளைப் பிறப்பித்தார். ''கிளைவ்! நீ சென்னை சென்று அங்குள்ள கோட்டையைத் திடப்படுத்து. பிரெஞ்சு ஒற்றர்கள் கோட்டையிலிருந்தால் சுட்டுவிடு. சுதேசிகளைத் தேவையான அளவு சேர்த்துக்கொள். அவர்களுக்கு நமது போர்ப் பயிற்சியை அளி. அங்கு ஒரு பலமான ராணுவம் தேவை எனக்கு. விஜயகுமார்! நீ தஞ்சைக்குச் செல். தஞ்சை அரசரிடம் நாம் அவரை முழு மூச்சுடன் காப்பதாகச் சொல். அதிக நாள் அங்கு தாமதிக்காதே. அங்கு யாரோ ஒரு பெண் இருப்பதாக நேற்று ஆர்டர்லி சொன்னான்: ஐ டோண்ட் மைண்ட் யுவர் லவ் அஃபேர்ஸ். இருந்தாலும் இப்பொழுது போர் முக்கியம். லவ் கேன் வெய்ட். அங்கிருந்து ஆற்காட்டுக்கு அப்பாலுள்ள மலைச்சாரலுக்குச் செல். அங்கு முராரி ராவைச் சந்தித்து, புதிய கவர்னர் அவனுக்கு ஆதரவு அளிப்பார் என்று என் சார்பில் உறுதி கூறு. தட்ஸ் ஆல்.''

இந்தச் சமயத்தில் விஜயகுமாரன் ஒரு சந்தேகம் கேட்டான்: ''நாம் தஞ்சை மன்னருக்குப் பல சமயங்களில் உதவ மறுத்திருக்கிறோம். சந்தா சாகேபும் முஸபர் ஜங்கும் ஆதுனில், டிக்விஸ்னோ இவர்களுடன் தஞ்சையை முற்றுகையிட்டபோதுகூட பிரிட்டிஷார் கையை அசைக்கவில்லை. தஞ்சை மன்னரிடம் நான் என்ன சொல்ல?''

''கதை மாறிவிட்டதென்று சொல். வெகு சீக்கிரம் வால்கொண்டா, வேலூர், ஆற்காடு அனைத்தும் தாக்கப்படும் என்று கூறிவிடு.''

கிளைவ் பேச நா எழாமல் நின்றான். ''நமது நடுநிலைமைக்கொள்கை பாதிக்கப்படும்,'' என்றான் மெல்ல.

''இரண்டு புலிகளுக்கிடையில் மனிதன் இருப்பதுதான் நடுநிலைக் கொள்கை. ஒன்று மனிதன் அவற்றை அழிக்கிறான், இல்லையேல் அவன் அழிந்து போகிறான்,'' என்று ஓர் உவமையைக் கூறிய கவர்னர், அவர்கள் இருவரும் போகலாமென்பதற்கு அறிகுறியாகக் கையை அசைத்துவிட்டு, ''ஆர்டர்லி!'' என்று அழைத்தார்.

ஆர்டர்லி தலையை நீட்டினான். ''காப்டன் கிளைவும் லெப்டினன்ட் விஜயகுமாரும் கிளம்புகிறார்கள். கெட் மை ப்ரெக்பாஸ்ட்,'' என்று இரும்புக் குரலில் உத்தரவிட்டார். அத்துடன் எழுந்திருந்து, ''தாங்யூ ஜென்டில்மென்,''

புதுக்கதை தொடங்குவதைக் காப்டனும், லெப்டினன்டும் சந்தேகமற அறிந்தார்கள்.

(தொடரும்)


Binaca
top
toothpaste











தஞ்சை அரண்மனையின் மூன்றாவது உப்பரிகையின் தனிப் பெரும் அறையொன்றைச் சாளரத்தின் மூலம் எட்டிப் பார்த்த முழுமதி துன்பப் பெருமூச்சு விட்டான். இல்லாவிட்டால் தன் குளிர் கிரணங்களைத் தென்றலுடன் கலந்து அனுப்புவானா? அனுப்பினாலும் பஞ்சணையில் படுத்துக் கிடந்த பைங்கிளி நந்தினியின் உடலைக் கிரணங்களால் தழுவத்தான் தழுவுவானா? தழுவினவன் தன் வல்லமையின் எல்லையை உணரத்தான் செய்தானா? இல்லையே! ஓராண்டு காலமாக அந்தக் கட்டழகியின் உள்ளத்தைக் குளிரச் செய்ய பல்மாதிரி முயன்று முயன்று தோற்றுப் போனவன் மீண்டும் ஏன் அதே முயற்சியில் ஈடுபடுகிறான்? உடல் குளுமைப்பட்டால் உள்ளம் குளுமைப்பட்டுவிடும் என்ற வீண் நினைப்பினால் விடா முயற்சியில் இறங்கினானா. அல்லது காலத்தின் நடையும் தன் கிரணத்தின் வலிமையும் இணைந்தால் அவள் இதயத்தை இன்பத் தடாகமாக அடித்துவிட முடியும் என்ற வீண் பிரமையால் அவள் உடலை மீண்டும் தடவிக் கொடுத்தானா? பலன் எப்படியானாலும் அவனுக்கு அந்தக் கட்டழகியிடம் மிகுந்த ஆசை இருக்கவேண்டும். ஆகையால் தான் அன்றுகூட அவள் மீது பூர்ணமாகத் தன் கிரணங்களை ஏவினான். இப்படித்தானே கலையிழந்தான் முன்பு? மீண்டும் எதற்காக அந்தத் துர்ப்புத்தி அவனுக்கு? ஆனால் புத்தி யாருடைய இஷ்டப்படி இயங்குகிறது? புத்தி கர்மானுஸாரேண என்று கர்மத்தின் வழியே அது இயங்குகிறதல்லவா?

ஆனால் திடீரென்று தனம் கிடைத்த மனிதன் அடுத்தபடி காத்திருக்கும் அனர்த்தத்தை எண்ணிப் பார்க்காதது போல பூர்ணமாகக் கலைகளைப் பெற்ற முழுமதி மறுநாள் முதல் கலையை இழக்கப் போகிறோமே என்ற நினைப்பு சிறிதுமின்றி, தனது செயலைத் திறம்படவே செலுத்தினாலும், பஞ்சணையில் கிடந்த நந்தினி அவன் செய்கையால் சிறிதும் பாதிக்கப்படவில்லை. தன் மீது விழுந்திருந்த பட்டு நிலவை அவள் நினைத்துக்கூடப் பார்க்கவில்லையாதலால் அது தன் மேனிக்கு எத்தனை

அழகைத் தந்திருக்கக் கூடும் என்ற யோசனையும் சிறிதுமில்லை அவளுக்கு. யோசனை அவளுக்கில்லாவிட்டாலும் அந்த அறை வாசலில் ஆஜானுபாகுவாக நின்றிருந்த உருவத்துக்கு இருக்கவே செய்தது. பளிங்கு நிலவில் வெளேரென்று கிடந்த நந்தினியின் உருவம் பெரிதும் இளைத்துவிட்டதைக் கவனித்த அந்த உருவம் தன்னையே வெறித்துக் கொண்டதற்கு அடையாளமாக, அதன் கண்களில் ஒரு மந்தச் சாயையும் பெருத்த மீசையின் கீழிருந்த வலுத்த உதடுகளில் ஒரு மடிப்பும் காணப்பட்டன. அதன் விளைவாக விசாலமான வதனத்தில் கூடத் துன்பச் சாயை பிரதிபலிக்கத்தான் செய்தது. எந்தத் துன்பத்தையும் தாங்க வல்ல அந்தத் திட சரீரமும் மனமும் இந்தக் குழந்தையின் வேதனையை, வேதனை விளைவித்த இளைப்பை, தாங்கமுடியாமல் தவித்தன வென்பதை அது நின்றிருந்த தோரணையே நிரூபித்தது. இப்படி நீண்ட நேரம் நின்றிருந்த உருவத்தை அதற்குப் பின்னுலிருந்து மற்றெரு உருவம், "நேரமாகிறது. அரசகுமாரியை எழுப்புங்கள்," என்று கூறவே திடகாத்திர உருவம் பஞ்சணையை நோக்கி மெள்ள நகர்ந்து நந்தினியின் நெற்றியின் மீது கையை வைத்தது மெல்ல.

நந்தினியின் உதடுகள் மெல்லத் திறந்து, "மகாராஜா!" என்றன.

மகாராஜா பிரதாப் சிங்கின் பெருத்த மீசை சிறிது அசைந்தது உதடுகளின் அசைவால். "மகளே! விழித்துக் கொண்டா இருக்கிருய்?"

"ஆம் மகாராஜா!" என்ற நந்தினியின் உதடுகள் லேசாக விரிந்தன புன்முறுவலைக் காட்ட. அந்தப் புன்முறுவல் அழகாகத் தான் இருந்தது. ஆனுல் வேதனையும் சிலருக்கு அழகு தருகிறதல்லவா?

அந்தப் புன்முறுவலைக் கவனித்த மகாராஜா பிரதாப் சிங்கின் வதனத்திலும் வருத்தம் படர்ந்தது. "கண்களை விழிக்கவில்லையே நீ?" என்ருர் மகாராஜா வருத்தத்தின் ஊடே.

"ஆம் மகாராஜா!"

"அப்படியானுல் நான் வந்திருப்பதை எப்படி அறிந்து கொண்டாய்?"

"புலன்கள் விழித்திருந்தன."

"அப்படியா!"

"ஆம் மகாராஜா! நீங்களும் டபீர் பண்டிதரும் படிகளில் ஏறி வரும் சத்தம் கேட்டது," என்ற நந்தினி மெல்லத் தனது கண்களையும் விழித்தாள்.

மகாராஜா மட்டுமல்லாமல் அவருக்குப் பின்னுல் அறைக்குள் நுழைந்த டபீர் பண்டிதரும் அரசகுமாரியின் சொற்களைக் கேட்டதும் பிரமித்து நின்ருர். "காலடிகளின் ஒலி வித்தியாசங்கூட அரசகுமாரிக்குத் தெரியும் போலிருக்கிறது?" என்ருர்.

"ஆம் தெரியும்."

படுக்கையில் அவளுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்ட மகாராஜா பிரதாப், "மிக விசித்திரம் நந்தினி!" என்று கூறி அவளது தலைமயிரைக் கோதி விட்டார்.

"இதில் விசித்திரம் ஏதுமில்லை. தங்களது திடமான புலியின் நடை, ஏறும்போது திட்டமாகத் தெரிந்தது. அடுத்தும் ஒரு ஒலி. ஏதோ மெதுவாகப் பூனை நடப்பது போலக் காதில் விழுந்தது," என்று விளக்கினுள் நந்தினி.

இதைக் கேட்ட மகாராஜா தமது துன்பத்தை மறந்து இரைந்தே நகைத்தார். அந்த நகைப்பு டபீர் பண்டிதருக்குத் திருப்தியளிக்கக் கார

---



பெங்களூர் நகரசபை குப்பை லாரிகளில் தீயணைப்பு வண்டியில் இருப்பது போல் மணி பொருத்தியிருக்கிருர்கள். மணிசத்தம் கேட்டவுடன் குப்பையைக் கொண்டுவந்து கொட்டிவிடலாம்.

—எல். நடராஜ்



ணமில்லையாதலால், "அரசகுமாரி! நான் பூனையா?" என்று வினவினார்.

"குழந்தை சொல்வதை அப்படியே எடுத்துக் கொள்ள வேண்டாம்," என்று மகாராஜா சமாதானப்படுத்த முயன்றார்.

"பின் எப்படி எடுத்துக்கொள்வது? குள்ளநரியென்று எடுத்துக் கொள்ளட்டுமா?" என்று சற்றுக் குரலில் எரிச்சலைக் காட்டினார் டபீர் பண்டிதர்.

"அதுவும் பொருந்தலாம்," என்ற நந்தினி மெள்ள படுக்கையில் எழுந்து உட்கார்ந்து கொண்டாள் தந்தையின் அருகில்.

அதற்கு மேல் தாங்காத டபீர் பண்டிதர், "மகாராஜாவின் சந்நிதானத்தில் நான் அவமானப் பட விரும்பவில்லை," என்று சற்றுச் சினத்துடன் கூறிவிட்டுத் திரும்ப முயன்றார்.

"சற்றுப் பொறுங்கள் அமைச்சரே!" என்றாள் நந்தினி.

திரும்பிச் செல்ல முயன்ற டபீர் பண்டிதர், "அரசகுமாரிக்குப் பெயர் சரியாகத்தான் ஏற்பட்டிருக்கிறது," என்று தமக்கும் பேச்சுத் திறமை உண்டென்பதை உணர்த்த முற்பட்டார்.

"என்ன பெயர் பண்டிதரே?" என்று வினவினாள் அரசகுமாரி.

"வாள்மகள்."

''அதைச் சொல்கிறீர்களா!''

''ஆம். வாளால் வெட்டுவது போல் மனிதர்களைச் சொல்லால் வெட்டுகிறீர்கள்.''

நந்தினி அவரை நோக்கவுமில்லை, நேரிடையாகப் பேசவுமில்லை. தந்தை பக்கம் தனது கண்களைத் திருப்பி, ''தந்தையே! சந்தாசாகிபும் பிரெஞ்சுப் படைகளும் மூன்று மாதங்கள் இந்தக் கோட்டையை முற்றுகை யிடவில்லையா?'' என்றாள்.

''ஆம்.''

''அந்த மூன்று மாத காலமும் போர் நடந்ததா?''

''இல்லை.''

''ஏன் இல்லை?''

''சமாதானம் பேசினோம்.''

''சமாதானம் பேச மூன்று மாதம் எதற்கு?'' இதைக் கேட்ட நந்தினி டபீர் பண்டிதர் மீது கண்களை நாட்டினாள். ''பண்டிதரே! உமது தந்திரத்தின் எல்லையை இந்த முற்றுகையில் தான் கண்டேன். முதல் நாள் ராஜபேரிகையைக் கொட்டச் செய்தீர். பிறகு வெள்ளைக் கொடியேந்தி சமாதானம் பேசச் சொன்னீர். இல்லையா?''

டபீர் பண்டிதர் அவள் சொல்லை ஆமோதிப்பதற்கு அறிகுறியாகத் தலையை மட்டும் அசைத்தார். அரசகுமாரி அடுத்த கேள்வியையும் தொடுத்தாள், ''அங்கு போய் என்ன சொன்னீர் சந்தாசாகிபுவிடம்?'' என்று.

அரசகுமாரியின் மூளை எந்தத் திக்கில் பாய்கிறதென்பதை நொடிப்பொழுதில் ஊகித்துக் கொண்ட டபீர் பண்டிதர், ''மகாராஜா சொல்லச் சொன்னதைச் சொன்னேன்,'' என்று மகாராஜா மீது திருப்பினார்.

''மகாராஜா என்ன சொன்னார்?'' என்று மீண்டும் கேட்டாள் நந்தினி.

''சமாதானத்தைக் கோருவதாகச் சொல்லச் சொன்னார்,'' என்றார் பண்டிதர்.

''சந்தா சாகேப் அதை ஒப்புக்கொண்டார்?''

''ஆம். ஆனால் நாம் ஆற்காட்டுக்குச் செலுத்த வேண்டிய பகுதிப் பணத்தைக் கட்டும்படி கேட்டார்.''

''தொகை எத்தனையோ?''

''இரண்டு கோடி ரூபாய்.''

''கொடுத்தீரா?''

''இன்று வரையில் இல்லை.''

''ஏன் கொடுக்கவில்லை? முன் பணமாக மூவாயிரம் கொடுக்கவில்லையா?'' என்று மகாராஜா சங்கடத்துடன் கேட்டார் பண்டிதரை நோக்கி.

''இரண்டு கோடிக்கு மூவாயிரம் அதிகம்தான்,'' என்றார் டபீர்.

## கண் தானம் செய்வது எப்படி?

'கண் தானம்' பற்றிய விவரங்களை ஒரு அன்பர் கேட்டிருந்தார். அதற்கான விவரம்: முதலில், தன்னுடைய இரு கண்களையும் இறந்த பின் 'தானம்' செய்ய வேண்டும் என்று கூறி அதற்கான பாரம் அனுப்பும்படி சூபரின்டெண்டெண்ட், அரசினர் கண் மருத்துவ நிலையம், எழும்பூர், சென்னை-8. என்ற விலாசத்திற்கு எழுதினால் அவர்கள் *Cornea Grafting Act 1969 Voluntary Donation of Eyes* என்ற பாரத்தையும் விவரத்தையும் அனுப்புவார்கள். அதைப் பூர்த்தி செய்து அனுப்பினால் போதும்.

—எம். பச்சையப்பன்

அண்மையில் நடந்தது ஒரு டெலிவிஷன் பேட்டி. பேட்டி கண்டவர்: சென்னை மாநகராட்சி மன்றக் கமிஷனர் திவான் முகம்மது. பேட்டி காணப்பட்டவர்: சமூகப் பணியாளர். பொருள்: 'நகரத்தைச் சுத்தமாக வைத்துக் கொள்வதென்றால் பொதுமக்கள் என்னென்ன செய்ய வேண்டும் என்று நினைக்கிறீர்கள்?'



''சாம்பார், ரசம், மோர், காரியர் அடுக்குகளுக்கு மட்டும் குழாய் வச்சிட்டான் என் மனைவி!''

பண்டிதர் தமது முழு விஷமத்தைக் காட்டினார்.

இந்த இடத்தில் நந்தினி குறுக்கிட்டு, ''சமாதானம் ஏற்பட்ட பிறகு மூன்று மாத காலம் முற்றுகை நடப்பானேன்?'' என்று வினவினாள்.

டபீர் பண்டிதர் உற்சாகத்தைக் காட்டினார் முகத்தில். ''பேரம் பேசினோம் பதினைந்து நாட்கள். ஒருநாள் நாலைந்து வைரக் கற்கள், இன்னொரு நாள் பொற்கிண்ணங்கள் இரண்டு, அடுத்த நாள் வெள்ளிக் குடங்கள் பதினைந்து. அதற்கும் அடுத்த நாள் இருபது புரவிகள். இப்படியாகக் கொண்டு காட்டினோம் மகாராஜா உத்தரவுப்படி. விலையில் சிறிது தகராறு. அதாவது அவர்கள் போட்ட மதிப்புக்கும் நமது மதிப்புக்கும் ஏற்றத்தாழ்வு அதிகமாயிருந்தது...'' என்று டபீர் பண்டிதர் உற்சாகத்துடன் கூறினார்.

''அதாவது உங்களுக்குப் பணம் கொடுக்க இஷ்டமில்லை. பேரம் பேசி இழுக்கடித்து நாளைப் போக்கினீர்,'' என்று நந்தினி விளக்கினாள்.

''போக்கினீர் என்பது சரியல்ல,'' என்று பொய்த் துன்பத்தை முகத்தில் காட்டினார் பண்டிதர்.

''என்ன தவறு?''

''இது என் யோசனையல்ல.''

''வேறு யார் யோசனையோ?''

பண்டிதரின் இதழ்கள் இகழ்ச்சியுடன் மடித்தன. ''மகாராஜாவைவிட யோசனை மிகுந்த யாரையும் நான் இங்கும் பார்க்கவில்லை, எங்கும் பார்க்கவில்லை,'' என்றார்.

இதைக் கேட்ட பிரதாப் சிம்ம மகாராஜா சிறிது பலமாகவே நகைத்தார். ''சபாஷ் பண்டிதரே! கடைசியில் பழியை என்மீதே போடுகிறீர்,'' என்றும் கூறினார்.

''பழியா! நாஸர்ஜங் பெரும் படையுடன் கிளம்பிவிட்டார் கர்நாடகத்தின் மீது என்ற செய்தியைக் கேட்டதுமே நாடகத்தை துவங்கினீர்கள். காலங்கடத்த எண்ணித் தினமொருதரம் ஏதாவது பொருளைக் கொடுத்துப் பேரம் பேசச் செய்தீர்கள். நாஸர்ஜங் வருவதை அறிந்ததும் பிரெஞ்சுக்காரர்கள் வடக்கு வாசல் காவலைத் தகர்த்து உள்ளே நுழைந்தார்கள். அதனால் மூவாயிரம் ரூபாயைக் கண்ணில் காட்டினீர்கள். அதை வாங்கிக் கொண்டு சந்தாசாகேபும், முஸபர்ஜங்கும் பிரஞ்சுக்காரரும் புதுவைக்கு ஓடினார்கள். வாலுபோச்சு கத்தி வந்தது டும் டும் என்று நாஸர் வந்தார், சந்தா போனார். பிறகு புஸ்ஸி வந்தார், நாஸர் போனார்..போனார்..அடுத்த படி...'' என்று வரலாற்றை விளக்கிக் கொண்டு போன பண்டிதரை மடக்கிய மகாராஜா, ''பண்டிதரே! வளர்த்த வேண்டாம். விஷயத்துக்கு வாருங்கள்,'' என்றார்.

பண்டிதர் இளநகை பூத்தார்: ''போன மச்சான் திரும்பி வந்தான்,'' என்று பழமொழியை எடுத்து வீசினார்.

''யாரது?'' என்று வினவினாள் நந்தினி ஆத்திரத்துடன். அந்த ஆத்திரத்தில் கட்டிலிலிருந்து கீழே குதித்துப் பண்டிதரை நோக்கினாள் சீற்றத்துடன். பண்டிதர் தாம் அடைத்துக் கொண்டிருந்த வாயிற்படியை விட்டு விலகி, ''மச்சான் வாருங்கள்,'' என்று உபசாரமாக அழைக்க விஜயகுமாரன் பூர்ண ராணுவ உடையில் உள்ளே நுழைந்தான்.

நந்தினி பிரமை பிடித்து நின்றாள் ஒரு விநாடி. அடுத்த விநாடி பண்டிதரையும் பார்த்துத் தந்தையையும் பார்த்தாள். ''இவர்...'' என்று ஏதோ கேள்வியை வீசினாள்.

மகாராஜா பிரதாப்சிங்கும் கட்டிலிலிருந்து இறங்கித் தரையில் நின்றார். ''பிரிட்டிஷ் பிரதிநிதி லெப்டினண்ட் விஜயகுமார்!'' என்று மகளுக்கு அறிமுகப்படுத்தினார். ''மேற்கொண்டு இவரை நீயே விசாரித்து முடிவு சொல்,'' என்று கூறி, பண்டிதருடன் அறையை விட்டு அகன்றார்.

(தொடரும்)



ஒரே களைப்பாக இருக்கிறது-
சமையல் செய்யச் சக்தி
இல்லை. க்ளாக்ஸோஸ்-D
குடிக்க வேண்டும்.

# க்ளாக்ஸோஸ்-D®

## சில நிமிடங்களுக்குள் சக்தி பெறுவதற்கு

வீட்டு வேலைகளினால் நீங்கள் அலுத்துப் போவதற்குக் காரணம், சக்தியின் முக்கிய பிறப்பிடமான க்ளூகோஸை உங்கள் உடல் இழப்பது தான்.

க்ளாக்ஸோஸ்-D உங்களுக்கு உடனடியாகச் சக்தியளிக்கிறது. அது விட்டமின்-D, கால்ஷியம் மற்றும் ஃபாஸ்பேட்டுகளினால் வலுவூட்டப்பட்ட க்ளூகோஸ். அதை தேநீர், காப்பி, பால், பழரசம், தண்ணீர் ஆகிய எதிலும் கரைத்தும் குடிக்கலாம், அப்படியேவும் சாப்பிடலாம். அது குடும்பத்தினர் அனைவருக்கும் உடனடியான சக்தியைத் தருவது.






**க்ளாக்ஸோஸ்-D®**

– குடும்பம் முழுவதற்கும்.

dCA/GL/46F TAM

# அந்தப்புர அரசியல்

## ராஜ பேரிகை

சாண்டில்யன்

அரண்மனை விதிகளை அரசரே தகர்க்க முற்பட்டால் வேலியே பயிரை மேயும் கதையாகாதா என்றுகூட வினவிக்கொண்டாள்...

1-9-77

15
16

'பிரிந்தவர் கூடினால் பேசல் வேண்டுமோ?' என்ற கம்பன் காவிய உரை காலத்தால் மறைய வில்லையென்பதை, தனித்துவிடப்பட்ட விஜயகுமாரன், நந்தினி இருவருமே நிரூபித்தார்கள் அன்று. அந்த மூன்றாவது உப்பரிகையில் அரசகுமாரியின் அந்த ரங்க அறையில்.

நீண்ட நேரம் இருவரும் ஏதும் பேசாவிட்டாலும் இருவர் உள்ளங்களும் தனித்தனியாக ஏதோ பேசிக் கொண்டுதானிருந்தன. அரச மகளிரின் அந்தப்புரத்துக்குள் யாரும் அனுமதிக்கப்படுவதில்லையென்பதும், அப்படித் தவறி வந்து விடுபவருக்குக்கூடக் கடுமையான தண்டனை உண்டென்பதும், அறையில் நின்ற இருவருக்குமே நன்றாகத் தெரியும். அதுவும் அரண்மனையின் அடிப்பகுதியிலிருக்கும் அரச மகளிர் வாசஸ்தலத்துக்கு வருவதே பெருங் குற்றமாயிருக்க, தோழியரையும் தாய்மார்களையும் தவிர, வேறு யாருமே வர முடியாத, வரக்கூடாத மூன்றாவது உப்பரிகைக்கு மன்னர் எப்படி இவரை அழைத்து வந்தார் என்று அரசகுமாரி தன்னைத்தானே கேட்டுக் கொண்டாள்.

அரண்மனை விதிகளை அரசரே தகர்க்க முற்பட்டால் வேலியே பயிரை மேயும் கதையாகாதா என்றுகூட வினவிக்கொண்டாள். 'எல்லாவற்றுக்கும் சிகரம் வைத்தாற்போல், பாலுக்குப் பூனையைக் காவல் வைத்த கதையாக இவரை எனக்குக் காவல் வைத்துவிட்டுப் போயிருக்கிறாரே தந்தை? இதைவிட விசித்திரம் என்ன இருக்க முடியும்?' என்ற வினாவையும் மனத்திலே எழுப்பிக் கொண்டாள். இத்தகைய நினைப்புகளால் ஏற்பட்ட சங்கடத்தால், நாணத்தால், பொய்க் கோபத்தால், நந்தினி சட்டென்று திரும்பிச் சாளரத்தை நோக்கிச் சென்று முழுமதியை உற்று நோக்கினாள் காரணமின்றி.

விஜயகுமாரன் மனநிலையும் பெரும் சங்கடத்தில்தானிருந்தது. பிரிட்டிஷ் கவர்னரிடமிருந்து தான் தூது வந்ததைச் சொன்னதும் மகாராஜா டபீர் பண்டிதரை வரவழைத்ததும், அவரிடம் தனது தூதைப்பற்றி எடுத்துரைத்து யோசனை கேட்டதும், அவர்

இதைத் தன்னைக் கேட்பதில் பயனில்லை என்று கூறியதும், பிறகு மகாராஜா ஏதோ தீவிர யோசனை செய்துவிட்டு 'அப்படியானால் வாருங்கள்' என்று தங்கள் இருவரையும் அந்தப்புரத்துக்கு அழைத்து வந்ததும் பெரும் வியப்பை அளித்தது விஜயகுமாரனுக்கு. 'போர் விஷயங்களைப்பற்றி ஆலோசனை கேட்க வேண்டுமானால் மானாஜியைக் கேட்டிருக்க வேண்டும் மன்னர். அதற்குப் பதில் டபீர் பண்டிதரைக் கேட்கிறார். பண்டிதர் அதற்குப் பதில் சொல்லாத போது அவரையும் சேர்த்து அந்தப்புரத்துக்கு இழுத்து வருகிறார். இங்கு தூதைக் கேட்டு முடிவு செய்யும்படி அரசகுமாரியிடம் சொல்லிவிட்டுச் செல்கிறார். மன்னரின் அபிப்பிராயம்தான் என்ன?' என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டான். அந்தப்புரத்திற்குள் நுழையு முன்பு டபீர் பண்டிதர் ஆட்சேபித்ததும், அதற்கு மன்னர் தந்த பதிலும்கூட அந்தச் சமயத்தில் அவன் அகத்தே எழுந்து பெரிதாக இரையவே செய்ததால், அவன் உதடுகளில் லேசான புன்முறுவலும் உதயமாயிற்று.

அந்தப்புரத்தின் ஆரம்ப வாயிலுக்கு வந்ததுமே டபீர் பண்டிதர் ஆட்சேபணை கிளப்பி, "மகாராஜா! இது அந்தப்புரம்...." என்று குறிப்பிட்டார்.

"என் அந்தப்புரம் எனக்கே தெரியாதென்று நினைக்கிறீரா?" என்று முன்னே சென்ற மகாராஜா திடீரென்று திரும்பிப் பின்புறம் பார்த்துப் பண்டிதரை நோக்கி வினவினார்.

"ஏன், தங்களுக்குத் தெரியாமலென்ன?" என்று இளக்காரமாகப் பதில் சொன்னார் பண்டிதர்.

"தெரிந்து நான் செய்வதை நீர் தடை செய்ய வேண்டிய அவசியமென்ன?" என்று பிரதாப் சிங் வினவினார்.

"அரசியல் விஷயங்களை முடிவு செய்ய அந்தப்புரத்தில் என்ன வேலையென்று யோசித்தேன்," என்றார் பண்டிதரும் தமது விஷமத்தை விடாமலே.

மகாராஜா புன்முறுவல் கோட்டினார். "பண்டிதரே!" என்றும் விளித்தார் முறுவலின் ஊடே.

"மகாராஜா!" பண்டிதர் அதிகப் பணிவைக் காட்டினார்.



"இப்பொழுது இந்த நாட்டில் யார் பலம் ஓங்கி நிற்கிறது?"

"பிரெஞ்சு பலம்."

"யாரால் ஓங்கி நிற்கிறது?"

"டூப்ளேயால்."

"டூப்ளேயின் பிரதான ஆலோசகர் யார்?"

"மகாராஜா...." என்று இழுத்தார் பண்டிதர் மகாராஜாவின் நோக்கத்தைப் புரிந்து கொண்டு.

"கேள்விக்குப் பதில் சொல்லுங்கள் அமைச்சரே," என்றார் மகாராஜா.

"டூப்ளேயின் மனைவியார் மேடம் வின்ஸென்ஸ்."

"இப்பொழுது ஒப்புக் கொள்கிறீரா?"

"எதை?"

"அந்தப்புரத்து ஆலோசனை அவசியமென்பதை," என்ற மகாராஜா அத்துடன் விடவில்லை. "பண்டிதரே! முக்கால்வாசி விவகாரங்கள் உலகத்தில் பள்ளியறைகளில்தான் முடிவாகின்றன," என்றும் உணர்த்தினார் பண்டிதருக்கு.

பண்டிதர் பெரிய வட்டாவுடனிருந்த தலையை மிக மரியாதையாகவும் ஏளனமாகவும் அசைத்தார். "மகாராஜாவின் சிறந்த பல முடிவுகளுக்கு வித்து எங்கிருக்கிறது என்பதை இன்றுதான் புரிந்து கொண்டேன்," என்று கூறவும் செய்தார். இதைக் கேட்ட மகாராஜா லேசாக நகைத்துவிட்டு மாடிப்படிகளில் ஏறலானார்.

அவருடன் தானும் பண்டிதரும் ஏறி வந்ததையும் மகாராஜா தன்னை நந்தினியின் அறையில் விட்டுப் போய்விட்டதையும் எண்ணிப் பார்த்த விஜயகுமாரன், மகாராஜாவின் நடவடிக்கைகளுக்கு ஏதோ ஆழ்ந்த கருத்து இருக்க வேண்டும் என்று மட்டும் அறையில் நின்ற அந்தச் சில விநாடிகளில் தீர்மானித்துக் கொண்டான். இத்தகைய யோசனைகளில் அவன் திளைத்திருந்த சமயத்திலும் சாளரத்தண்டை நின்ற நந்தினியின் பேரழகை அவனால் பருகாதிருக்க முடியவில்லை.

நந்தினி சாளரத்தண்டை நாணியோ ஒடுங்கியோ, சாளரத்தை இரண்டாகப் பிரித்த நடுக்கட்டையில் சாய்ந்தோ நிற்காமல் செங்குத்தாகச் சாளரத்தின் ஒரு பகுதியில் முழு நிலவு அவள் பூவுடலைக் குளிப்பாட்டத் திடமாக நின்றிருந்த கோலத்தில் காதலியின் கோலத்தைவிட அரசகுமாரியின் தோரணையே அதிகமாயிருந்தது. முழுமதியின் கிரணங்கள் அவள் முன்புறத்தை என்ன செய்தனவோ,



அசோக வனத்தில் சீதை துயருடன் இருந்தாள். ஒரு குளவி புழுவாக இருந்து அப்போதுதான் குளவியாகிக் கூட்டை விட்டு வெளியே சென்றது. அதைப் பார்த்து நெடுமூச்செறிந்தாள் சீதை.

உடனிருந்த திரிசடை அவள் மன நிலைக்குக் காரணம் கேட்டாள். சீதை சொன்னாள்: "குளவியை எப்போதுமே நினைத்துக்கொண்டிருந்த புழு. குளவிபோலவே ஆகிப் பறந்து சென்றது. நானும் ராமனையே நினைத்து ஏங்குகிறேன். அதனால் ராமனாக உருமாறி விடுவேனோ என்று அஞ்சுகிறேன்." அதற்குத் திரிசடை, "அதனால் கவலைப் படாதே. ஏனென்றால் நீ ராமனாகிவிட்டால் உன்னையே நினைத்துக் கொண்டிருக்கும் ராமன் சீதையாகி விடுவான். ராமாயணத்தில் எப்போதும் ஒரு ராமன் ஒரு சீதைதான் உண்டு. கவலைப்படாதே," என்று பதிலளித்தாள்.

—தருமபுரி—இளங்கோவன்;

அவனுக்குத் தெரியாது, பின் பகுதிகளுக்குப் பெரும் மெருகை ஊட்டிவிட்டதை மட்டும் அவன் புரிந்து கொண்டான். அத்தனை நேரம் படுத்துக்கிடந்ததால் தலையின் மல்லிகைச்சரம் ஓரளவு கசங்கியும் சில மலர்கள் உதிர்ந்துமிருந்தாலும் நிலவொளியில் அது ஈடு இணையற்ற அழகைப் பெற்று இயற்கை வெளுப்பை விட அதிக வெளுப்பைப் பெற்றிருந்தது. அதற்குப் பின்னணியாக இருந்த கறுத்த குழல் திரைகூடக் கண்ணைப்பறிக்கும் வண்ணம் பளபளத்தது. நிலவு முன்பக்கமிருந்ததின் விளைவாக அவள் கழுத்தின் பின்புறத்தின் முழுவெண்மை தெரியாவிட்டாலும், கழுத்தின் இருபுறங்களின் வழவழப்பும் வெளுப்பும் அவன் கண்களுக்கு ஏதோ ஒரு புதுவித விருந்தை அளித்தன.

ரவிக்கைக்கும் சிற்றிடையில் இழுத்துக் கட்டப்பட்டிருந்த சேலைக்குமிடையே தெரிந்த சதைப்பற்றின் உறுதியும் வழவழப்பும் அவன் சித்தத்துக்கு என்னென்ன இம்சைகளை அளித்துக் கொண்டிருந்தன என்பதை விவரிக்க முடியவில்லை. அந்த இடைக்குக் கீழே முன்பு லேசாகப் பருத்திருந்த பகுதிகள் இப்பொழுது சற்று அதிகமாகப் பருத்திருந்ததால். அவன் உள்ளம் உன்மத்தத்தை அடைந்தது. அந்த உன்மத்தத்தின் விளைவாகவோ என்னவோ அவன் மெல்லப் பூனைபோல் நடந்து அவளை அணுகி இடையை ஒரு விநாடி இறுகப் பிடித்தான். பிறகு அவள் சிறிய தோள்களைப் பிடித்துத் தடவி, அவள் உடலுடன் தன் உடலை லேசாக இணைய விட்டு, ''அரசகுமாரி!'' என்று மெல்ல அவள் காதுக்கருகில் குனிந்து அழைத்தான்.

அரசகுமாரி அவனுக்குப் பதில் சொல்லவுமில்லை, திரும்பவுமில்லை. குளிர்மதி சற்று முன்பு கிரணங்களால் செய்த கொடுமையைவிட அதிக இம்சையை அந்த ஆண்மகனின் அண்மையும் கைகளும் அவளுக்கு அளித்து உடலில் நெருப்பை வாரிக்கொட்டின. அவன் தன்னை நோக்கி நகர முற்பட்டதுமே தனது இதயம் படபடவென அடிக்கத் துவங்கிவிட்டதை அறிந்த அரசகுமாரி, 'அருகில் எத்தனை சொந்தமாக இடையைத் தொட்டார்? உம்.. நல்லவேளை தோளுக்கு உயர்த்தினரே கைகளை.... ஆனால் என்ன பயன். இவர் உடல் அனுபவிய மாகப் படுகிறதே பின்னால் என்மேல்' என்று அவன் ஒவ்வொரு செய்கையையும் அனுபவித்தாலும், என்ன காரணமாகவோ கோபத்தினால், ''உம்,'' என்று உம் கொட்டினாள் அவன் கேள்விக்கு.

''நீண்ட காலம் கழித்து வந்திருக்கிறேன்,'' என்ற விஜயகுமாரன் தோளிலிருந்த கைகளால் அவள் உடல் பூராவையும் சுற்றினான்.

அரசகுமாரியின் முகம் முன்பிருந்ததால். அவள் இதழ்களில் காதல் பிரவாகித்த முறுவல் படர்ந்ததை விஜயகுமாரனால் பார்க்க முடியாததால் அவள் முறுவலை அடக்கி வேகத்துடன் கேட்டாள், ''அதற்காக என்ன செய்யச் சொல்கிறீர்கள்?'' என்று.

விஜயகுமாரன் சங்கடம் அதிகமாயிற்று. ''இதென்ன கேள்வி நந்தினி?'' என்று அரசகுமாரி என்பதைக் கைவிட்டு உரிமையைக் காட்டினான் விஜயகுமாரன் அத்தனை சங்கடத்திலும்.

அரசகுமாரி கடுமையான குரலிலேயே கேட்டாள் தலையைத் தூக்கி முழுமதியை நோக்கிய வண்ணம். ''வேறென்ன கேள்வியை எதிர்பார்க்கிறீர்கள்?''

மதியை நோக்கி அவள் தலை உயர்ந்ததால் கழுத்தும் சற்று நீண்டு உயர்ந்ததையும், அது மதி ஒளியில் எத்தனையோ இன்ப ஜாலங்களை அள்ளி வீசியதையும் கவனித்த விஜயகுமாரன் அதுவரை அடக்கி வைத்திருந்த உணர்ச்சிகளை வெளியிலிருந்து வந்து கொண்டிருந்த தென்றலில் பறக்கவிட்டுத் தன் இதழ்களைத் துணிவுடன் அவள் கழுத்தில் புதைத்தான்.

அப்படிப் புதைந்த இதழ்களை அரசகுமாரி தடுக்க முயலவில்லை. அவன் இதழ்கள் அளித்த இன்ப வேதனையில் நெளியக்கூடச் சக்தியற்றவளானாள். நெளிந்தால் பின்னால் லேசாக அழுந்திய அவன் சரீரம் அதிகமாக அழுந்தி விடுமே என்ற பயமும், ஏன் அழுந்தவில்லை என்ற ஏக்கமும், ஏக்கம் விளைவித்த பலவித எதிர்பார்ப்புகளும், அவள் எண்ணங்களுக்கு ஏதேதோ விபரீதக் கற்பனைகளைக் கற்றுக்கொடுத்திருந்ததால், பெருமூச்சு மட்டும் விட்டாள் நந்தினி. அதன் பொருள் அவனுக்குப் புரிந்திருந்ததால் உதடுகளை நீக்காமலே, ''நந்தினி!'' என்று அழைத்தான் மெதுவாக.

''உம்.''

''எத்தனை நாளாகிறது?''

''உம்?''

''இதுதான் நந்தினி....''

''ஓ....''

''நந்தினி!''

''என்ன நந்தினிக்கு?''

''நமக்குள்....''

''நமக்குள்?''

''ஒளிவு மறைவு....''

''வேண்டாமென்கிறீர்கள்,'' என்ற நந்தினி சரேலென்று அவன் கைகளில் சுழன்று திரும்பினாள். இருவர் கண்களும் சந்தித்தன, ஆயிரம் கதைகளைச் சொல்லின. நேருக்கு நேர் இருந்ததால் இடையே அதுவரை அவர்களை மறைத்திருந்த சங்கடத் திரையும் அகன்றது. விஜயகுமாரன் கண்கள் அவள் பங்கய விழிகளிலிருந்து சற்றுத் தாழ்ந்து



''ரப்பர் பாண்ட் ஆறு குறையுதே! எங்கே?''

வேறு இரு பங்கயங்களை நோக்கின. அந்த ஆண்மகனின் துணிவைக் கண்ட நந்தினி வியந்தாள். ''என்ன பார்க்கிறீர்கள்?'' என்றும் கேட்டாள்.

''உன்னைத்தான்.''

''இல்லையே.''

''ஏன் இல்லை?''

''முகத்தைப் பார்க்க மறுக்கிறீர்கள்.''

''முகம்....முகம்.''

''அத்தனை அழகாயில்லை?''

''சே சே! யார் சொன்னது.''

''எனக்கே தெரிகிறது.''

''எப்படி?''

''நீங்கள் என் முகத்தைப் பார்க்க மறுப்பதிலிருந்து. உங்கள் கண்கள் வெட்கத்தால் தாழ்ந்து விட்டதிலிருந்து. வெட்கத்தால்தானே வீரரே?'' என்று கேட்ட அரசகுமாரி திடீரென நகைத்தாள் சற்று வாய்விட்டு.

அவன் சட்டென்று அவளைச் சுற்றியிருந்த கைகளை நீக்கினான். ''இப்படி இன்னொரு சிரிப்பு! நான் கடமையை மறந்து விடுவேன், பண்பாட்டைக்கூடக் காற்றில் விட்டுவிடுவேன்....'' என்று அச்சத்துடன் சொல்லிக் கொண்ட விஜயகுமாரன் நந்தினியை விட்டு மெள்ள விலகி நின்று, ''அரசகுமாரி!'' என்று மரியாதையுடன் அழைத்தான்.

அவன் திடீரென விலகியதற்கும் அவளுக்குக் காரணம் புரிந்திருந்தது. அவன் அரசகுமாரியென மரியாதையுடன் மீண்டும் அழைத்ததற்குக் காரணம் புரிந்திருந்தது. அந்த ஒரு சொல் அவளிடமும் திடீர் மாற்றத்தை விளைவித்தது. குழைந்து கிடந்த அவள் முகம் திடீரெனத் தனிக் கம்பீரத்தை அடைந்தது.

''எஸ், லெப்டினண்ட்?'' என்று அவள் கூறினாள் அரசகுமாரி என்ற அதிகார தோரணையில், தான் அரசாங்க விஷயங்களைப் பேசத் தயாராயிருப்பதை அறிவுறுத்த.

அவள் திடீரென அரசியல் பேசும் பெருமாட்டியாகிவிட்டதைக் கவனித்த விஜயகுமாரன் வியப்படைந்தாலும் அதை வெளிக்குக் காட்டிக்

கொள்ளாமல், "இவி....:" என்று ஏதோ துவங்கினான்.

"மன்னர் விஷயத்தைப் பேசவோம். அதாவது உங்கள் தூது விஷயத்தைப் பேசவோம்," என்ற நந்தினி, "பேச இதுவும் சரியான இடம் தான். அந்தரங்க ஆலோசனைக்கும் அந்தப்புர ஆலோசனைக்கும் அதிகம் வித்தியாசமில்லை. சரி, சொல்லுங்கள்! ஸாண்டர்ஸ் என்ன எதிர்பார்க்கிறார்?" என்ற கேள்வியையும் திடமாக வீசினாள்.

விஜயகுமாரன் பிரமித்து நின்றான். "ஸாண்டர்ஸ்.,ஸாண்டர்ஸ்," என்று குழறவும் செய்தான்.

"எஸ்..தாமஸ் ஸாண்டர்ஸ், கவர்னர் அஃப் தி பிரிட்டிஷ் ஸெட்டில்மெண்ட்ஸ் இன் இண்டியா," என்று ஆங்கிலத்திலேயே வெளுத்து வாங்கினாள் நந்தினி.

விஜயகுமாரன் பிரமை மேலும் அதிகமாயிற்று. "உனக்கு ஆங்கிலம்?" என்று இழுத்தான்.

"நன்றாகத் தெரியும். ஐ ஹாவ் எ ட்யூடர் நௌ."

"எதற்கு நீ ஆங்கிலம் படிக்க வேண்டும்?"

"எதற்கு நீங்கள் பிரிட்டிஷ் படையில் சேர வேண்டும்?"

"ஐ ஹாவ் மை ரீஸன்ஸ்," என்றான் விஜயகுமாரன் கடுமையாக.

"ஐ ஆல்ஸோ ஹாவ் மை ரீஸன்ஸ். கம் நௌ லெப்டினன்ட்! வாட் டஸ் ஸாண்டர்ஸ் வாண்ட்?" என்ற நந்தினி விஜயகுமாரனை ஏறெடுத்து நோக்கினாள்.

விஜயகுமாரன் பிரமை பிடித்து அவளை நோக்கினான். இன்னொரு இடி அவன் தலையில் இறங்கியது. "கவர்னருக்கு வேண்டியது எனக்குத் தெரியும். ஹி வாண்ட்ஸ் அவர் ஹெல்ப்," என்று திட்டவட்டமாக அறிவித்தாள் நந்தினி. அந்தப்புர ஆலோசனை தன் மூளையையும் மீறி ஆழத்தில் செல்வதை அறிந்த விஜயகுமாரன் பேச நா எழாமல் நின்றான்.

"வாட் லெப்டினன்ட்! ஆர் யூ டம்? (நீங்களென்ன ஊமையா?)" என்று கேட்ட அரசகுமாரி சற்று இரைந்தே நகைத்தாள் எதிரே நின்ற வாலிப வீரனை நோக்கி,

(தொடரும்)

# கோக் என்று நினைத்தாரோ?

ஒரு குட்டிப் போராட்டமே நடந்து கொண்டிருக்கிறது.

பெர்னாண்டஸுக்கும் ஆன்ட்டனியங்குக்கும். இந்தியாவுக்கும் அமெரிக்காவுக்கும்.

போராட்டத்துக்குக் காரணம்: இடைசிறுத்த பாட்டில. கருஞ் சிவப்புத் திரவம். கோக்கா கோலா.

கோக் என்ற கோக்கா கோலாவின் எஸென்சும் பான்டா எஸென்சும் அமெரிக்காவிலிருந்து இறக்குமதி செய்யப்படுகின்றன. அதை வைத்து இங்கு பானம் தயாரிக்கிறார்கள்.

இரண்டு பிரசினைகள்: 1. இந்திய சட்டப்படி வெளிநாட்டினர் நடத்தும் சாதாரண கம்பெனிகளின் பங்குகளில் அறுபது சதவிகிதம் இந்தியர்கள் கையில் இருக்க வேண்டும். 2. கோக் செய்யும் ரகசிய பார்முலா இந்தியர்களிடம் ஒப்படைக்கப்பட வேண்டும்.

இங்குதான் சிக்கல். முதல் நிபந்தனையைக்கூட கோக்கின் ஆப்பிரிக்க இந்தியப் பிரிவின் தலைவர் ஆன்ட்டனியங் ஏற்றுக் கொண்டு விடக்கூடும். கோக் தயாரிக்கப்படும்போது அதன் தரத்தைச் சரிபார்க்கும் உரிமையை (கடமையை?) விட்டுக் கொடுக்க அவர் தயங்குகிறார்.

சில அமெரிக்க அனுதாபிகள் சொல்கிறார்கள், "கொக்கென்று நினைத்தார் கொங்கணவர். கோக்கென்று நினைத்து விட்டார் பெர்னாண்டஸ். கோகா கோலா என்பது வெறும் கூல்டிரிங்க் மட்டும் அல்ல. அமெரிக்க தூதனுமாகும். அதற்கு வலு அதிகம். பண பலம் அதிகம்."

பெர்னாண்டஸ் எப்படிச் சமாளிப்பார்? பொறுத்துப் பார்க்க வேண்டும்.

படத்தில்: புனிதா பூஷண்.

## 16.
## காதில் ஒலித்த ரகசியம்



சில விநாடிகளுக்கு முன்பு சித்தினியாக, தன் கைப்பாவையாக வளைந்த அரசகுமாரி திடீரென அரசியலில் இறங்கிவிட்டதையும், தான் வந்த காரியத்தை முன் கூட்டியே ஊகித்து விட்டதையும், ஆங்கிலத்தில் கேள்விகளைப் போட்டு வெளுத்து வாங்கியதையும் எண்ணிப் பார்த்து பிரமையடைந்த விஜயகுமாரன், பேசச் சக்தி யற்று நின்ற நிலையில், "ஆர் யு டம்?" என்று கேட்டு, தன்னை அரசகுமாரி ஊமைக் கோட்டானாக்கி விட்டதை நினைத்ததும் அவன் உள்ளத்திலிருந்த காதல் மயக்கம் சட்டென்று விலகி, சினம் அந்த இடத்தைப் பிடித்துக்கொள்ளவே. அவன் கோப விழிகளை அவள்மீது நாட்டினான். பிறகு அவளுக்கும் தனக்கும் எந்தவிதச்

# ராஜ பேரிகை

சம்பந்தமும் இல்லாதது போலவே நடந்து, "ஆம் அரச குமாரி! நான் ஊமையாகத்தான் ஆகிவிட்டேன்," என்று சொல்லவும் செய்தான் சினத்தைக் குரலிலும் காட்டி.

"பேச்சில் வல்லவரான நாயக்கர் வம்ச வீரர் திடீரென ஊமையாவதற்குக் காரணம்?" என்று வினவினாள் அரசகுமாரி அவன் சினத்தைக் கண்டு வெளியில் லட்சியம் செய்



சாண்டில்யன்

யாமலும், உள்ளூர நகைத்துக் கொண்டும்.

விஜயகுமாரன் மிகுந்த பணிவுடனும் கம்பீரத்துடனும் சொன்னான், "சில சமயங்களில் எப்பேர்ப்பட்ட மனிதனும் ஊமையாகிறான்," என்று.

"கொஞ்சம் விளக்கலாமா?" என்று கேட்டாள் நந்தினி ஏளனக் குரலில்.

"விளக்கலாம்."

"விளக்குங்களேன்."

"அபரிமிதமான அழகைப் பார்க்கும் போது..."

"பெண் அழகை?"

"ஆம் ஆம்."

"மனிதன் சிலையாகி விடுகிறான்?"

"ஆம்!"

"சிலை பேசாது. சரி, அடுத்த சந்தர்ப்பம்?"

"எதிர்பாராத கேள்விகள் பிறக்கும் போது மனிதன் திகைப்படைகிறான். அதுவும் எதிர்பாராத இடத்திலிருந்து பிறக்கும்போது," என்ற விஜயகுமாரன் மெல்ல நகைத்தான்.

நந்தினி நகைக்கவில்லை, புன்முறுவல் கொண்டாள். "மூன்றாவதும் ஒன்றிருக்க வேண்டும்?" என்றாள்.

"இருக்கிறது."

"திடீரெனப் பிறமொழி நம் மீது வீசப்படும்போது."

இதைக் கேட்ட நந்தினியின் முகத்தில் சிறிது சிந்தனை பிறந்தது. "சில நேரங்களில் சொந்த மொழி பயனற்றதாகிறது," என்றும் குறிப்பிட்டாள் அவள் சில விநாடிகளுக்குப் பிறகு.

"அந்த நேரங்களை நான் அறிந்து கொள்ளலாமா?"

"தெரிந்து கொள்ளலாம்."

"சொல்லுங்கள் அரசகுமாரி," என்று பணிவுடன் கேட்டான் விஜயகுமாரன்.

"நம் நாட்டவர் பிற நாட்டவர் தூதராக வரும்போது."

"உம் உம்..."

"அவர் பிற மொழியில் வல்லவராகி விடும்போது."

"உம், சொல்லுங்கள்."

"மூன்றாவதாக அரசியல் பேச அவர் அந்தப்புரத்துக்கு வரும் போது. . ." இந்தக் கடைசிச் சொற்களைச் சொன்ன அரசகுமாரி மெல்ல நகைத்தாள்.

விஜயகுமாரன் சங்கடத்தால் இருந்த இடத்திலேயே அசைந்தான் சில விநாடிகள். "அரசகுமாரி! அரசியல் பேச இங்கு வந்தது என் எண்ணத்தாலல்ல. ." என்று சமாதானம் கூறினான் சங்கடத்துக்கிடையில்.

"தந்தை உத்தரவை முன்னிட்டு அவருடன் வந்தீர்கள்."

"ஆம்."

"அவர் இங்கு வந்து பேச வேண்டும் என்று சொன்னதை ஆட்சேபித்தீர்களா?"

இந்தக் கேள்விக்கு விடை சொல்லத் தெரியாமல் திகைத்த விஜயகுமாரன் "ஏன் ஆட்சேபிக்க வேண்டும் நந்தினி? அரசரின் ஆணையை ஆட்சேபிக்கவோ மீறவோ நான் யார்?" என்று வினவினான்.

"ஐயோ பாவம்! ஒன்றுமறியாத குழந்தை!" என்றாள் நந்தினி.

"நந்தினி!" சீற்றத்துடன் எழுந்தது விஜயகுமாரன் குரல்.

ஆனால் அந்தச் சீற்றத்தை லட்சியம் செய்யவில்லை அரசகுமாரி. "வீரரே!" என்று மெள்ள அழைத்தாள்.

"என்ன நந்தினி?"

"அங்கு மரம் மாதிரி நிற்க வேண்டாம்."

"பின் என்ன செய்யச் சொல்கிறாய்?"

"இப்படி அமருங்கள்," என்ற நந்தினி தனது பஞ்சணையை நோக்கி நடந்து அதில் உட்கார்ந்து கொண்டு, தன் பக்கத்தில் உட்கார அவனுக்கும் இடத்தைக் காட்டினாள். ஏதோ கனவில் நடப்பவன் போல் அந்த அறை மூலையி

---

**6 வித்தியாசங்கள்:**

1. போஸ்டர் பெண்ணின் நீச்சல் உடை
2. போஸ்டரில் உள்ள 'காதல்' எழுத்து
3. மூன்றாவது ஆளின் வலது கை விரல்கள்.
4. தூரத்துக் கட்டிட ஜன்னல்கள்
5. இரண்டாவது நபரின் ஷூ
6. முதல் மனிதரின் மூக்குக் கண்ணாடி

விருந்த பஞ்சணையை அடைந்த விஜய குமாரன் அவள் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டான். உட்கார்ந்தவன் கை மெள்ள அவள் இடையில் தவழ்ந்தது.

அதனால் சற்றே நெளிந்த நந்தினி, "அரசியல் பேசும் முறை இதுவல்ல," என்று மிக மெதுவாகக் கூறினாள்.

"இ ட மு ம் இ து வ ல் ல நந்தினி." இதைச் சொன்னபோது அவன் கை அவளைத் தன்னை நோக்கி நன்றாக இழுத்துக் கொண்டது.

"தூதர் அத்து மீறுகிறீர்," என்று எச்சரிக்கை செய்தாள் அரச குமாரி.

"தூதர் என்பது நினைப் பில்லை. அத்து எதுவென்றும் புரிய வில்லை," என்றான் விஜயகுமாரன்.

"புரியாது புரியாது! தஞ்சை மன்னரைப் போல் ஒரு இளிச்சவாயர் இருந்தால் எப்படிப் புரியும்?" என்றாள் நந்தினி குழைந்த குரலில்.

"அவர் இளிச்சவாயரா!"

"ஆம். இல்லாவிட்டால் உங் களை இங்கு விட்டுப் போவாரா?"

"காரணத்துடன்தான் விட் டுப் போயிருக்கிறார்."

"என்ன காரணமாம்?"

"இவன் இந்த இடத்தில் அடிமை. எதையும் ஒப்புக்கொள்வான் என்பது மன்னருக்குத் தெரியும். என்னைக் கட்டக்கூடிய கயிறு இங்கிருப் பது அவருக்குத் தெரியும்"

"கயிறு?"

"ஆம்," என்ற விஜய குமாரன் இடது கையை இடையில் பலமாக நெருக்கி, அவள் இரு கைகளை யும் தனது வலது கையால் தொட்டுக் காட்டினான். "இக்கயிறுகள் பிணைத் தால் நான் மீள முடியாதென்று மன் னருக்குத் தெரியும்," என்றும் கூறினான்.

தலையைக் கவிழ்ந்து கொண் டாள் நந்தினி. அவன் சமீபத்தாலும், அவன் கரங்களின் சேஷ்டையாலும் விளைந்த உணர்ச்சிப் பரவசத்தால். அந்த நிலையிலேயே மெள்ளக் கேட் டாள், "என்ன செய்ய வேண்டும்? சொல்லுங்கள்," என்று.

"நந்தினி! இப்பொழுது..." என்று துவங்கிய விஜயகுமாரன் பேச்சு மேலே ஓடவில்லை.




12-8-77 அன்று ஓர் ஆங்கில செய்திப் பத்திரிகையின் நிகழ்ச்சிக் குறிப்புப் பகுதியில், ஜனாப் அப்துல் வஹாப் சிவபுராணம் பற்றிப் பல்கலைக் கழகத்தில் பேசப்போவதாக அறிவிக்கப்பட்டிருந்தது. ஆனால் உண்மையில் அவர் பேசவிருந்தது சீறாப்புராணம் பற்றி. 'Sirapuranam' என்று அச்சிடுவதற்குப் பதில் தவறுதலாக Sivapuranam என்று அச்சாகிவிட்டது.

—கே. ஆர். சேது

''சொல்லுங்கள்...'' என்று ஊக்கினாள் நந்தினி.

''இப்பொழுது நாட்டில் இரண்டு விதேச சக்திகள் இருக்கின்றன...'' என்றான் விஜயகுமாரன் மெள்ள.

''ஆம் பிரெஞ்சு ஒன்று, பிரிட்டிஷ் இரண்டு,'' என்றாள் நந்தினி.

''அதே மாதிரி சுதேசி சக்திகளும் இரண்டிருக்கின்றன,'' என்று குறிப்பிட்டான் விஜயகுமாரன்.

''ஒன்று ஆற்காடு நவாப் வம்சம். மற்றொன்று மகாராஷ்டிரர் இனம்,'' என்று நந்தினி கூறினாள்.

''ஆம். இங்குள்ள மகாராஷ்டிர வம்சம், அரசு எல்லாம் தஞ்சை ஒன்றுதான். அதைக் கபளீகரம் செய்வது ஆற்காட்டு நவாப் சந்தாசாகிபின் உத்தேசம். சந்தாசாகிப் தஞ்சை அரசுக்கு இழைத்திருக்கும் தீமை சொல்ல முடியாது. பலமுறை படையெடுத்திருக்கிறான். பலமுறை சுற்றுப் புறங்களைச் சூறையாடி இருக்கிறான். இந்த நிலையில் நாம் சேர வேண்டியது சந்தாசாகிபின் எதிரியை. அந்த எதிரி பிரிட்டிஷ்,'' என்று விளக்கினான் விஜயகுமாரன்.

நந்தினி சிறிது நேரம் சிந்தனையில் இறங்கினாள். ''பிரிட்டிஷ்காரர்கள் இதுவரை நம்முடன்தான் போரிட்டிருக்கிறார்கள். தேவிக்கோட்டையைத்தான் பிடித்திருக்கிறார்கள். ஆகையால் அவர்களும் நமக்கு விரோதிகள்தான். தவிர, இதுவரை அவர்கள் சந்தாசாகிபை எதிர்க்கவில்லை. மசமசவென்று உட்கார்ந்திருக்கிறார்கள். ஆனால் பிரெஞ்சுக்காரர் சண்டைகளில் நுழைந்தார்கள். சந்தாசாகிபை ஆதரித்தார்கள். இன்று அவர்கள் பலம் உச்ச ஸ்தாயியில் நிற்கிறது...'' என்று விளக்கினாள் அரசகுமாரி.

இதைக் கேட்ட விஜயகுமாரனும் சிந்தனையில் இறங்கினான். பிறகு மெள்ளச் சொன்னான், ''அரசகுமாரி! பிரிட்டிஷ்காரர்களைக் குறைவாக மதிப்பிட வேண்டாம். சிங்கம் உறங்குவதுபோலிருக்கும். எழுந்த பின்பும் மெதுவாகத்தான் நடக்க ஆரம்பிக்கும். ஆனால் பாயும் நேரத்தில் அதை எதிர்க்கக்கூடிய மிருகம் சிருஷ்டியில் எதுவுமே கிடையாது.''

''இத்தனை நாள் கழித்து, அதுவும் பிரெஞ்சு பலம் திடப்பட்ட



## உருப்படியான காரியம்

''என் விருப்பத்திற்கு இணங்கி விழுப்புரம் நகரில் பொதுமக்கள் நலன் கருதி ஒரு நிழற்குடை அமைத்துத் தந்தமைக்கு மிக்க மகிழ்ச்சி அடைகின்றேன்.''

—என். ஆர். ஆறுமுகம்.

கிண்டி கண்காணிப்புப் பொறியாளர் (நெடுஞ்சாலை இலாகா சென்னை வட்டம்) உத்தரவின் பேரில் விழுப்புரத்திலுள்ள கோட்டப் பொறியாளர் நிழற்குடை அமைக்க அனுமதி வழங்கியிருக்கிறார். அருள்தாஸ் இந்தப் பணியினைத் துரிதமாக முடிக்கத் துணை செய்தார். திருவருளால் பணி இனிது முடிந்தது.

—என். பி.



பின்பு, சிங்கம் விழித்துக் கொண்டு விட்டதாக்கும்?'' என்ற நந்தினியின் கேள்வியில் ஏளனமிருந்தது.

''ஆம் நந்தினி! இப்பொழுது தான் விழித்துக்கொண்டிருக்கிறது.''

''காரணம்?''

''தாமஸ் ஸாண்டர்ஸ்,'' என்ற விஜயகுமாரன் மேலும் சொன்னான்: ''ஸாண்டர்ஸ் ஏற்கனவேயிருந்த கவர்னர் ப்ளாயரைப் போலல்ல. பேச்சாளரல்ல, செயல் வீரர். இப்பொழுது நீ ஸெய்ண்ட் டேவிட் கோட்டையைப் பார்த்தால் தெரியும். அதன் ராணுவம் பல மடங்கு உயர்த்தப்பட்டிருக்கிறது. இரும்பு மனிதர். பிரெஞ்சு பலத்தை ஒடுக்கத் திட்டமிட்டிருக்கிறார். அதற்காகப் பிரான்ஸுக்கு எதிரான சக்திகளையெல்லாம் திரட்டியிருக்கிறார். நண்பர்களுக்குப் பாதுகாப்பும் அளித்திருக்கிறார். . .''

இப்படிச் சொல்லிக்கொண்டு போன விஜய குமாரனை இடை மறித்த நந்தினி, ''என்ன பாதுகாப்பு?'' என்று வினவினாள்.

''திருச்சிக்கு ஓடிவிட்ட முகம்மது அலிக்கு உதவக் காப்டன் கோப்பை அனுப்பியிருக்கிறார், சிறு படையுடன். வெகு சீக்கிரம் ஆற்காடும் தாக்கப்படும்,'' என்று விளக்கினான் விஜயகுமாரன்.

''அத்தனை பலம் இருக்கிறதா பிரிட்டிஷ்காரருக்கு?'' என்று கேட்டாள் அரசகுமாரி.

''பலம் என்றால் எதைக் குறிப்பிடுகிறாய்?''

''படை பலம்.''

''முன்னைவிட அதிகமாயிருக்கிறது. இன்னும் சுதேசிகளைச் சேர்த்துப் பயிற்சி அளித்துக் கொண்டிருக்கிறார் ஸாண்டர்ஸ். காப்டன் ஜின்ஜின்ஸின் கீழ் பிரிட்டிஷ் படையும் பிரதி தினம் போர்ப் பயிற்சி பெற்று வருகிறது. அது வெகு சீக்கிரம் நகரலாம். .''

''ஸாண்டர்ஸ் எங்கள் உதவியை எதிர்பார்க்கிறாரா?'' திடீரென குறுக்கே பாய்ந்தது நந்தினியின் கேள்வி.

''உடனே எதிர்பார்க்கவில்லை. ஆனால் தஞ்சை அரசு எப்பொழுதும் போருக்குத் தயாராக இருக்கவேண்டுமென்று எதிர்பார்க்கிறார். போரில் முதலில் பிரிட்டிஷ் படை நுழையும். அவசியம் வரும்போது தஞ்சையும் இணைய வேண்டும். அவர் முக்கியமாக எதிர்பார்ப்பது நீங்கள் முகம்மது அலிக்கு உதவ வேண்டுமென்பது. அப்படி ஒரு நட்புறவு ஒப்பந்தத்தை எதிர்பார்க்கிறார். இந்த ஒப்பந்தம் ரகசியமாயிருக்க வேண்டும். டூப்ளே இதை அறிந்தால் தஞ்சை மீது அவரே பாய்வார். கர்நாடக யுத்தத்தின் உச்சக்கட்டம் வரும்போது இது வெளியாகும். தஞ்சைப் படையும், முகம்மது அலியின் படையும், பிரிட்டிஷ் படையும் இணைந்த பெரும் சக்தியை டூப்ளே சமாளிக்கும்படி இருக்கும். இதுதான் ஸாண்டர்ஸின் திட்டம்,'' என்று விளக்கினான் விஜயகுமாரன்.

''திட்டம் அழகாக இருக்கிறது. பயனும் தரலாம். . .'' என்ற அரசகுமாரி தனது பஞ்சணையிலிருந்து இறங்கி நின்று கொண்டாள் அவன் எதிரே. அப்பொழுது சொன்னாள், ''இந்த ஒப்பந்தத்துக்குத் தஞ்சை தயார். உச்சக்கட்டம் வரும்போது நாங்கள் தவற மாட்டோம் என்று நீங்கள் ஸாண்டர்ஸிடம், சொல்லலாம்'' என்று. அத்துடன் அவள் அவனைக் கூர்ந்து சில வினாடிகள் நோக்கினாள். பிறகு மெல்லப் புன்முறுவல் கொண்டாள். ''தஞ்சை சேருவதற்கான முக்கிய காரணத்தையும் நீங்கள் சொல்லலாம்,'' என்றாள்.

''எது முக்கிய காரணம்?''

''இது,'' என்று அவள் அவன் மார்பில் விரலால் குத்தினாள்.

அவன் கைகள் அவளைச் சுற்றின. ''இதில் எனக்கென்ன லாபம்?'' என்று உதடுகள் முணுமுணுத்தன.

அவள் அவனை நோக்கி நன்றாகக் குனிந்தாள். காதில் ரகசியமாக ஏதோ சொன்னாள். விஜயகுமாரன் முகத்திலிருந்த காதல் பறந்தது. வியப்பு குடிகொண்டது. திக்பிரமையால் அவளைச் சுற்றிய கைகள்கூடச் செயலற்றுப் போயின. 'இந்த மர்மத்தை இவள் எப்படி அறிந்தாள்?' என்ற கேள்வி திரும்பத் திரும்ப எழுந்தது அவன் மனத்தில்.

(தொடரும்)







எவிக்ஸ் சக்திவாய்ந்த வெண்
பொருள் ஒன்றைக் கொண்டுள்
ளதால் உங்கள் துணிகள்
முன்பைவிட அதிக வெண்மை
யையும் அதிக பளபளப்பையும்
பெறுகின்றன. நீலம் போன்ற
சாதனத்தை இனி நீங்கள்
உபயோகிக்க வேண்டியதே
இல்லை.

எவிக்ஸ் விசேஷமான முறையில்
கலவை செய்யப்பட்டது. அது
மற்ற டிடர்ஜெண்ட் வில்லைகளைப்
போல் ஈரக்கசிவற்றது,
கூழ்போல் ஆவதில்லை,
பசையற்றது. எவிக்ஸ் ஒரே
துண்டாக இணைந்திருப்பதால்
அதை இறுதிவரை உபயோகிக்க
முடியும். நீங்கள் அதிகமான
துணிகளைத் துவைக்கலாம்,
கூடுதலான சேமிப்பையும்
பெறலாம்.

ஈரக்கசிவற்ற
**எவிக்ஸ்**
ப்ளூ டிடர்ஜெண்ட் வில்லை
நீடித்து உழைக்கிறது

அறிமுகச் சலுகை
25 பைசா
தள்ளுபடி

CHAITRA-G 38A Tam

# ராஜ பேரிகை

## சாண்டில்யன்

## விளக்கில் தெரிந்த முகம்

## 17

கட்டிலில் உட்கார்ந்த நிலையில் கட்டழகி நந்தினி காதில் சொன்ன ரகசியம் விஜயகுமாரனுக்குத் திக்பிரமையை விளைவித்ததென்றால், அதற்குக் காரணம் இருக்கவே செய்தது. ஸெய்ண்ட் டேவிட் கோட்டையில் ஸாண்டர்ஸ் கேள்வியாகக் கேட்டதை நந்தினி செய்தியாகச் சொன்னாள். "உங்கள் சபதம்" என்ற இரு சொற்களில் அந்த ரகசியம் அடங்கியிருந்ததென்றாலும், நந்தினி அந்தச் சொற்களை உச்சரித்த போது இருந்த தொனி அவற்றுக்கு முழுப் பலத்தைக் கொடுக்கவே செய்ததால் விஜயகுமாரன் அதிர்ச்சியால் பல விநாடிகள் செயலற்று உட்கார்ந்திருந்தானாலும் முடிவில் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, "என் சபதமா?" என்று ஏதும் அறியாதவன் போல் அவளை நோக்கி வினவினான்.



அவன் திண்டாட்டத்தையும் திகைப்பையும் கண்ட நந்தினி மெல்ல நகைத்தாள். "ஆம். சபதந்தான். சபதமில்லாவிட்டால் கூச்சலில்லை, கூச்சலில்லாவிட்டால் தனிமையில்லை. தனிமையில்லாவிட்டால் அதிக்கிரமமில்லை,

அதிக்கிரமமில்லாவிட்டால் காதலில்லை, இந்த நிலையுமில்லை,'' என்று கூறிய அவள் சொற்களில் கூட நகைப்பின் ஒலி பரம திட்டமாகத் தெரிந்தது.

விஜயகுமாரன் அவள் அருகாமையிலிருந்து நகர்ந்தான். ''புதிர் போடுகிறாய் நந்தினி!'' என்றும் கூறினான் சங்கடத்துடன்.

நந்தினி பக்கவாட்டிலிருந்த விஜயகுமாரன் மீது கடைக் கண் அம்பு ஒன்றை வீசிவிட்டுச் சொன்னாள், ''புதிர் போடவில்லை, சரித்திரம் சொல்லுகிறேன்,'' என்று.

விஜயகுமாரன் கட்டிலை விட்டுக் கீழே இறங்கி அவள் எதிரே தலை குனிந்து நின்றான் சில விநாடிகள் மௌனமாக. பிறகு அவன் பேசியபோது அவன் குரலில் காதலில்லை, கனிவில்லை, கடுமையிருந்தது. ''என்ன சரித்திரம் நந்தினி?'' என்று வினவினான் அந்த வாலிபன் சற்றே உஷ்ணம் தொனித்த குரலில்.

''சரித்திரம் என்று சொல்லட்டுமா? அல்லது கதை என்று சொல்லட்டுமா?'' என்று வினவினாள் நந்தினி அவன் கேள்வியின் உஷ்ணத்தைப்பற்றிச் சிறிதும் லட்சியம் செய்யாமல்.

''சரித்திரம் எது? கதை எது?''

''சரித்திரம் பூராவும் உண்மை. கதை பொய்யாகவும் இருக்கலாம், உண்மையாகவும் இருக்கலாம், இரண்டும் கலந்தும் இருக்கலாம். ஆனால் ஒன்றிலிருந்து இன்னொன்று பிறக்கிறது.''

''புதிர் வலுக்கிறது,'' என்றான் விஜயகுமாரன் சிக்கலான அவள் பதிலைக் கேட்டு.

''இதில் புரியாத புதிர் ஏதுமில்லை வீரரே. தனி மனிதர் ஆசாபாசங்கள் அவர்களைப்பற்றிய கதை. அந்தக் கதை நாட்டு நிகழ்ச்சிகளோடு கலக்கும்போது சரித்திரம் உதயமாகிறது,'' என்ற நந்தினி அத்துடன் நில்லாமல், ''ஏன், உங்கள் வாழ்க்கையையே எடுத்துக் கொள்ளுங்கள். உங்கள் அன்னையை சந்தாசாகிப் வஞ்சித்துத் திருச்சியைக் கைப்பற்றினார். அன்னை தீக்குளித்தார். அதற்கு வஞ்சம் தீர்க்க அவர் தலையை வெட்டிக் கொணர்வதாக நீங்கள் அரங்கன் முன்பு சபதம் செய்தீர்கள்...'' என்றாளானாலும் வாசகத்தை முடிக்காமல் விட்டாள் அவள்.

விஜயகுமாரன் முகம் கல்லாயிருந்தது. ''சொல் மேலே,'' என்ற ஆணையிலும் கடுமை ஒலித்தது.

''அந்தச் சபதத்தைச் செய்து நீங்கள் கூச்சலிட்டபோது நானும் டபீர் பண்டிதரும் ஆலயத்துள் வந்தோம். உங்களைச் சிறை செய்ய உத்தரவிட்டார் டபீர் பண்டிதர். அப்படி உத்தரவிடாவிட்டால்....'' என்ற அரசகுமாரி புன்முறுவல் கொண்டாள்.

''உத்தரவிடாவிட்டால்?'' விஜயகுமாரன் கேள்வி வறண்ட குரலில் வெளிவந்தது.

''என்னை அப்படிப் பலவந்தமாகத் தூக்கிச் சென்றிருக்க மாட்டீர்கள். தூக்கிச் சென்றிராவிட்டால் கிளைவைச் சந்தித்திருக்க மாட்டீர்கள். கிளைவைச் சந்தித்திராவிட்டால் தஞ்சை சுணங்குவதைக் கண்டதும் பிரிட்டிஷ் படையில் சேர்ந்திருக்க மாட்டீர்கள். சேர்ந்திரா விட்டால் இப்பொழுது தஞ்சையைப் பிரிட்டனுடன் இணைக்கத் தூதும் வந்திருக்க மாட்டீர்கள்....'' என்ற அரசகுமாரி அவனைக் கூர்ந்து நோக்கினாள்.

அவனும் தலை நிமிர்ந்து அவளை நோக்கி அவள் அறிவின் ஆழத்தை வியந்து, ''தூது வந்திராவிட்டால்?'' என்று வினவினான் மெல்லக் குரலில் கடுமையை நீக்கி வியப்பைக் காட்டி.

''தூது வந்திராவிட்டால் சரித்திர புருஷனாக ஆகியிருக்க மாட்டீர்கள்,'' என்றாள் நந்தினி.

''நான் சரித்திர புருஷனா



''இதென்ன! டொய்ங் டொய்ங் என்று சப்தம் வருவதற்கு பதில் ட்வயின் ட்வயின் என்று ஒலிக்கிறது?''

''அறுந்து போன தந்திக்குப் பதில் ட்வயின் நூலை நான்தான் இழுத்துக் கட்டினேன் சார்!''

விட்டதாக யார் சொன்னது உனக்கு?'' என்று வினவினான் விஜயகுமாரன்.

''நிகழ்ச்சிகள் சொல்லுகின்றன. எங்கும் உங்கள் பேச்சாகவே இருக்கிறது. எதற்கும் மசியாத என் தந்தைகூட இந்த அரசின் விமோசனம் உங்கள் கையில் இருப்பதாக நம்புகிறார். நேற்றுதான் சொல்லிக் கொண்டிருந்தார். 'அந்த நாயக்கர் வம்ச வாலிபன் காரணமாகத்தான் பிரிட்டிஷாரோடு சேர்ந்திருக்கிறான். சந்தாசாகிபை தீர்த்துக் கட்டுவதுதான் அவன் நோக்கம். நமது நோக்கமும் அதுதான். அதை நாம் தனித்துச் செய்ய முடியாது. பிரிட்டிஷ் உதவி வேண்டும். அதை நமக்கு அளிக்க அந்த வாலிபன் தேவை' என்று நேற்றுதான் தந்தை சொன்னார். இன்று நீங்கள் வந்து நிற்கிறீர்கள். இதை விதியின் நோக்கு என்று சொல்லவா? சரித்திரத்தின் சம்பவம் என்று விளக்கவா?'' என்று வினவினாள் நந்தினி.

விஜயகுமாரன் சற்று நேரம் அந்த அறையில் உலாவினான். பிறகு அவளெதிரே நின்றான். ''நந்தினி! விதி தனி மனிதர்களை மட்டும் ஆட்டுவிப்பதில்லை. நாடுகளையும் நாடுகளின் மூலம் சரித்திரத்தையும் ஆட்டுவிக்கிறது. இந்த நாட்டின்மீது கண்களை ஓட்டிப் பார். இது சிறிய நாடே அல்ல. உண்மையில் இது ஒரு உபகண்டம். இங்கு இஸ்லாமியரும் வாழலாம், ஹிந்துக்களும் வாழலாம், சகோதரர்போல். சந்தா சாகிபுக்கு மட்டும் பேராசை இல்லாவிட்டால், குர்ஆன்மீது இட்ட ஆணைப்படி என் தாயைச் சகோதரியாக நடத்தியிருந்தால் இப்பொழுது பிரிட்டிஷார் எதிர்ப்பும் அவனுக்குத் தேவையில்லை. பிரெஞ்சு உதவியும் தேவையில்லை. என் விரோதமும் ஏற்பட்டிருக்காது. சந்தாசாகிப் என் அன்னையை அழித்தான், நான் அவனை அழிக்க விரும்புகிறேன். இப்பொழுது பிரிட்டிஷாரும் அழிக்க விரும்புகிறார்கள். இந்த நாட்டின் சுதந்திரக் கதை இப்பொழுது சந்தாசாகிபின் பேராசையில் அடிமைக் கதையாக மாறி இருக்கிறது. நீ சொன்னது போல் நான்கூடச் சரித்திர பாத்திரமாக மாறியிருக்கிறேன். ஆனால் அரசகுமாரி! நான் சரித்திரத்தில் ஜீவிக்க மாட்டேன். ஜீவிக்க விரும்பவில்லை,'' என்று கூறினான் உணர்ச்சியுடன்.

நந்தினி அவன் சொற்களைக் கேட்டு மனம் நெகிழ்ந்தாள், ''அதில்

## உட்கார மாட்டார்

வாஹினி படப்பிடிப்பு நிலையத்தில் பிரேம்நசீர், ஜெயபாரதி, அடூர்பாசி ஆகியவர்கள் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தனர். அப்போது இரண்டு டூரிஸ்ட் பஸ்கள் வந்து நிற்கவே பிரேம்நசீரும் மற்றவர்களும் எழுந்து நின்று ரசிகர்களை வரவேற்றனர். ரசிகர்களில் பலரும் பிரேம்நசீரை உட்காரும்படி கூறியும் பிரேம்நசீர் உட்கார மறுத்து விட்டார். ''நீங்கள் கொடுக்கும் ஆதரவினால்தான் நான் வீட்டில் சுகமாக உட்கார முடிகிறது. முதலாளிகளான நீங்கள் நிற்கும் போது, உங்கள் ஆதரவினால் முன்னுக்கு வந்த நான் எப்படி உட்கார முடியும்?'' என்றார்.

—சியாமளன்

உங்கள் விருப்பம் என்ன இருக்கிறது?'' என்றாள்.

விஜயகுமாரன் நின்ற நிலையில் சொன்னான், ''என் பெயரைச் சரித்திரத்தில் வாாதபடி நானே அழித்து விடுவேன்'' என்று.

''எப்படி?''

''என் சபதம் நிறைவேறியதும் நான் மறைந்துவிடுவேன்.''

''எங்கு மறைந்து விடுவீர்கள்?''

''ஏதோ ஒரு மூலையில். அதை இப்பொழுது கேட்காதே.''

''பின்னால் சொல்வீர்களாக்கும்?''

''ஆம்.''

''எப்பொழுதோ?''

''சந்தாசாகிப்பின் தலையை நான் கொய்த பிறகு.''

''அது அத்தனை நிச்சயமா?''

''ஆம். அதில் சந்தேகம் வேண்டாம். அதற்காகவே நான் வாழ்கிறேன். நான் சிவகங்கையிலிருந்து கிளம்பியபோது தஞ்சைக்கு வர நினைக்கவில்லை, விதி இழுத்து வந்தது. அன்றிலிருந்து எது எது சந்தாசாகிபுக்கு எதிரிடமோ, எந்த இடத்தில் சேர்ந்தால் சந்தாசாகிபை நான் அழிக்க முடியுமோ அங்கெல்லாம் சென்றேன், சேர்ந்தேன். முதலில் தஞ்சை செயல்படுமென்று இங்குள்ள படையில் சேர்ந்தேன். பிறகு உன் தந்தை தீவிரமாகப் போரில் இறங்க மலைத்ததால் பிரிட்டிஷாரிடம் சேர்ந்தேன். இப்பொழுதுள்ள நிலைமையில் என்றும் போர் துவங்கலாம். இன்று தமிழகம் போர் என்னும் எரிமலைமீது உட்கார்ந்திருக்கிறது. என்றும் மலை வெடிக்கலாம், எரிமலைப் பிழம்பு ஆறாக ஓடலாம் இந் நாட்டில். அந்த வெள்ளத்தில், அக்னிப் பிழம்பில் தஞ்சை பிரிட்டனுடன் நிற்க வேண்டும். அப்பொழுதுதான் தனி அரசாக நிற்க முடியும்....'' என்று வேகத்துடன் சொல்லிக்கொண்டு போனவன் சற்றுப் பேச்சை நிறுத்தினான்.

''பிரெஞ்சு பலத்தை பிரிட்டன் உடைக்க முடியுமா?'' என்று வினவினாள் அரசகுமாரி.

''கண்டிப்பாய் உடைக்க முடியும். தாமஸ் ஸாண்டர்ஸ் சாதாரண மனிதரல்ல. கிளைவ் இன்று வெறும் காப்டனாயிருக்கலாம். ஆனால் அவன் இந்த நாட்டில் பிரிட்டனின் கதியை நிர்ணயிப்பான்,'' என்றான் விஜயகுமாரன்.



''நானே திறப்பு விழா செய்யவேண்டிய சிலையைக் காணோமே, எங்கேடா போச்சு?''

''நான் அப்பவே சொன்னேன்! 'பாதாள சாக்கடைக்கு மேலே சிலை வச்சால் வெயிட் தாங்காது'ன்னு! எவன் கேட்டான்?''

''உங்கள் நண்பரிடம் உங்களுக்குப் பெரிதும் நம்பிக்கையிருக்க வேண்டும்,'' என்றாள் நந்தினி.

''முழு நம்பிக்கையிருக்கிறது. இல்லையேல் நான் அவன் படையில் சேர்ந்திருக்க மாட்டேன். இங்கு தூதும் வந்திருக்க மாட்டேன் நந்தினி! பிரிட்டனுடன் சமயத்தில் தஞ்சை சேருமென்று நீ கூறிய உறுதி சந்தாசாகிபின் கதியை நிர்ணயித்துவிட்டது,'' என்று உணர்ச்சியுடன் பேசினான் விஜயகுமாரன்.

அவன் காட்டிய உணர்ச்சியும் வேகமும் அரசகுமாரியையும் பாதித்திருக்க வேண்டும். அவள் கட்டிலை விட்டிறங்கி அவனை நோக்கி வந்தாள். ''ஒப்பந்தத்துக்கு ஒப்புக்கொள்கிறேன்,'' என்று கூறித் தலை நிமிர்ந்தாள்.

அவன் அவள் கண்களிலிருந்த வேட்கையைக் கவனிக்கவில்லை. தலை வணங்கி ''நன்றி நந்தினி,'' என்று கூறிவிட்டுத் திரும்ப முயன்றான்.

''தூதரே!'' என்ற நந்தினியின் ஒரு சொல் அவனை நிற்க வைத்தது. அவனை நோக்கித் திரும்பவும் செய்தது.

"என்ன நந்தினி?'' என்று வினவினான் அவன்.

''ஒப்பந்தம்....'' என்ற நந்தினியின் கண்களில் ஏதோ மயக்கம் இருந்தது.

''அதற்கென்ன?''

''ஒப்பந்தம் எப்படிச் செய்கிறார்கள்?''

''காகிதத்தில் எழுதுகிறார்கள். அது தேவையில்லை எனக்கு. உன் சொற்களே போதும்.''

கடைசிச் சொற்களைக் கவனிக்காதது போல் பேசினாள் அரசகுமாரி. ''காகிதத்தில் எழுதிய பின்?'' என்று வினவினாள்.

''முத்திரை வைக்கிறார்கள்,'' என்ற விஜயகுமாரன், ''அதுவா! அதுவா!'' என்று உளறினான். உளறலில் ஆனந்தமிருந்தது. அவன் பொறித்த முத்திரையில் இருவருக்கும் மயக்கமுமிருந்தது. முத்திரைக்குப் பின்பு சரேலென அவளைத் தூக்கிச் சென்று படுக்கையில் படுக்க வைத்துவிட்டு வெளியேறினான் விஜயகுமாரன் வெகு வேகமாக. அவன் போகும் வேகத்தைக் கண்ட நந்தினி புன்முறுவல் பூத்தாள். போன பின் நன்றாகப் பஞ்சணையில் மல்லாந்து இதயம் விட்டு நகைக்கவும் செய்தாள்.

ஆனால் வெளியே சென்ற விஜயகுமாரன் மனத்தில் நகைப்பில்லை. மயக்கமே அவனை உந்திச் சென்றது. தஞ்சை மன்னரிடம் விடைபெற்று வந்த காரியத்தை வெற்றிகரமாக முடித்துக் கொண்ட திருப்தியைக்கூட அனுபவிக்காமல் அவன் கடமையை நாடி வேகமாகச் சென்றான் வேலூரை நோக்கி. நான்கு நாள் பயணத்துக்குப் பிறகு வேலூருக்கு அப்பாலிருந்த முராரி ராவின் பாசறையை அடைந்து அவரிடம் பல நாட்கள் தங்கினபோதும் நந்தினியைப்பற்றிய மயக்கம் தீரவில்லை, வேகமும் குறையவில்லை. கவர்னர் அனுப்பிய காரியங்களை முடித்துக் கொண்டு அவன் சென்னைக்கு கிளைவைச் சந்திக்க வந்தபோது மாதம் இரண்டு முடிந்துவிட்டது.

அந்த இரண்டு மாதங்களில் ஸெய்ண்ட் ஜார்ஜ் கோட்டையை மிகவும் கிளைவ் பலப்படுத்தியிருந்தாலும், அதில் பலவீனமும் இருந்ததைக் கவனித்த விஜயகுமாரன் கோட்டைக்குள் நுழைந்தபோது, நன்றாக இருட்டிவிட்டது. இருட்டில் இரண்டு மூன்று வெள்ளைக்கார சோல்ஜர்கள் குடிவெறியில் கூச்சலிட்டுக் கொண்டிருந்தார்கள். அது மட்டுமல்ல. ஒரு வெள்ளைக்காரப் பெண்ணைப் பிடித்து ரகளை செய்யவும் முயன்றார்கள். அவர்களில் ஒருவன் அந்தப் பெண்ணைப் பலவந்தமாக இழுத்து அணைக்கவும் முற்பட்டான். அந்தச் சமயத்தில் சரேலெனப் பயங்கரமாக ஒலித்தது விஜயகுமாரன் கைத்துப்பாக்கி. வெள்ளைக்காரன் அலறி விலகினான். அவன் விலகியதால் அப்பெண்ணின் முகத்தில் சார்லஸ் ஸ்ட்ரீட்டின் வீதி விளக்கு விழுந்தது. அந்த முகத்தைக் கண்ட விஜயகுமாரனுக்குத் திக்பிரமை மீறியது.

(தொடரும்)

## உருப்படியான காரியம் 5

தமிழகத்தின் மையமாக விளங்கும் திருச்சி மாவட்டத்தில், அரியலூர் வட்டத்தில், நெற்கதிரும், கரும்பும் வாழையும் பயிராகும் செழுமை நிறைந்த ஊர் எங்கள் செந்துறை. பல முக்கிய நகரங்களை இணைக்கும் நெடுஞ்சாலைகள் உள்ள எங்கள் ஊரில், பாடுபடும் பாட்டாளிகளும் அலுவலகம் செல்லும் ஊழியர்களும் நிறைந்திருக்கிறார்கள். இவர்களுக்கு வசதியாக, காலத்தைக் கணித்திட, மணிக்கூண்டு அவசியம் தேவை.

—இரா. சிவ. இளங்கோவன் (செப்டம்பர் மாதத் திட்டமாக இப்பணி மேற்கொள்ளப்பட்டிருக்கிறது.)

மேற்பார்வை: முன்னாள் பிரதம நீதிபதி மா: அனந்தநாராயணன்

கேள்வி: என் கணவர் இந்தியாவில் பிறந்தவர். எனினும் அவரது பெற்றோர் இலங்கை சென்று தங்கி அந் நாட்டுப் பிரஜைகளாகிவிட்டனர். என் கணவரும் அங்கேயே படித்து சார்டட் அக்கவுண்டெண்ட்டாக வேலை பார்த்து வருகிறார். நான் ஓர் இந்திய பிரஜை. அவர் இங்கு வந்து இருக்க நான் விரும்புகிறேன். அவர் இந்திய பிரஜை ஆகமுடியுமா? எப்படி?

—உமா, சென்னை

பதில்: இந்திய குடிமைச் சட்டத்தின் கீழ் (Indian Citizenship Act) உங்கள் கணவர், விண்ணப்பம் ஒன்று கொடுத்து இந்திய பிரஜையாக பதிவு செய்து கொள்ளலாம், இலங்கைப் பிரஜையாக இருப்பவர் இந்தியப் பிரஜையாக மாறுவது அமெரிக்க பிரஜையாக இருப்பவர் இந்திய பிரஜையாக மாறுவதைவிட சுலபம். தவிர ஓர் இந்தியன் வேறு ஒரு பிரஜையை மனைவியாக அடைந்தால் அவள் இந்தியப் பிரஜையாவது மிகச் சுலபம். அவள் இந்தியப் பிரஜையாவதற்கு ஓர் இந்தியனை மணந்த ஒரே காரணம் போதும். ஆனால் மாற்றுப் பிரஜையான கணவன் இந்தியப் பெண்ணை மணந்ததை மட்டும் வைத்து இந்திய பிரஜையாக மாறிவிட முடியாது!

கேள்வி: எனது தகப்பனார் ஒரு வேத பாடசாலையில் வேலை பார்த்து வந்தார். எவ்வித முன் அறிவிப்புமின்றி, அவர்மேல் எவ்விதக் குற்றமும் இல்லாத போது திடீரென வேலை நீக்கம் செய்யப்பட்டார். இது விஷயமாக அவர் லேபர் கோர்ட்டில் வழக்குத் தொடர்ந்து நியாயம் பெற முடியுமா?

—எஸ். ராமையா

பதில்: லேபர் கோர்ட்டில் வழக்குத் தொடர முடியாது. கல்வி நிலையங்கள் தொழிற் தகராறு சட்டத்தின் கீழ் (Industrial Disputes Act 1947) வராது. அங்கீகரிக்கப்பட்ட பள்ளி ஆசிரியர்களுக்குச் சாதகமாகச் சமீபத்தில் சட்டங்கள் வந்துள்ளன. வேத பாடசாலை அங்கீகரிக்கப்பட்ட பள்ளியாக இருக்க முடியாதது ஒரு பக்கமிருக்க உங்கள் தந்தை ஆசிரியரா இல்லையா என்பது பற்றி உங்கள் கடிதத்தில் விவரம் இல்லை. எப்படி இருப்பினும் இழந்த வேலையைத் திரும்ப அவர் பெற முடியாது. ஆனால், ஒருவரை அவர்மீது குற்றம் சுமத்தி வேலை நீக்கம் செய்தால், அவருக்கு மெமோ கொடுத்து ஒரு விசாரணை நடத்தி அவர்மீது அக்குற்றம் நிரூபிக்கப்பட்ட பிறகே அவ்வாறு செய்யச் சட்டம் அனுமதிக்கிறது. எனவே உங்கள் தந்தை தன்னை வேலை நீக்கம் செய்தது தவறு என்று கோர்ட்டில் சிவில் வழக்குத் தொடுத்து நஷ்ட ஈடு பெற முடியும்.



விக்கல் சார்!




22.9.77

சாண்டில்யன்

## 18. போர்க் காதல்

வீதி விளக்கில் தெரிந்த அழகு முகம் பல நாட்களுக்கு முன்பு கிளைவிடமிருந்த லாக்கெட்டிலிருந்த அதே முகம்! அந்த முகத்துக்குடையவளை, கிளைவின் காதலியை, கையைப் பிடித்து இழுத்து அணைக்கவும் முயலக்கூடிய துணிவுள்ளவன் எவனாயிருக்க முடியும் என்பதை அறியக் கையில் புகைந்து கொண்டிருந்த சிறு துப்பாக்கியுடன் புரவியிலிருந்து குதித்த விஜயகுமாரன், புரவிமீது சேணத்தைப் போட்டுவிட்டு வெள்ளை சோல்ஜர்கள் இருந்த இடத்தை அணுகலானான்.

அந்த இடம் கிளைவும் அவனது நண்பன் எட்மண்ட் மாஸ்கலினும் தங்கியிருந்த சார்லஸ் ஸ்டிரீட் என்றழைக்கப்பட்ட வீதியின் முகப்பு. ஸெயின்ட் ஜார்ஜ் கோட்டையின் கிழக்கு வாயிலுக்கு நேர் எதிரில் செல்லும் பாதையை எதிர்த்து. செயின்ட் மேரீஸ் சர்ச்சுக்கு பக்கத்தில் வடக்கு தெற்காக ஓடும் சார்லஸ் ஸ்டிரீட்டில், அதுவும் கிளைவின் இருப்பிடத்துக்கு வெகு அருகில் அந்த அநீதத்தை விளைவிக்கக் கூடிய சோல்ஜர்கள் யாராயிருக்கலாம் என்று அறிந்து கொள்ள அவர்களை அணுகிய விஜயகுமாரன், ''வாட் டு யூ மின் பை திஸ்?'' என்று ஆங்கிலத்தில் சீற்றத்துடன் வினவினான்.

விஜயகுமாரன் கைத் துப்பாக்கி சுட்டதால் அலறிய சோல்ஜர் நன்றாகக் குடித்திருந்ததால் தள்ளாடித் தள்ளாடி நடந்து வந்து, ''ஹூ த டெவில் ஆர் யூ?'' என்று வினவினான்.

விஜயகுமாரன் அவனை உற்று நோக்கினான் பல விநாடிகள். கைத் துப்பாக்கியால் அவனைப் பயமுறுத்த அவன் காலடிக்கருகில் விஜயகுமாரன் சுட்டானேயொழிய அவனைக் காயப் படுத்தவோ கொல்லவோ சுடவில்லையாகையால், அவனுக்கு எந்தவித ஹானியும் இல்லாதிருந்ததால், அவன் அசட்டுச் துணிச்சலை மீண்டும் காட்டத் தொடங்கி, ''யூ ஆர் எ நேடிவ்? வாட் ஆர் யூ டூயிங் ஹியர்? (நீ ஒரு சுதேசி! இங்கு என்னசெய்துகொண்டிருக்கிறாய்)'' என்று வினவினான், சொற்களைக் குளறிக்கொட்டி.

அவனது துணைவர்களான மற்ற இரு சோல்ஜர்களும் ''எஸ், ஹூ

ஆழ் யூ?'' என்று குடிவெறியால் தமிழின் தனி எழுத்தான 'ழ்'ஐயும் ஆங்கிலத்தில் இணைத்து உச்சரித்துக் கொண்டே அவனை அணுக முற்பட்டார்கள்.

''ஸ்டே ஹ்வேர் ஆர்,'' என்ற விஜயகுமாரன் அதிகார அதட்டலும் அதைத் தொடர்ந்து அவன் கையில் மீண்டும் எழுந்த கைத் துப்பாக்கியும் அவர்களை எட்டவே நிற்கவைத்தன.

''நான் லெப்டினன்ட் விஜயகுமார்! திரும்பிச் செல்லுங்கள். காலையில் விசாரிக்கிறேன்,'' என்று ஆங்கிலத்தில் கூறிய விஜயகுமாரன் ''ரைட் அபௌட் டர்ன், மார்ச்!'' என்று உத்தரவும் இட்டான் ராணுவ தோரணையில்.

இந்த உத்தரவும் அவன் குரலில் தொனித்த அதிகார தோரணையும் எல்லாவற்றையும்விட அவன் கையில் எழுந்து அவர்களை நோக்கிப் பயங்கரமாகக் குறி வைக்கப்பட்டிருந்த கைத் துப்பாக்கியின் புகையும் குழலும் அவர்களைத் திகைக்க வைத்ததாலும், குடிவெறியையும் ஓரளவு போக்கடித்ததாலும் அவர்கள் திரும்பிச் செல்ல ராணுவ பாணியில் கால்களைச் சேர்த்து சலாம் செய்தனர். ''நீ போவதற்கு முன்பு அந்தப் பெண்ணிடம் மன்னிப்புக்கேள்'' என்றும் கூறினான் விஜயகுமாரன் அவளை அவமதித்தவனை நோக்கி அந்த சோல்ஜரும் ''ஸாரி மேடம்,'' என்று கூறித் தலைவணங்கிவிட்டுத் திரும்பவே மூன்று சோல்ஜர்களும் பாசறையை நோக்கி நடந்தனர். நடந்தபோது கொஞ்சம் பாக்கியிருந்த குடிவெறியால் ஆங்கிலத்தில் பாடிக்கொண்டும் பரஸ்பரம் அணைத்துக் கொண்டும் சென்றனர்.

அவர்கள் செல்லும் வரை சிலைபோல் நின்றிருந்த அந்த வெள்ளைக்காரப் பெண், அவர்கள் சிறிது தூரம் சென்றதும் விஜயகுமாரனை நோக்கினாள் பிரமிப்பு நிரம்பிய கண்களுடன். ''உங்களைப் பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறேன்,'' என்றும் கூறினாள், கிள்ளை மொழியில் தமிழில்.

அவள் சுத்தத் தமிழைக் கண்டு பிரமித்த விஜயகுமாரன், ''உங்களுக்கு யார் தமிழ் கற்றுக் கொடுத்தது? எட்மண்ட்டா? கிளைவா?'' என்று வினவினான்.

அவன் சொற்களிலிருந்து தான் யார் என்பதை அவன் ஏற்கனவே புரிந்து கொண்டிருக்கிறான் என்பதை அந்தப் பெண் ஊகித்துக் கொண்டாளாகையால், ''அப்படியானால் என்னை உங்களுக்கு..'' என்று துவங்கி, பேச்சை நடுவில் நிறுத்தினாள்.

''தெரியும்,'' என்று வாக்கியத்தைப் பூர்த்தி செய்த விஜயகுமாரன், ''நீங்கள் மார்கரெட் மாஸ்கலின் என்பது தெரியும், எட்மண்ட்டின் சகோதரி என்பது தெரியும், கிளைவின் காதலி என்பது தெரியும். நீங்கள் உண்மையில் அதிர்ஷ்டசாலி,'' என்றும் சொன்னான் புன்சிரிப்புடன்.

அவள் லேசாக நகைத்தாள் தனது முத்துப் பற்களைக் காட்டி. அந்த நகைப்பின்போது நன்றாகச் சிவந்துவிட்டது அந்த வெள்ளை முகம். ''யூ ஆர் ப்ரிஸ்யூமிங் டு மச்,'' என்று விஜயகுமாரனை நோக்கிக் கூறிய அவள் சொற்களில் வெட்கமிருந்தது, முகத்தில் குழப்பமிருந்தது.

''இல்லை மிஸ் பெக்கி! நான் ஊகித்து எதுவும் சொல்லவில்லை,'' என்று விஜயகுமாரன் கூறியதும் அந்தப் பெண்ணின் வியப்பு எல்லை மீறியது.

''யூ !யூ !'' என்று ஏதோ சொல்ல முயன்று முடியாமல் தவித்தாள்.

''தமிழில் பேசுங்கள், உங்களுக்குத்தான் தமிழ் தெரிகிறதே,'' என்றான் விஜயகுமாரன்.

அவள் சிறிது சிந்தித்து விட்டு அவனை மெல்ல அணுகி அவன் கையின் மேல் தனது கையை வைத்தாள். வெள்ளைக்காரர்களின் வழிகளை நன்றாக அறிந்திருந்த விஜயகுமாரனும் தனது கையைச் சிறிது தூக்கி அவள் கை அத்துடன் இணைய இடம் கொடுத்தான். அந்த அவன் செய்கையைக் கண்டு பிரமித்த அந்த அழகி, ''வெள்ளைக்காரர் வழக்கங்கள் உங்களுக்கு நன்றாகப் படிந்திருக்கிறது.'' என்று கூறிக்கொண்டே அவன் கையின் மேல் தனது கையை வைத்து நடக்கலானாள். விஜயகுமாரனும் அவளுடன் நடந்து சென்றான் சாட்சாத் வெள்ளைக்காரனைப்போல. ''வெள்ளைக்காரர் பழக்க வழக்கங்கள் எனக்கு மட்டுமல்ல, இன்னும் பல தமிழருக்கும் படிந்திருக்கிறது.'' என்று அவளுடன் நடந்த



6 வித்தியாசங்கள்

1. பல்லைப் பக்கத்தின் மேல் பகுதியில் கறுப்புப் பட்டை
2. வழுக்கைத் தலை
3. கட்டம் போட்ட காலர்
4. வாலறுப்புத் தோல்
5. கூடைக்காரியின் முகபாவம்
6. மூன்று பித்தான்கள்.

என்னும் அவள் முந்திய கேள்விக்குப் பதிலும் சொன்னாள்.

பெக்கி என்று செல்லமாக அழைக்கப்பட்ட மார்க்கரெட் அன்று வெள்ளை வெளேரென்ற சில்க் கௌன் அணிந்திருந்தாள். காலையும் மறைக்குத் தொங்கிய அந்த கௌனுக்கு மேலே பிருந்த பகுதியில், 'பிரில்கள்' அந்தக் காலத்தைய வழக்கப்படி நிரம்ப வைக்கப்பட்டிருந்ததால், நன்றாகப் பருத்திருந்த அவள் மார்பகத்தைக்கூட கௌனின் மேல்பாகம் ஓரளவு மறைத்திருந்தது. இந்த அழகிக்குக் கிழவன் தனது இதயத்தைப் பறி கொடுத்ததில் தவறில்லையென்றே விஜயகுமாரன் நினைத்தான்.

அந்த நினைப்புடன் மௌனமாக நடந்த விஜயகுமாரனிடம் தானாகவே பேச்சைக் கொடுத்த மார்கரெட், "என்னை பெக்கி என்று அழைத்தீர்கள்," என்று குறிப்பிட்டாள் மெதுவாக.

"ஆம்," என்றான் விஜயகுமாரன். 'இந்த நிலையில் தந்தினி என்னைப் பார்த்தால் என்ன நினைப்பாள்!' என்று உள்ளூரக் கேட்டும் கொண்டதால் அவன் உதடுகளில் புன்முறுவலும் தவழ்ந்தது.

நேரே தெருவைப் பார்த்துக் கொண்டு நடந்த அந்தப் பெண், "அது என் தாய் தந்தையர் அழைக்கும் செல்லப் பெயர்," என்று கூறினாள்.

"தெரியும்."

"என் குடும்பத்தார் அப்படி என்னை அழைக்கலாம்.."

"சரி."

"அல்லது.."

"உங்கள் காதலர் அழைக்கலாம்."

இதைக் கேட்ட அவன் சட்டென்று நின்று திரும்பி அவளை நோக்கினான். "என்ன சொல்கிறீர்கள்?"

"உள்ளதைச் சொல்கிறேன்," என்றாள் விஜயகுமாரனும் அவளை நோக்கி நகைத்து.

"எது உள்ளது?"

"செல்லப் பெயரால் உங்களை உங்கள் காதலரும் அழைக்கலாம் என்பது."

"எனக்கு யார் காதலர்?"

இந்தக் கேள்வி விஜயகுமாரனை அசர வைத்தது. "அது கூடத் தெரியாதா உங்களுக்கு?" என்று வியப்புடன் கேட்டான். அதற்குடன் "ஐ தாட்.." என்றும் எதோ துவங்கினான்.

"யூ தாட்?" இதைக் கேட்ட போது அவள் குரலில் கோபமில்லை. வியப்பு இருந்தது.

விஜயகுமாரன் அதற்கு உடனடியாகப் பதில் சொல்லவில்லை. சிறிது நேரம் மௌனம் சாதித்தான். "நெவர் மைண்ட், கம்" என்று அவளை அழைத்துக் கொண்டு கிளைவும் எட்மண்டும் இருந்த விடுதிக்குச் சென்றான். அந்த விடுதிக்குள் கிளைவைக் காணோம். எட்மண்ட் மட்டுமே இருந்தான். "ஓ விஜயகுமார்! யூ டு ஹாவ் பிகம் ப்ரண்ட்ஸ் (நீங்களிருவரும் நண்பர்களாகிவிட்டீர்களா?)" என்று வினவினான் எட்மண்ட்.

"இவர் என்னை இரு குடிகாரர்களிடமிருந்து காப்பாற்றினார்," என்றாள் மார்க்கரெட் தனது குழப்பத்தை அடக்கிக்கொண்டு.

"ஸோல்ஜர்களிடமிருந்தா?"

"எஸ்," என்றாள் அவள்.

"ஆல் ரைட். யூ கோ இன். (சரி, நீ உள்ளே போ)" என்று எட்மண்ட் கூறி அவளை அனுப்பிவிட்டு, "தாங்க் யூ விஜயகுமார்," என்று நன்றி கூறினான் எட்மண்ட்.

"மிஸ்டர் எட்மண்ட்!"

"எஸ்."

"நீங்கள் தனியாயிருக்கிறீர்கள். கிளைவ் எங்கே?"

"இதைக் குடும்ப விடுதியாக்கி விட்டார் காப்டன், அவர் நாலு வீடு தள்ளிச் சென்று விட்டார்," என்று அறிவித்தான் எட்மண்ட்.

"இந்தப் பெண் இருப்ப



தானா?"

"ஆம்."

"இருந்தாலென்ன?"

"கல்யாணமாகாதவள்."

"ஆகவேண்டியதுதானே?"

"ஆம்."

"அப்படியானால் ..? என்று வினவினான் விஜயகுமார் எட்மண்டை ஏறிட்டு நோக்கி.

எட்மண்ட் முகத்தில் திடீரென அச்சத்தின் சாயை படர்ந்தது. "அப்படியானால் என்ன?" என்று வினவினான், சற்று அச்சம் குரலிலும் ஒலிக்க.

எட்மண்ட் தனது தங்கையின் காதலை மறைக்கப் பார்க்கிறானென்பதை உணர்ந்து கொண்ட விஜயகுமாரன் அதைப் பற்றி மேற்கொண்டு எதுவும் பேசாமல், "பிறகு பேசலாம்," என்று கூறிவிட்டு அந்தக் கட்டிடத்தை விட்டு வெளியே நடந்தான்.

அவன் போகும் இடமெல்லாம் அவனைப் பின் தொடரும் குணமுள்ள அவன் புரவி வாயிலில் நின்றுகொண்டிருந்ததைக் கவனித்த விஜயகுமாரன் அதன் கழுத்தைத் தடவிக் கொடுத்து விட்டுக் காப்டன் கிளைவ் இருந்த விடுதியை நோக்கி நடந்தான்.

அவன் உள்ளே நுழைந்த போது முதல் அறையிலேயே காப்டன் கிளைவ் பெரிய 'மாப்' ஒன்றை மேஜை மீது பரப்பி அதை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்ததால் நண்பன் உள்ளே நுழைந்ததைக் கூட அவன் அறியவில்லை பல விநாடிகள். "காப்டன் ராணுவ 'மாப்'பைப் பார்ப்பதில் அதிக சிரத்தை கொண்டிருக்கிறார் போலிருக்கிறது?" என்று விஜயகுமாரன் கூறிய பின்பே தலையைத் தூக்கி அவனைக் கவனித்த கிளைவ் "எப்பொழுது வந்தாய் விஜயகுமார்?" என்று வினவினான்.

"வந்துகொண்டே இருக்கி



காலெஜ்
பிரின்ஸிபால்



நர்ஸரி ஸ்கூல்
பிரின்ஸிபால்



டியுடோரியல் காலெஜ்
பிரின்ஸ்பால்

றேன்,'' என்று பதில் கூறினான் விஜயகுமார்.

''போன வேலை?''

''வெற்றிதான்.''

''இங்கு....''

''வந்தவேலையும் வெற்றிதான்,'' என்ற விஜயகுமார் நகைத்தான்.

''என்ன விஜயகுமார்?'' கிளைவின் குரலில் லேசாக நகைப்பொலி இருந்தது.

''நான் உன் காதலியைப் பார்த்தேன்,'' என்றான் விஜயகுமார். கிளைவின் அடுத்த கேள்வி விஜயகுமாரனைத் தூக்கிப் போட்டுவிட்டது. ''யாரது?'' என்று கேட்டான் கிளைவ்.

''மிஸ் மார்க்கரெட்,'' என்ற விஜயகுமார், ''இப்பொழுதுதான் அவளை குடிகார சோல்ஜர்களிடமிருந்து காப்பாற்றிவிட்டு வருகிறேன்,'' என்றும் கூறினான்.

கிளைவ், ''தாங்க்ஸ்'', என்று சம்பிரதாயமாகக் கூறிவிட்டு, ''விஜயகுமார்! அவளை நான் காதலிப்பது அவளுக்குத் தெரியாது,'' என்றும் ஒரு புதிரைப் போட்டுவிட்டான்.

''ஏன்?''

''நான் சொல்லவில்லை...''

''விசித்திரமாயிருக்கிறது.''

கிளைவ் சிறிது நேரம் நன்றாக நிமிர்ந்து நின்றான். ''விஜயகுமார், காரணம் சொல்லட்டுமா?'' என்று வினவினான்.

''சொல் கிளைவ்.''

''எனக்குக் காதலில் கவனம் செலுத்த இப்பொழுது அவகாசமில்லை.''

''கர்நாடகத்தின் இறுதிப் போர் துவங்கிவிட்டது. எனக்குப் பெண் காதலைவிடப் போர்க் காதல் அதிகம்,'' என்றான் கிளைவ்.

அவன் முகத்தில் மேலிருந்த பவர் விளக்கின் வெளிச்சம் நன்றாக விழுந்தது. அந்த வெளிச்சத்தில், கிளைவின் வீர வதனத்தில், ஜெயஸ்ரீ ஜொலித்தாள். அப்படி ஜொலித்த ஜெயஸ்ரீயுடன் தனது ஷர்ட் பையில் கையை விட்டு முத்திரை உடைக்கப்பட்டிருந்த ஒரு கடிதத்தை எடுத்த கிளைவ், ''இதைப் பார், புரியும்,'' என்றும் கூறினான் விஜயகுமாரனிடம் கடிதத்தை நீட்டி. கடிதத்தைக் கையில் வாங்கிய விஜயகுமாரன் உறையிலிருந்து அதை எடுத்துப் படித்தான். பிறகு கண்களை உயர்த்தினான் கிளைவை நோக்கி. ''திஸ் இஸ் ஸீரியஸ்,'' என்று கூறவும் செய்தான்.

''திஸ் இஸ் வார். ரியல் வார்,'' என்றான் கிளைவ் உற்சாகத்துடன்.

(தொடரும்)



# திருமணமான பெண்ணைத் தெரியாத்தனமாய் மணந்தேனே!

சென்னை உயர்நீதி மன்ற முன்னாள் நீதிபதி மா. அனந்த நாராயணன் சரிபார்த்தது.

கேள்வி: நான், ஏற்கனவே திருமணமான பெண் என்று தெரியாமல் ஒருத்தியை மணந்துகொண்டு விட்டேன். அவளுடைய முதல் திருமணம் என்னிடமிருந்து மறைக்கப்பட்டுவிட்டது. இப்போது எங்களுக்கு ஒரு பெண் குழந்தை பிறந்திருக்கிறது. முதல் கணவன் அவள் தன்னிடம் வந்து வாழ வேண்டுமென அவளுக்கு நோட்டீஸ் விட்டிருக்கிறார். நான் அவள் மீதும் அவள் குடும்பத்தார் மீதும் மான நஷ்ட வழக்குப் போட முடியுமா?

—எஸ். கே. ராஜன், கோவை

உங்களுக்கும் அவளுக்கும் நடந்த திருமணம் செல்லாது. உங்களுக்குத் தெரிவிக்காமல் ஏமாற்றித் திருமணம் செய்விக்கப் பட்டதால், மாற்றான் மனைவியைக் கவர்ந்த (Enticing a married woman) மாற்றான் மனைவியை மணந்த (Bigamy) குற்றங்களை உங்கள் மேல் சுமத்த முடியாது. உடனடியாக உங்கள் மனைவிக்கு (?), 'ஏன் முதல் மணத்தை மறைத்தாய்? எனக்குத் தெரிந்திருந்தால் உன்னை மணந்திருக்க மாட்டேனே' என்று நோட்டீஸ் கொடுத்து, அவளுடைய முதல் கணவனுக்கும் உங்கள் நிலைமையைத் தெரியப்படுத்தி, முதலில் உங்களைக் காப்பாற்றிக் கொள்ளப் பாருங்கள். இல்லையெனில் மாற்றான் மனைவியைக் கவர்ந்ததற்காக இரண்டு வருடமும் அவளை மணந்ததற்காக 7 வருடமும் அவளுடன் உறவு வைத்துக் கொண்டதற்காக 5 வருடமும் நீங்கள் சிறையில் தள்ளப்பட நேரலாம். தவிர, உங்கள் விஷயம் உங்களைத் தெரிந்தவர்களுக்கெல்லாம் பரவியிருந்தால் மட்டுமே நீங்கள் மான நஷ்ட வழக்குப் போட முடியும். மற்றப்படி உங்களுக்கு மனக்கஷ்டத்தையும், நிம்மதியின்மையையும் பொருள் நஷ்டத்தையும் (அப்படி ஏதேனும் இருப்பின்) ஏற்படுத்தியதற்காக உங்கள் மனைவி மற்றும் அவளுடைய பெற்றோர் மீது நீங்கள் நஷ்ட ஈடு கேட்டு வழக்குப் போட முடியும்.

கேள்வி: நாங்கள் ஒரு வீட்டின் மாடியில் குடியிருக்கிறோம். வீட்டுச் சொந்தக்காரர் வாடகை கொடுத்ததற்கு ரசீது கொடுத்ததில்லை. இரண்டு மாத வாடகை அட்வான்ஸ் கொடுத்ததற்குக்கூட ரசீது தரவில்லை. நாங்கள் போன மாத வாடகையை இதுவரை கொடுக்கவில்லை. இதற்கிடையில் அவர் எங்களுக்குத் தண்ணீர் சப்ளையை நிறுத்திவிட்டார். நாங்கள் என்ன செய்ய?

—ராஜன், சென்னை

பதில்: நீங்கள் வாடகையை ஒழுங்காகக் கொடுக்க வேண்டும். ரசீது தரவில்லை என்றால் உங்களைக் காப்பாற்றிக் கொள்ள நீங்கள் அதை மணி ஆர்டர் மூலமாகவோ, செக் மூலமாகவோ கொடுக்கலாம். எப்படி இருப்பினும் வீட்டில் உள்ள வசதிகளை வீட்டுச் சொந்தக்காரர் குறைக்க எந்த உரிமையும் இல்லை. தமிழ்நாடு வாடகை கட்டுப்பாடு சட்டப்படி (Madras Buildings lease and rent control Act 1960) 17'வது பிரிவின்கீழ், தண்ணீர் வசதி திடீரென வேண்டுமென்றே மறுக்கப்படுகிறது என்றும் திரும்பவும் அந்த வசதியைப் பெற்றுத் தர வேண்டுமென்றும் மனு கொடுத்து உடனே வசதியை நீங்கள் திரும்பப் பெறலாம். இப்படி வசதிகளைக் குறைக்கும் அல்லது மறுக்கும் வீட்டுச் சொந்தக்காரர்களுக்கு அபராதம் விதிக்க நீதி மன்றத்திற்கு அதிகாரம் இருக்கிறது.

**வக்கீல் சார்!**

# அவளா! என் காதலியா?

சாண்டில்யன்

## 19. அன்புச் சதி

கிளைவ் தன்னிடம் காட்டிய கடிதத்தில் கண்ட விஷயம் கவலை உண்டாக்கக் கூடியதாயிருக்க, கவலைக்குப் பதில் கிளைவ் உற்சாகத்தை அதிகமாகக் காட்டவே, விஜயகுமாரன் விவரணத்துக்கும் அப்பாற்பட்ட வியப்பை அடைந்து, "போர் மூளுவதில் என்ன அத்தனை உற்சாகம் உனக்கு?" என்று விசாரித்தான் தனது நண்பனை ஏறெடுத்து நோக்கி.

"கடிதத்தைச் சரியாகப் பார்த்தாயா?" என்று பதிலுக்கு வினவிய கிளைவின் குரலில் ஆரம்ப உற்சாகம் சிறிதாவும் குறையவில்லை.

"படித்தேன். கவர்னர் ஸாண்டர்ஸ் எழுதியிருக்கிறார். காப்டன் ஜின்ஜின்ஸை ஆற்காட்டின் மீது படையெடுக்க அனுப்பியிருப்பதாக..." என்ற விஜயகுமாரனின் இதயத்தில் வேதனையிருந்ததால் அது அவன் குரலிலும் பிரதிபலித்தது.

கிளைவ் அந்த வேதனையில் பங்கு கொள்ளவில்லை. லேசாக நகைத்துக் கொண்டே சொன்னான், "ஜின்ஜின்ஸுடன் 1000 ஐரோப்பிய சோல்ஜர்களும் 3,000 சிப்பாய்களும் சென்றிருக்கிறார்கள்," என்று.

"ஆம்," என்றான் விஜயகுமாரன் கடிதத்திலிருந்த விஷயத்தைக் கிளைவ் எதற்காகத் திருப்பிச் சொல்கிறான் என்பதை அறியாமல்.

"இதிலிருந்து என்ன தெரிகிறது?" என்று வினவினான் கிளைவ் பளபளத்த விழிகளை விஜயகுமாரன் மீது நாட்டி.

"பிரிட்டிஷ் கவர்னர் வலுச் சண்டையில் இறங்கிவிட்டார் என்று பரிபூரணமாகத் தெரிகிறது." விஜயகுமாரன் பதிலில் வெறுப்பு இருந்தது.

"அதல்ல பொருள்," என்றான் கிளைவ்.

"வேறென்ன?"

"முதன்முதலாக பிரிட்டிஷார் தங்களைக் காப்பாற்றிக் கொள்ளத் தீர்மானித்து விட்டார்கள் என்று அர்த்தம்..." என்று சற்று நிதானித்த கிளைவ், விஜயகுமாரனை அணுகி மறுபடியும் இயற்கை தோஷத்தால் ஆங்கிலத்தைக் கலந்து, "லுக் ஹியர் மை ஃப்ரண்ட்! இப்பொழுது பிரிட்டிஷார் திட்டமான நடவடிக்கை எடுக்காவிட்டால் தே வில் பி ஃபினிஷ்ட்," என்று கூறினான்.

அது உண்மை என்று தெரிந்ததால் விஜயகுமாரனும் தலையை ஆட்டினான். "தட் மஸ் ட்ரு," என்றும் கூறினான்.

ராஜபேரிகை




"சந்தா சாகிப் ஆற்காட்டில் வலுவான படையுடன் இருக்கிறார். புதுச்சேரியில் டூப்ளே பூரண பலத்துடன் இருக்கிறார். தட்சிண சுபாவான அவுரங்காபாத்தில் டி புஸ்ஸியின் ஆட்சி நடக்கிறது. தட்சிணத்தின் முக்கிய ஸ்தானங்கள் பிரிட்டிஷ் படையைச் சுற்றிக் கொண்டிருக்கின்றன. இப்பொழுது ஒன்று நாம் முன்னேறித் தாக்க வேண்டும்; அல்லது அழிபட வேண்டும். முன்னேறித் தாக்க கவர்னர் தீர்மானித்துவிட்டார். இந்த ஒரு சந்தோஷச் செய்தியை முதன் முதலாக இப்பொழுதுதான் நான் கேள்விப்படுகிறேன்," என்று விளக்கினான் கிளைவ்.

விஜயகுமாரன் சிந்தனையிலிறங்கினான். கிளைவின் உற்சாகம் அவனுக்கு இல்லை. "பிரெஞ்சு பலத்தையும் ஆற்காட்டு நவாப் பலத்தையும் ஒருங்கே தாக்க நமக்குப் பலமிருக்கிறதா?" என்று வினவினான் சிறிது நேரத்திக்குப் பிறகு சந்தேகத்துடன்.

"எந்த பலத்தைப் பற்றிக் கேட்கிறாய்?"

"பலத்தில் பல வகை இருக்கிறதா?"

"படை பலம், புத்தி பலம் என்று இரண்டு இருக்கிறது,"

"டுப்ளே உங்களைவிட இரண்டில் ஏதாவது ஒன்றில் குறைந்தவரா?"

"இப்பொழுது அவருக்குப் படை பலம் அதிகம். இதுவரையில் ஏற்பட்ட நிகழ்ச்சிகளைக் கொண்டு பார்த்தால் புத்தி பலமும் அதிகம்தான்."

"இரண்டில் ஏதாவது ஒன்றில் இப்பொழுது குறைந்து இருக்கிறதா?"

"குறைந்திருக்கிறது என்று சொல்ல முடியாது..." என்று இழுத்த கிளைவ் மேலும் சொன்னான்: "விஜயகுமார், டுப்ளே இதுவரையில் புத்தி சாலித்தனமாகத்தான் நடந்து கொண்டார். இப்பொழுது அவரது போக்குச் சரியாய் இல்லை. பிரஞ்சுப் படையின் சிறந்த தளபதியான டி புஸ்ஸியை அவுரங்காபாத்துக்கு அனுப்பிவிட்டார். செஞ்சிக் கோட்டையைப் பிடிக்க அந்த மகாவீரன் சென்றதில் டுப்ளேயின் ஒரு கை உடைந்துவிட்டது. தவிர, மனிதனுக்கு ஆசை இருக்கலாம், பேராசை இருக்கக் கூடாது."

"டுப்ளேக்கு என்ன பேராசை?" என்று வினவினான் விஜயகுமாரன்.

"தென்னிந்தியாவைப் பிரெஞ்சு மாகாணமாக்கப் பார்க்கிறார். அதற்காகக் கையை அவுரங்காபாத் வரையில் நீட்டிவிட்டார். அது எட்டாத தூரம். நெருக்கடி இங்கு ஏற்பட்டால் அங்கிருக்கிற படையோ, டி புஸ்ஸியோ இங்கு வரமுடியாது. டுப்ளேக்கு உதவி சந்தா சாகிப்தான். அவருக்குச் சந்தா சாகிப் என்றால் நமக்கு முகம்மது அலி. சந்தாசாகிப் டுப்ளேயின் கருவி என்றால், முகம்மது அலி பிரிட்டனின் கருவி."

"பிரெஞ்சுக் கருவி பலமானது," என்று சுட்டிக் காட்டிப் புன்முறுவல் கொண்டான் விஜயகுமாரன்.

"பிரிட்டிஷ் கருவிக்கு நாம் பலம் தருவோம்," என்றான் கிளைவ்.

"கருவிக்குப் பலம் தர முடியுமா?"

"கையாள்பவனைப் பொறுத்தது."

"கருவி மொக்கையாய் இருந்தால்?"

"சாணை பிடிப்போம்."

"எப்படியோ?"

"நாம் போரில் இறங்கினால் முகம்மது அலி திருச்சியில் உட்கார்ந்திருக்க முடியாது, போர் அவர் பெயரால் அவரைச் சாக்காக வைத்து நடப்பதால். நமது முயற்சி அவருக்கும் துணிவை உண்டாக்கும். அவரது படைகளும் நம்மைச் சேர்ந்து போராடும்," என்ற கிளைவ், "இப்போது சந்தேகம் தீர்ந்ததா?" என்று கேட்டான்.

"இல்லை," என்றான் விஜயகுமாரன் திட்டமாக.

"ஏனோ?" கிளைவின் கேள்வியில் பிரமிப்பு இருந்தது.

"இந்தப் போரை

# பத்மினி வீட்டுப் பரிசுக் கோப்பைகள்

நியூயார்க்கில் உள்ள நடிகை பத்மினி வீட்டு வரவேற்பு அறையில் ஓர் அலமாரி நிறைய வெள்ளிக் கோப்பைகள் இருக்கின்றன. அவை பத்மினிக்குக் கிடைத்த பரிசுகளா? இல்லை. அவர் வளர்க்கும் ஒரு டஜன் நாய்கள், பல்வேறு 'டாக் ஷோ'க்களில் கலந்து கொண்டு வாங்கிய பரிசுகளாம்! —(ஸ்கிரீன்)

சரோஜா ராமச்சந்திரன்.



நடத்தப்போவது காப்டன் ஜின்ஜின்ஸ்.''

''அதறு லென்ன?''

''திட்டமான முடிவுகளை எடுக்க முடியாதவன்.''

இதைக் கேட்ட கிளைவின் முகத்தில் வியப்பு பெரிதாக விரிந்தது. ''ஹொய் டூ யூ ஸே தட்?'' உணர்ச்சி மிகுதியில் ஆங்கிலத்தில் இறங்கினன்.

''ஐ கான் ரீட் எ மான் லைக் ஐ ரீட் எ புக் (புத்தகத்னதப் படிப்பதைப் போல் ஒரு மனிதனையும் என்னுல் எடை போட முடியும்),'' என்ருன் விஜயகுமாரன்.

காப்டன் ஜின்ஜின்ஸைப் பார்த்து விஜயகுமாரன் போட்ட எடையில் தவறு இல்லை என்பது கிளைவுக்குத் தெரிந்தது. ஆனுல் விஜயகுமாரன் படைத் தலைவர்களை அத்தனை தூரம் எடை போட முடியும் என்று அவன் அடியோடு நினைக்காததால் சிறிது நேரம் எதிரேயிருந்த மேஜைமீது கைகளை ஊன்றி மௌனமாக நின்ருன். பிறகு கேட்டான், ''ஹாவ் யூ எனி ஆல்டர் நேடிவ்? (வேறு மாற்று ஏதாவது இருக்கிறதா?)'' என்று.

''இருக்கிறது,'' விஜயகுமாரன் பதில் சந்தேகத்துக்கிடமின்றி வெளிவந்தது.

''என்ன மாற்று?''

''பிரிட்டிஷ் படையில் ஒருவனிருக்கிறன் துணிவுடன் காரியங்களை நிறைவேற்ற..''

''அவன்?''

''ராபர்ட் கிளைவ்.'' இதை மிகச் சாவதானமாகச் சொன்னுன் விஜயகுமாரன். இருப்பினும் அவன் குரலில் பெரு உறுதியும் நம்பிக்கையும் இருந்தது.

கிளைவ் தர்மசங்கடத்துக்குள்ளானுன். ''யூ ஆர் ஓவர்எஸ்டிமேடிங் மி.'' என்றும் கூறினுன் தனது பார்வையை மேஜை மீதிருந்த 'மாப்'பில் நாட்டி.

''ராபர்ட்!'' விஜயகுமாரன் அழைப்பில் உறுதியும் உணர்ச்சியும் கலந்திருந்தன.

''எஸ்?''

விஜயகுமாரனின் முகத்தில் சாந்தி நிலவிக் கிடந்தது. ''நான் முகஸ்துதி செய்பவனு?'' என்று வினவினுன் அவன்.

''இல்லை,'' என்ருன் கிளைவ் சங்கடத்துடன்.

''உன் சக்தி எனக்குத் தெரியும் லாண்டர்ஸுக்குத் தெரியாவிட்டாலும். தேவிக் கோட்டையில் உன் துணிவைப் பார்த்திருக்கிறேன் இரு முறை. கோழையான காப்டன் கோப்புடன் வந்து தோல்வியடைந்த சமயத்திலும் நீ கோட்டையைத் தாக்கத் தயாராயிருந்தாய். ஆனுல் தலைவன்

# கையாலும் பேசலாம்



நாவிருல்தான் பேச வேண்டும் என்பதில்லை. நா எழும்பாத நேரத்தில் கையும் பேசுவதுண்டு. கப்பலோட்டிய தமிழர் வ. உ. சிதம்பரத்தின் வாழ்க்கையில் ஓர் உருக்கமான நிகழ்ச்சி. இதை அவரது சுயசரிதையில் (முழுக்க—அகவற்பா வடிவில் இருக்கிறது) காணலாம். பிரிட்டிஷ் ஆட்சியை எதிர்த்துச் சொற்பொழிவு ஆற்றியதற்காக வ.உ.சி சிறைத்தண்டனை பெற்ற சமயம். தந்தை, மக்கள், மனைவியிடம் விடை பெறுகிருர்:

சென்றேம் சிறைக்கு. செல்வழி கோவில்முன்
நின்றார் என் பிதா நேர் பெரிய மைத்துனன்.
'கவலற்க' என்றேன். 'கடவுள் இருக்கிறார்.
கவலற்க நீ'யெனக் கழறினன் தந்தை.
என்முன் மகனை என்முன் கண்டிலேன்.
என்பின் மகனை என்பெரிய மைத்துனன்
எடுத்து வைத்திருக்க என்கண் கண்டதும்
அடுத்தது கண்ணீர் அடக்கினேன் வலியால்.
என்குடி லின்மேல் நின்றியம்பிய மாது
தன்கணீர் உகுத்துத் தலைபிறக்கை வைத்து
மிகமிக அழுதனள். 'வேண்டாம் அழுகை
மகவைப் பே'ணென வண்டியில் இருந்தயான்
கையால் பேசினேன்.

—ச.

சரியாய் இல்லாததால் அன்று தோல்வி ஏற்பட்டது உனக்கு. மறுமுறை வெற்றி கொண்டாய் தேவிக் கோட்டையை.."

"அப்படியா.."

"பிரிட்டிஷ் கவர்னர் உன்னைச் சரியாக உபயோகப்படுத்தவில்லை. நீ ஏற்கனவே சாணை பிடிக்கப்பட்ட கருவி. நீ இருக்க மொக்கைகளை அனுப்புகிறார் கவர்னர் முக்கிய காரியங்களுக்கு."

பிறகு இருவருமே பேச வில்லை. கடைசியில் கிளைவ் கேட்டான்: "இந்தக் கோட்டையைப் பார்த் தாயா?"

"பார்த்தேன்."

"எப்படியிருக்கிறது?"

விஜயகுமாரன் அதற்கு உட னடியாகப் பதில் கூறவில்லை. கிளைவின் முன்பாக அறையில் சிறிது நேரம் உலா வினான். பிறகு கூறினான். "கிளைவ்! இந்த *மதராஸ் பட்டணம் சரியாக இணைக்கப்படவில்லை. மூன்றுபகுதிகளாய் பிரிந்து கிடக்கிறது. வொய்ட் டவுன் என்ற அழைக்கப்படும் இந்தக் கோட் டைப் பகுதியில் வெள்ளையர் மட்டும் வசிக்கிறார்கள். இது சுமார் 700 கெஜம் சமுத்திரத்தை நோக்கியுள்ள கிழக்குப் பகுதியில் ஓடுகிறது. அகலம் உட்புற மாக 200 அடி. இதற்குப் புறம்பே மேற்கேயுள்ள பட்டணம் 1000 கெஜம் நீளம். இது பிளாக் டவுன். என்னைப் போன்ற கறுப்பர் வசிக்கும் பகுதி. பிளாக் டவுனுக்கு அப்பால் பெத்து நாயக்கன் பேட்டையும் முத்தியால் பேட்டையும் இருக்கின்றன. இங்கு கறுப்பர்களும் வெள்ளைக்காரர்களும் பங்களாக்கள் கட்டிக் கொண்டிருக் கிறார்கள். இந்தக் கடைசிப்பகுதியின் நீள மும் 1000 கெஜம், அகலமும் 1000 கெஜம். இந்த மூன்று பிரிவுகளை இணைக்கக் காப்டன் கிளைவ் அல்ல, ஜெனரல் லாரன்ஸே வந்தாலும் முடி யாது. இந்தக் கோட்டையை மட்டும் பாதுகாக்கக்கூடப் போதிய படைத்தளம் இங்கில்லை. இருந்தால் கிளைவின் காத லியைப் பகிரங்கமாக சோல்ஜர்கள் தொடத் துணிவார்களா?" இதைச் சொன்ன விஜயகுமாரன் புன்னகை கொண்டான்.

நண்பனின் புன்னகையைப் பறக்க அடிக்க ஒரு பதிலைச் சொன் னான் கிளைவ். "முதலில் அவள் என் காதலி அல்ல. அப்படியே இருந்தாலும் அது சோல்ஜர்களுக்குத் தெரியக் காரணமில்லை."

"என்ன சொல்கிறாய்?"

"அந்தப் பெண்ணை என் தலையில் கட்ட எட்மண்ட் பார்க்கி றான்," என்ற கிளைவ் மீண்டும் நகைத் தான். "நீ அன்று பார்த்த லாக் கெட்டை எட்மண்ட் நான் பார்க்கு மிடத்தில் வேண்டுமென்றே போட்டிருந் தான். அவனைத் திருப்தி செய்ய அதைத் திருடி வைத்துக் கொண்டேன். அவளை எனக்கு மனைவியாக்க அவன்தான் அவளை இங்கு வரவழைத்தான். இது அவன் அன்புச் சதி. அதனால் அந்த இடத்தைக் காலி செய்து இங்கு வந் தேன். அவள் இங்கு ஏன் வந்திருக்கி றாள் என்பது எட்மண்டைத் தவிர யாருக்கும் தெரியாது. தெரிந்தால் சோல்ஜர்கள் அவள் அருகே போயிருக்க மாட்டார்கள். அவளை மணம் செய்து கொள்வதில் எனக்கு ஆட்சேபணை இல்லை. ஆனால் இப்போது அது முடி யாது. அதற்கு அவகாசமுமில்லை. நாளைக் காலை நாம் புறப்படுகிறோம்."

"எங்கு?"

"வால்கொண்டாவுக்கு."

என்றான் கிளைவ் சிரித்துக் கொண்டே. அந்தச் சிரிப்பில் போர் வெறி இருந் ததை விஜயகுமாரன் கண்டான். கண் டதால் பிரமிப்புடன் கிளைவை நோக் கவும் செய்தான்.

(தொடரும்)



அட்டையில்: குமாரி மாதவி
வண்ணப்படம்: சு. வெ. ரா. மோகன்

---

* Vestiges of old Madras—Father Norbetth's Memoirs.

# தாய்க்குலத்தின் தளராத நம்பிக்கை பெற்றது குவாலிடி குளுகோஸ். நாவிற்கு இனிமை உடலுக்கும் நன்மை.

ASP-KFP-7720




குவாலிடி குளுகோஸ் பிஸ்கோத்துகளில் உயர்ந்த ரக கோதுமை, சர்க்கரை, பால் ஆகியவற்றிலுள்ள போஷாக்கு மிகுந்த வைட்டமின்கள் நிறைந்துள்ளன. நவநாகரிக இயந்திர சாதனங்களில் நேர்த்தியாக சுடப்பெற்ற குவாலிடி குளுகோஸ் பிஸ்கோத்துகள் இடைவேளையில் பள்ளிச் சிறுவர்கள் உண்டு களிக்க அருமையான சிற்றுண்டி. குவாலிடி குளுகோஸ் உங்கள் குழந்தைகளை சக்தி ததும்ப திகழவைப்பதை கண்டு மகிழுங்கள்.







குவாலிடி புட் ப்ராடக்ட்ஸ்
பெங்களூர் [illegible]

குவாலிடி தயாரிப்பவை உயர்ந்த பிஸ்கோத்துகளே.

# ராஜ

தேவனும் பட்டணம் என்று அழைக்கப்பட்ட தேவநாதன் பட்டினத்தின் ஸெய்ண்ட் டேவிட் கோட்டையில், தமது ஆலோசனை அறையில் கவர்னர் தாமஸ் ஸண்டர்ஸ் தமது இரு கால்களையும் எதிரே இருந்த மேஜை மீது போட்டுக் கொண்டும், கால்



6.10.77

# பேரிகை

பூட்ஸ்களின் நுனிகளை ஒன்றோடொன்று தட்டிக் கொண்டும், கையிலிருந்த நீள டம்ளரின் அடியிலிருந்த அரை பெக் விஸ்கியை லேசாக உறிஞ்சிக் கொண்டும் தீவிர சிந்தனையிலிருந்தாராகையால், முன்னறிவிப்பின்றிக் காப்டன் கிளைவ் உள்ளே நுழைந்ததைக் கூட அவர் கவனிக்கவில்லை. தன் வரவை அறிவிக்க கிளைவ் தொண்டையைக் கனைத்த பின்பே தனக்

கெதிரேயிருந்த சாளரத்தின் மூலம் தெரிந்த கடல் பகுதியைக் கவனிப்பதை விட்டு, கையிலிருந்த கண்ணாடி டம்ளரையும் மேஜை மீது வைத்து விட்டு, தமது கண்களை கிளைவ் மீது திருப்பினர் பிரிட்டிஷ் கவர்னர். அப்படித் திருப்பிய அவர் கண்களில் கேள்வி இருந்ததேயொழிய வாயிலிருந்து ஒரு வார்த்தை கூட உதிரவில்லையாகையால், "காப்டன் கிளைவ் ரிப்போர்டிங் யுவர் எக்ஸலென்ஸி," என்று தனது வரவை உத்தியோக முறையில் கிளைவ் அறிவித்தான்.

அதற்கும் கவர்னர் பதில் கூறவில்லை. தமது இரும்பு விழிகளை கிளைவின் மீது நாட்டினர் சில விநாடிகள். பிறகு டம்ளரிலிருந்த மீதி விஸ்கியையும் உறிஞ்சிவிட்டுத் தமது கால்களை மேஜைமீதிருந்து விலக்கி ஆசனத்தில் செங்குத்தாக உட்கார்ந்து, மேஜை மீதிருந்த ஒரு கோழி இறகு பேனவை எடுத்து ஏதோ விஷமம் செய்து விரல்களால் உருட்டினர். மீண்டும் அவரது இரும்புக் கண்கள் கிளைவின் மீது பதிந்தன.

அந்தப் பார்வையின் பொருளைக் கிளைவ் புரிந்து கொண்டிருக்க வேண்டும். "தங்கள் உத்தரவுப்படி காப்டன் ஜின்ஜின்ஸின் உணவுப் பொருள் பொதி வண்டிகள் கொண்டு வந்திருக்கிறேன்," என்று தெரிவித்தான் ஆங்கிலத்தில்.

அதற்கும் கவர்னர் பதில் கூறவில்லையாதலால் கிளைவே விளக்கினன்: "காப்டன் ஜின்ஜின்ஸ் ஆற்காட்டின் மீது படையெடுத்துச் சென்றிருப்பதாகத் தங்கள் உத்தரவில் கண்டிருந்தது. அவர்களுக்கு உணவு சப்ளை செய்ய வேண்டுமென்றும் கட்டளையிட்டிருந்தீர்கள். இருபது வண்டிகள் கொண்டு வந்திருக்கிறேன்."

கவர்னர் முதன் முதலாகத் தமது மௌன விரதத்தைக் கைவிட்டு, "ஹொய் டிட் யூ பிரிங் தெம் ஹியர்? (இங்கு எதற்காக அவற்றைக் கொண்டு வந்தாய்?)" என்று வினவினர்.

"ஹ்வேர் எல்ஸ் கான் ஐ டேக் தெம்? (அவற்றை வேறு எங்கு கொண்டு போவது?)" என்று கிளைவும் உறுதி கலந்த குரலில் பதில் கூறினன்.

"காப்டன்!" கவர்னரின் ஒற்றைச் சொல்லில் அதிகாரமிருந்தது.

"எஸ் எக்ஸலென்ஸி!"

"யூ ஆர் டு டேக் ஸப்ளைஸ் டு காப்டன் ஜின்ஜின்ஸ், நாட் டு மி (சப்ளையைக் காப்டன் ஜின்ஜின்ஸுக்குத் தான் செய்ய வேண்டும், எனக்கல்ல)" என்றார் கவர்னர்.

"அது தெரியும் எனக்கு," என்றான் கிளைவ்.

"தென்?"

"காப்டன் ஜின்ஜின்ஸ் ஆற்காட்டைப் பிடிக்க வேண்டும்."

"எஸ்."

"அதற்கு ஆற்காட்டை அடைய வேண்டும்"

"ஷ்யூர்."

"அடைய முடியாது. ஆற்காட்டுப் பாதையை சந்தா சாகிபின் படைகள் அடைத்து நிற்கின்றன. அது மட்டுமல்ல...." இந்த இடத்தில் கிளைவ் பேச்சை நிறுத்திக் கவர்னரை நோக்கினன்.

எந்தவித உணர்ச்சியையும் காட்டாத கவர்னரின் முகத்தில் கூட சிறிது உணர்ச்சி தெரிந்திருந்தது. "வேறென்ன?" என்று அவர் கேட்ட கேள்வியிலும் அந்த உணர்ச்சி பிரதிபலித்தது.

கிளைவ் மெள்ள விளக்கத் தொடங்கி, "இப்பொழுது பிரிட்டனும் பிரான்ஸும் சமாதானம் செய்து கொண்டிருக்கின்றன ஐரோப்பாவில். ஆகவே நாம் இங்கே நேரிடையாகப் போரில் இறங்க முடியாது. யாரை யாவது முன் வைத்து நாம் அவர்களுக்கு உதவுவதாகப் பாசாங்கு செய்து போரிட வேண்டும். ஆகவே நீங்கள் முகம்மது அலியை ஆற்காட்டின் மீது படையெடுக்க உத்தரவு அனுப்பியிருக்க வேண்டும். அந்தப் படை வரும் வரையில் காப்டன் ஜின்ஜின்ஸ் மெதுவாக நகர வேண்டும். ஆகையால் காப்டன்

ஜின்ஜின்ஸ் மெதுவாக நகரவேண்டும்; ஆகையால் காப்டன் ஜின்ஜின்ஸ் ஆற்காட்டை அடைய இன்னும் பதினைந்து நாட்களாவது ஆகும்''

''ஹோய் வால்கொண்டா?'' என்று வினவினர் லாண்டர்ஸ்.

''ஆற்காடு போகும் வழியில் இருக்கும் சிறிய கோட்டை அதுதான். அதன் தலைவன் நடுநிலை வகிப்பதால் சந்தா சாகிபின் துருப்புகள் அதற்கு அப்புறமே நிற்கின்றன. ஆகவே முகம்மது அலியின் படைகள் வரும் வரையில் பிரிட்டிஷ் படை பந்தோபஸ்துடன் தங்க அதுதான் சரியான இடம்'' என்று பதில் கூறினன் கிளைவ்.

இதைக்கேட்ட லாண்டர்ஸ் மீண்டும் மௌனம் சாதித்தார். கிளைவ் மேலே தொடர்ந்தான். ''ஆற்காட்டுக்கும் மதராஸுக்கும் இடையிலுள்ள சாலையில் சந்தா சாகிபின் படைகள் இருக்கின்றன. உணவுப் பொருளைக் கொண்டு செல்ல அந்த வழி அபாயமானது. ஆகவே இங்கு வந்து வால்கொண்டா போகத் தீர்மானித்தேன். அதனால்தான் இங்கு வந்தேன்.''

கவர்னரின் இதழ்களில் புன்முறுவல் படர்ந்தது. ''காப்டன் ஜின்ஜின்ஸைப் பற்றி என்ன நினைக்கிறாய்?''

இதனால் ஒரு விநாடி கிளைவ் அசந்து போய் நின்றான். பிறகு பதில் சொன்னான். ''இருக்கிற காப்டன்களில் அவர்தான் ஸீனியர்,'' என்று.

கவர்னரின் புன்முறுவல் மேலும் விகசித்தது. ''ஈஸ் ஹி காம்பிடண்ட்?( அவர் தகுதி வாய்ந்தவரா?)'' என்று வினவினர் கவர்னர்.

''எனது ஸீனியர்களைப்பற்றி நான் விவாதிப்பதில்லை.''

கிளைவ் எந்தவித சர்ச்சையிலும் ஈடுபட மாட்டான் என்பதைப் புரிந்து கொண்ட கவர்னர் பேச்சை லேசாக மாற்றினர். ''காப்டன் ஜின்ஜின்ஸ் இங்கிருந்து ஏப்ரல் முதல் வாரத்தில் கிளம்பினர். வால்கொண்டாவைப் பதினைந்தாம் தேதி அடைந்தார். அங்கேயே கோட்டைக்கெதிரே முகாம் செய்திருக்கிறார்,'' என்று கூறியதன்றி, ''நோ ஆக்டிவிடி, நோ டெஸ்பாட்சஸ் (நிகழ்ச்சிகளுமில்லை, தபால்களுமில்லை அவரிடமிருந்து)'' என்று விளக்கினர்.

''அவர் முகம்மது அலியின் படைகளுக்காகக் காத்திருக்கலாம்,'' என்றான் கிளைவ்.

''முகம்மது அலியின் சகோதரன் அப்துல் வஹாப்கான் பெரும் படையுடன் வால்கொண்டாவை அடைந்து நான்கு நாட்களாகின்றன,'' என்று சுட்டிக் காட்டினர் கவர்னர்.

''காப்டன் ஜின்ஜின்ஸ் சரியான சமயத்தை எதிர் பார்த்துக் காத்திருக்கலாம்.''

கவர்னர் திடீரெனத் தமது கைகளை மேஜை மீது குத்தி, ''ஆனல் சந்தா சாகிப் காத்திருக்க மாட்டான்,'' என்று சீறினர். அத்துடன், ''மை பாய்! இன் எனி வார் டிலே இஸ் டேஞ்சரஸ் (மகனே! எந்தப் போரிலும் தாமதம் அபாயமானது,'' என்றும் சொன்னர் தமது சீற்றத்தைச் சிறிது அடக்கிக் கொண்டு. பிறகு கையைப் பின்னல் கட்டிக் கொண்டு அந்த அறையில் மௌனமாகப் பல விநாடிகள் உலாவினர். திடீரென்று நின்று கிளைவை அந்த இரும்பு விழிகளால் நோக்கிக் கொண்டே, ''கிளைவ்! காப்டன் ஜின்ஜின்ஸைப் பற்றி எனக்கு அதிக நம்பிக்கையில்லை. அவனுக்குப் பதில் நீ

---



திருச்சி வானெலி நிலையத்தில் இளைய பாரதம் நிகழ்ச்சியில் ஒரு நேயர் தன் அலுவலகத்திற்கு வந்த ஒரு ஆங்கிலக் கடிதத்தைப் படித்தார்:

"My wife is suffering from fever. As I am the only husband available in the house I request you to grant me leave for one day."

எஸ். மணி






போயிருந்தால் நான் நம்பிக்கையுடன் இருந்திருப்பேன். தட் ஸ்விஸ் பெலோ (காப்டன் ஜின்ஜின்ஸ்) காண்ட் டேக் டெஸிஷன்ஸ் (முடிவுகளை துரிதமாக எடுக்க மாட்டான்)'' என்று தமது இதயத்திலுள்ள கருத்தை வெளியே திறந்து கொட்டினார். 'ஐ காண்ட் ஹெல்ப் ஸெண்டிங் ஹிம். ஹி இஸ் தி ஸீனியர் மோஸ்ட். டாம் த ஸீனியாரிடி! (நான் வேறெதுவும் செய்வதற்கில்லை. அவன்தான் ஸீனியர். எழவெடுத்த ஸீனியாரிடி!)'' என்று எரிந்தும் விழுந்து தம்மை நொந்து கொண்டார் கவர்னர்.

அவரைச் சாந்தப் படுத்த முயன்ற கிளைவ், ''இதற்குள் நாம் எந்தத் தீர்மானத்திலும் இறங்க வேண்டாம். விளைவுகளைக் கவனிப்போம், காத்திருப்போம்,'' என்றான்.

''காத்திருப்போம்! ஒரு நூற்றாண்டு காத்திருந்து விட்டோம். பிரான்ஸை இங்கு வேரூன்றவிட்டோம். மீதி நாளையும் காத்திருந்து கழிப்போம்,'' என்ற கவர்னர் மெல்ல சிரித்துக் கொண்டார்.

''ஏன் சிரிக்கிறீர்கள்?''

''ஸ்பெயினின் கடல் பலத்தை, முதுகெலும்பை முறித்த பிரிட்டன் இந்தச் சிறு காலனியில் அடங்கிக் கிடக்கிறது. அந்தப் பரிதாபத்தைப் பார்த்துச் சிரித்தேன்,'' என்ற கவர்னர் மேலும் கேட்டார், ''கிளைவ்! எங்கும் வெற்றி வாகை சூடும் பிரிட்டிஷ் சோல்ஜர்கள் இங்கு ஏன் படுத்துக் கிடக்கிறார்கள்? சிங்கமான பிரிட்டன் இங்கு ஏன் நரியாகிவிட்டது?'' என்று,

''பிரிட்டன் ஒரு நாளும் நரியாகாது. சிங்கம் பதுங்கிக் கிடக்கிறது, பாய்வதற்காக. அதுவும் தங்கள் தலைமையில் கண்டிப்பாக அது தன் சொரூபத்தைக் காட்டும்.''

''லெட் மீ ஹோப் ஸோ,'' என்ற கவர்னர், ''யூ ஹாவ் எனிதிங் ஸ்பெஷல் டு டெல் மீ?'' என்றார்.

''நதிங்.''

---



'நமது உணவு அமைச்சர் எட்மண்ட் உணவு அருந்தாமல் கூட்டத்தில் கலந்து கொண்டிருக்கிறார். நான் சாப்பிட்டு முடித்துவிட்டேன். அவர் பசியுடன் இருப்பதால், எனது உரையை முடித்துவிட்டு அவரைப் பேச அழைக்கிறேன்.'

(மதியம் 2-30 மணிக்கு நடைபெற்ற மதுரை வழக்கறிஞர்கள் சங்க வரவேற்பில் அமைச்சர் பி. டி. சரஸ்வதி பேசியது.)

—ராம்கு.

"வெல் ஆர் யூ ஸ்டார்ட்டிங்?"

"நெவ."

"யூ டோண்ட் வாண்ட் டு ரெஸ்ட்?"

"நோ"

இதைக் கேட்ட கவர்னர் பெருமூச்செறிந்தார். கடைசியில் ஒன்று கேட்டார், "நீ வால்கொண்டாவிலிருந்து திரும்பும்போது இப்படி வரமுடியுமா?" என்று.

"வருகிறேன்," என்றான் கிளைவ்.

"அந்தண்ண நிலைமையை நன்கு அறிந்து வா" என்றார் கவர்னர்.

"சரி" என்று கூறி விடை பெற்ற கிளைவ் அப்பொழுதே போதி வண்டிகளுடன் வால்கொண்டாவுக்குப் புறப்பட்டான். அவன் வால்கொண்டாவை அடைய இரண்டு நாள் பிடித்தது. அங்கு அவன் கண்ட நிலை பயங்கர நிலை! காப்டன் ஜின்ஜின்னின் படைகள் கூடாரமடித்துக் கோட்டைக்கு வெளியே தங்கியிருந்தன. யாரும் அவற்றின் மீது பாய்ந்து அழித்துவிடலாம். எங்கும் கோலாகலம் நிரம்பி நின்றது. அந்த நிலையைக் கண்டதால் வெகுண்ட கிளைவ் ஜின்ஜின்னின் கூடாரத்தை நோக்கிச் சென்றான். ஜின்ஜின்ஸ் தனியாயில்லை. அவன் நாற்காலியின் அருகே ஒருபெண் ஜின்ஜின்னின் தலை மீது இடித்துக்குனிந்து மதுவையும் அவன் வாயில் கோப்பையின் மூலம் புகட்டிக் கொண்டிருந்தாள். ஜின்ஜின்ஸ் சொர்க்கானுபவத்திலிருந்தான்.

(தொடரும்)



கடல் நீரில் மிதக்கிறதென்பது இப்ப எல்லாம் ஃபேஷனாகத்தானிருக்கும். கண்ணெரிச்சலும், உடம்பு நமைச்சலும் கரைக்கு வந்த பிறகல்லவா தெரியும்?

ஆட்டுக்கார அலமேலு—ஸ்ரீப்ரியா.

டெலிபோன் விடை!

73688—நாகேஷ்
71364—பிம்சிங்
73018—டி. எம். எஸ்.
40599—எஸ். ஆர். ஈசுவரி

# ராஜ பேரிகை

13-10-77

## 21. வஹாப்கான் வழி

காப்டன் ஜின்ஜின்ஸின் உல்லாச நிலை கண்டு கிளேவ் கோபத்தின் உச்ச நிலையை அடைந்தானாலும் அவன் அந்தச் சமயத்தில் ஏதும் செய்ய மாட்டாமல் சிலையென நின்றான் பல விநாடிகள். பிறகு தன்னையும் மீறி, ''காப்டன்!'' என்று சீற்றத்துடன் ஜின்ஜின்ஸை அழைத்தான்ஒருமுறை. கிளேவின் குரலைக் கேட்டதும் அச்ச முற்ற அந்தப் பெண் விலகி ஓட முயன்றாலும், அதைக் குடி வெறி யால் அனுமதிக்காத காப்டன் ஜின்ஜின்ஸ் தனது கழுத்தைச் சுற்றி யிருந்த அவள் கையை இறுகப் பிடித்துக் கோப்பையிலிருந்த மீதி மதுவைத் தானாகவே வாயில் புகட் டிக் கொண்டதன்றி, ''ஹவ் ஆர் யூ?'' என்று கிளேவையும் நோக்கிக் குழறினான்.

''காப்டன் கிளேவ்!'' என்ற கிளேவின் குரல் அந்தக் கூடா ரத்தைக் கத்திபோல் கிழித்தது.

ஜின்ஜின்ஸ் அப்பொழுதும் தெளியவில்லை. குடிவெறியிலிருந்து, ''யூ ஹாவ் ப்ராட் ஃபுட்? (நீ உணவு கொண்டு வந்திருக்கிறாயா?)'' என்று வினவினான் அதிகார தோரணையில்.

''எஸ்,'' என்றான் கிளேவ் எரிச்சலுடன்.

''ஹௌ மச் ஒயின்?'' என்று வினவினான் காப்டன் ஜின்ஜின்ஸ்.

அதற்கு மேல் பொறுக்காத கிளேவ் நான்கே அடிகளில் தனக்கும் ஜின்ஜின்ஸுக்கும் இருந்த இடத்தைத் தாண்டி அந்தப் பெண்ணின் கையிலிருந்த கோப்பையை வாங்கித் தூர எறிந்துவிட்டு அந்தப் பெண்ணையும், ''கெட் அவுட்,'' என்று கூற, பெண் கூடா ரத்தை விட்டுப் பறந்தாள். பிறகு கிளேவ் அந்தக் கூடாரத்தின் மூலைக்குச் சென்று அங்கிருந்த நீண்ட மண் கூஜாவிலிருந்த குளிர்ந்த நீரை எடுத்து ஜின்ஜின்ஸின் தலையில் அபிஷேகம் செய்தான். பிறகு, ''யாரங்கே! ஆர்டர்லி?'' என்று கூவினான். கூடார வாயிலை நோக்கி உள்ளே ஓடிவந்த ஆர்டர்லியிடம், ''காப்டனை படுக்க வை. அவர் தெளிந்தபின் சந்திக்கிறேன்,'' என்று கூறிவிட்டு வெளியே சென்று அங்கிருந்த படைத்தளத்தின்மீது தன் கண்களைச் செலுத்தினான்.

பிரிட்டிஷ் படையும் அப்துல் வஹாப்கான் படையும் எதிரேயிருந்த கோட்டைக்கு வெளியே நன்றாகப் பரந்து முகாம் செய்திருந்தது. திருச்சியிலிருந்து நாற்பத்து ஐந்தாவது மைலில் ஆற் காட்டுச் சாலையில் இருந்த வாலி கண்டபுரம் என்ற வால்கொண்டா

சாண்டில்யன்

யின் கோட்டை அத்தனை பெரிதல்ல வென்றாலும் வலுவுள்ளதாகவே இருந்தது. அதன் வாயிலுக்கு நேர் எதிரே ஆழமான பெரிய நீர்நிலை இருந்தது. அந்த நீர் நிலையைத் தாண்டியே இன்றைய முகாம் செய்திருக்கிறார்கள் அதை ஏன் அவன் பிடிக்கவில்லையென்பது லினோவுக்குப் புரியவில்லை. ஆகவே அங்கிருந்த படைத்தளத்தின் மூலமே நடந்து சென்றவன் ஆங்காங்கு படைவீரர் படுத்துக் கிடப்பதையும் காப்டன்களின் கூடார வாயில்களில் மட்டும் விளக்குகள் எரிவதையும் பார்த்தான். அந்தக் கூடாரங்களில் ஒன்றின் வாயிலில் வரிசையாகத் தான் அழைத்து வந்த பொதி வண்டிகள் அவிழ்த்துவிடப்பட்டிருந்ததையும், அதன் முன்வெளியில் நின்று கொண்டிருந்த விஜய குமாரன் மிகுந்த சினத்துடன் இரைந்து கொண்டிருந்ததையும் கண்ட லினோவ் அந்த இடத்தை அடைந்து. "என்ன விசேஷம் விஜய குமார்?" என்று வினவினான்.

"சென்னையிலிருந்து பொதி வண்டியைக் கொண்டுவந்திருக்கிறோம். உணவுப் பொருள்களை இறக்கவோ வாங்கவோ யாருமில்லை." என்றான் மிகுந்த கோபத்துடன் விஜயகுமாரன்.

இந்த இரைச்சலைக் கேட்டுக் கூடாரத்துக்குள்ளிருந்து வெளியே வந்தவனைப் பார்த்ததும் வியப்படைந்த லினோவ், "காப்டன் டால்டன்! நீ இங்கேயா இருக்கிறாய்?" என்றான்.

காப்டன் டால்டனின் கூரிய விழிகள் லினோவின்மீது பதிந்தன. "லினோவ்! இங்கு எதற்கு வந்தாய்?" என்று வினவினான்.

"உணவு சப்ளை கொண்டு வந்தேன். இதோ, மீட் மை லெப்டினண்ட் மிஸ்டர் விஜயகுமார்," என்று விஜயகுமாரனை அறிமுகப்படுத்தியதன்றி வந்த காரணத்தையும் விவரித்தான் லினோவ்.

விஜயகுமாரனும் காப்டன் டால்டனும் கை குலுக்கிய பிறகு



விஜயகுமாரன் வினவினான்: "இந்த வஸ்டிகளை யாரிடம் ஒப்படைப்பது?" என்று.

காப்டன் டால்டன் ஒரு விநாடி சிந்தித்தான். பிறகு ஒரு பிரிட்டிஷ் லெப்டினண்டை அழைத்து, "லெப்டினண்ட்! டேக் சார்ஜ் ஆப் தி சப்ஸீ." என்று உத்தரவிட்டு கிளைவையும் விஜயகுமாரனையும் தனது கூடாரத்துக்குள் அழைத்துச் சென்றான். கூடாரத்துக்



குள் சென்று மூவரும் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டதும் கிளைவ் வினவினான், "டால்டன்! வாட்டீஸ் ஹாப்பனிங் ஹியர் (இங்கு என்ன நடக்கிறது)?" என்று.

"நத்திங் (எதுவும் நடக்கவில்லை)," என்றான் டால்டன் துக்கம் நிரம்பிய குரலில்,

"கோட்டை வாயிலில் கையைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருக்கவா இங்கு நமது படை வந்திருக்கிறது?" என்று வினவினான் கிளைவ் ஆத்திரத்துடன்.

"அப்படித்தான் தெரிகிறது."

"காப்டன் ஜின்ஜின்ஸ் என்ன செய்கிறார்?"

"குடிக்கிறார். யாராவது சுதேசிப் பெண்கள் அகப்பட்டால் உல்லாசமாயிருக்கிறார்."

"கோட்டையை ஏன் பிடிக்கவில்லை?"

"கோட்டை அதிகாரி கதவுகளைத் திறக்க மறுக்கிறார்."

"கதவுகளைத் திறக்க மறுக்கிறாரா?" என்ற கிளைவின் கேள்வியில் ஏளனமும் வியப்பும் கோபமும் எல்லாமே கலந்து தாண்டவமாடின.

"ஆம்," என்றான் காப்டன் டால்டன் சர்வசாதாரணமாக.

"கோட்டைத் தலைவன் கதவுகளைத் திறந்துவிட்டு பாண்டு முழங்க உங்களை வரவேற்க வேண்டுமென்று எதிர்பார்க்கிறீர்களா?" என்று சீறினான் கிளைவ்.

"அப்படித்தான் தோன்றுகிறது," என்ற காப்டன் டால்டன் மெள்ள கிளைவை நோக்கி, "கிளைவ்! நீ எனக்கு ஒரு உபகாரம் செய்ய முடியுமா?" என்று வினவினான்.

"முடிந்தால் செய்கிறேன்." கிளைவின் பதிலில் வியப்பு ஒலித்தது.

"உன்னால் முடியும்."

"சரி சொல்."

"என்னை இந்தத் தொடை நடுங்கியிடமிருந்து விலக்கிவிட வேண்டும்."

"யாரிடமிருந்து?"

"ஜின்ஜின்ஸிடமிருந்து."

"ஏன்?"

"எனக்கு அவமானம் தாங்கவில்லை."

"என்ன அவமானம்?"

"சுதேசி சிப்பாய்கள் நம்மை ஏளனம் செய்கிறார்கள். நேரிலல்ல. அவர்கள் பார்வையில் ஏளனமிருக்கிறது.

கலிபோர்னியாவில் சாக்ரமெண்டோ என்ற நகரில் ருடால்ப் மார்டினஸ் என்பவர் அச்சகம் ஒன்று நடத்தி வருகின்றார். அவர் தன் அச்சகத்தைப்பற்றி, 'பணத்தைத் தவிர எல்லாவற்றையும் அச்சிடுகின்றது' என்று விளம்பரப் படுத்திக் கொண்டிருந்தார். அண்மையில் அவர் கைது செய்யப்பட்டுள்ளார். எதற்குத் தெரியுமா? இருபது டாலர் நோட்டுகளைக் கள்ளத்தனமாகத் தனது அச்சகத்தில் அச்சிட்டதற்காக!

—மனோகரவேல்,

ஆதாரம்: 'நியூடைம்ஸ்.'




---

நம்மையும் பார்த்துக் கோட்டையையும் பார்க்கிறார்கள்.''

இதைக் கேட்ட கிளைவ் தீவிர சிந்தனையில் இறங்கினான். ''டால்டன்! நாளை ஜின்ஜின்ஸுடன் பேசுவோம். இப்பொழுது அவன் சுயநிலையில் இல்லை,'' என்று சமாதானம் கூறினான். அத்துடன் சொன்னான், ''காப்டன்! ஜின்ஜின்ஸைத் தனியாக இந்தப் படையுடன் விட்டுப்போவது பிரிட்டனை சந்தாசாகிப்பின் கையில் ஒப்படைப்பதாகும். நீ அனுபவமுள்ள காப்டன். நீயும் நகர்ந்து விட்டால் பிரிட்டன் கர்நாடகத்திலிருந்து இங்கிலாந்துக்கு மூட்டை கட்டலாம்,'' என்று. ''அது மட்டுமல்ல, கோழையான காப்டன் ஜின்ஜின்ஸை ஓரளவு நடவடிக்கைக்குத் தூண்ட உன்னைப் போன்ற ஒரு சீனியர் காப்டன் இங்கு தேவை,'' என்றும் சுட்டிக்காட்டினான் கிளைவ்.

கிளைவின் உபதேசங்கள் காப்டன் டால்டன் காதில் ஏறவில்லை. ''சரி, படுத்துக் கொள் கிளைவ். லெப்டினண்ட், நீங்களும் இங்கேயே தங்கலாம்,'' என்று இருவரும் படுக்க ஏற்பாடுகளைச் செய்தான் டால்டன்.

அன்று இரவு கிளைவுக்குத் தூக்கம் அடியோடு பிடிக்காததால் நள்ளிரவில் விஜயகுமாரனுடன் கூடாரத்திலிருந்து கிளம்பிப் படைகளைப் பார்க்கப் போனான். படை உறங்கிக் கிடந்தது. ஆங்காங்கிருந்த காவலர் மட்டும் கிளைவைத் தடுத்தார்கள். யாரென்று தெரிந்ததும் தலைதாழ்த்தி வழிவிட்டார்கள். படுத்திருந்த படையையும் சற்று அப்பாலிருந்த அப்துல்வஹாப் கான் கூடாரத்தையும் கோட்டையையும் கவனித்த கிளைவ் ''இத்தனை பெரிய படையை வைத்துக் கொண்டு ஜின்ஜின்ஸ் ஏன் போர் துவங்க மறுக்கிறான்?'' என்று பக்கத்தில் வந்துகொண்டிருந்த விஜயகுமாரனை விசாரித்தான்.

''ஜின்ஜின்ஸ் சமாதானவாதி,'' என்று கூறி நகைத்தான் விஜயகுமாரன்.

''நீயாயிருந்தால் என்ன செய்வாய் இந்த நிலையில்?'' என்று வினவினான் கிளைவ்.

''இந்தச் சிறுகோட்டைமீது இரண்டு பீரங்கிகளைக் கொண்டு குண்டு வீசுவேன். பிறகு ஒரு படைப் பிரிவுடன் சென்று கோட்டைக் கதவுகளைத் தாக்கிக் கோட்டைக்குள் நுழைந்து விடுவேன். பிறகு....''

''பிறகு?''

''சந்தாசாகிப்புக்காகக் காத்திருப்பேன்.''

''சந்தாசாகிப் வந்தால்?''

''கோட்டைக்கு வெளியில் உள்ள ஆழமான நீர்நிலையை அரணாகக் கொண்டு சந்தாசாகிபின் படைமீது பீரங்கிக் குண்டுகளை வீசுவேன். பிறகு இரவில் சுற்றிச் சென்று சந்தாசாகிபைப் பின்புறத்தில் எதிர்பாராத விதமாகத் தாக்குவேன். முடிவு உனக்குத் தெரியும்,'' என்று விஜயகுமாரன் விளக்கினான்.

கிளைவ் ஆமோதித்ததற்கறி குறியாகத் தலையை அசைத்தான். "தட்டீஸ் தி கரெக்ட் மெதட் (அது தான் சரியான வழி)," என்று கூறினான்.

அப்பொழுது அவர்களுக்குப் பின்னாலிருந்து, "உங்கள் வழியை யார் கேட்கப் போகிறார்கள்?" என்று ஒரு குரல் எழுந்தது.

திரும்பிப் பார்த்த இருவரும் திக்பிரமை பிடித்து நின்றார்கள். அவர்களுக்குப் பின்னால் ஆஜானுபாகுவான ஒரு முஸ்லிம் வீரன் நின்றிருந்தார். "ஐ ஆம் அப்துல் வஹாப்கான்," என்று தன்னை ஆங்கிலத்தில் அறிமுகமும் செய்து கொண்டார்.

"ஐ ஆம்....." என்று கிளைவ் துவங்கி வாசகத்தை முடிக்கு முன்பு முகம்மது அலியின் சகோதரரான அப்துல் வஹாப்கான், "ஐ நோ யூ ஆர் கிளைவ். திஸ் பிரண்ட் ஈஸ் விஜயகுமார். புவர் லெப்டினண்ட்," என்று வாசகத்தை முடித்தார். அத்துடன் நிற்காமல், "காப்டன் கிளைவ்! ஐ ஆம் ஹாப்பி யூ ஆர் டேகிங் கமாண்ட் ஹியர் (காப்டன் கிளைவ்! இங்கு தலைமை ஏற்க நீங்கள் வந்தது எனக்கு மிக்க மகிழ்ச்சி)," என்றும் உற்சாகத்துடன் கூறினார்.

காப்டன் கிளைவின் விழிகள் கம்பெனி நவாபின் சகோதரரை அனுதாபத்துடன் பார்த்தன. "நான் இங்கு தலைமை ஏற்க வரவில்லை. உணவுப் பொருள் கொண்டு வந்தேன்," என்றான்.

வஹாப்கானின் வதனம் சட்டென்று சுண்டிவிட்டது. "தலைமை ஏற்க வரவில்லையா?" என்ற அவர் கேள்வியில் ஏக்கமும் இருந்தது.

"இல்லை."

"ஆனால் நீங்கள் இந்த ஜின் ஜின்ஸைவிடச் செயல் வீரராயிற்றே?"

"யார் சொன்னது?"

வஹாப்கான் சிறிது சிந்தித்தார். "நீங்கள் தேவிக்கோட்டையை வெற்றி கொண்டது எனக்குத் தெரியும். உங்கள் வீரம் கர்நாடகத்தில் பெரிதும் பரவியிருக்கிறது," என்றார்.

கிளைவ் மிகவும் வியப்படைந்தான். "நான் நம்பவில்லை," என்றான் அடக்கத்துடன்.

"என் கூடாரத்துக்கு வாருங்கள்," என்று கூறிய வஹாப்கான் தமது

---

## ஒரு துணிதான் காரணம்



கொலையாளி பிடி பட்டது எப்படி?

அமெரிக்க நாட்டிற்கு ஏப்ரகாம் லின்கன் ஆற்றிய தொண்டு அளவிடற்கரியது. அவரைக் கொலை செய்த பூத் என்பவன் அகப்படுவதற்கு ஓர் அகலமான வண்ணத் துணி காரணமாக இருந்தது.

நாடகக் கொட்டகையின் மாடி அறை ஒன்றிலிருந்து (பால்கனி) லின்கன் நாடகம் பார்த்துக் கொண்டிருந்தபோது, பூத் அறையில் நுழைந்தான். மாடியின் உயரம் பன்னிரண்டு அடி இருக்கும். லின்கனின் முகத்தருகே துப்பாக்கியை நீட்டிச் சுட்டுவிட்டு அவன் கீழே குதித்தான். பால்கனியை ஒட்டித் தைக்கப்பட்டிருந்த பெரிய வண்ணத் துணியில் அவன் கால் சிக்கி எலும்பு முறிந்துவிட்டது. அத்துடனேயே அவன் வெளியேறி, குதிரையிலேறிப் பறந்துவிட்டான். நாட்டின் தென் பகுதியை அடைய முடிந்திருந்தால் —அங்கு லின்கனுக்கு எதிர்ப்பு அதிகம்—பிறகு அவனைப் பிடித்திருக்கவே முடியாது. எலும்பு முறிவால் ஏற்பட்ட நோவு காரணமாக அவனது பிரயாணம் தடைபட்டது. தப்புமுன் சிக்கிவிட்டான்.

அவன் காலை இடறிவிட்ட துணி! அமெரிக்க தேசிய கொடி.

கூடாரத்தை நோக்கி நடக்கலானுர். அவா நீண்ட கால்கள் வெகுவேகமாக வும சீராகவும பாவிச் சென்றன தரை யில். அவரைப் பின் தொடர்ந்த கிளை வும் விஜயகுமாரனும் பெரிய வீரனெரு வனைத் தாங்கள பின்பற்றுவதை உணர்ந்தார்கள். இத்தகைய வீரனைத் தம்பியாக உடைய முகம்மது அலி ஏன் கஷ்டத்திலிருக்கிருர் என்பது இரு வருக்கும் புரியவில்லை.

மூவரும் அப்துல் வஹாப் கான் கூடாரத்தை அடைந்ததும அப் துல் வஹாப்கான் முதலில் உள்ளே நுழைந்து பிறகு மற்ற இருவரையும் உள்ளே வரும்படி சைகை செய்தார். உள்ளே சென்ற இருவரும் பெரும் பிர மைக்குள்ளாஞர்கள். ஜின்ஜின்ஸுக்கு மது புகட்டி மோகத்தையும் புகட்டிய அந்த சுதேசிப் பெண் கை கால்கள் கட்டப்பட்டு தரையில் உருட்டப்பட்டி ருந்தாள். அவளை நோக்கி ஒரு ஆப் பிரிக்க வீரன் துப்பாக்கியைப் பிடித்துக் கொண்டிருந்தான். அவளை அணுகிய அப்துல் வஹாப்கான், "உம்! சொல். உன்னை அனுப்பியது யார்?" என்று வினவினுர்.

அவள் பதில் சொல்லாமல் மிரள மிரள விழித்தாள். "சரி, அவ ளைக் கொன்று விடு," என்று உத்தர விட்ட அப்துல் வஹாப்கான் கிளைவை யும் விஜயகுமாரனையும் பார்த்து, "வாருங்கள். நாமும் சிறிது குடிப் போம்," என்று அழைத்தார். அந்தச் சமயத்தில் அந்தப் பெண்மீது குறி வைத்திருந்த துப்பாக்கியின் குதிரை இழுக்கப்பட்ட சத்தம்கேட்டது."வேண் டாம். சொல்லி விடுகிறேன்," என்று அந்தப் பெண் கிரீச்சென்று கத்தினுள்.

அப்துல் வஹாப்கான் திரும்ப வும் அவளை நோக்கிச் சென்ருர். "சரி சொல்," என்ருர்.

அந்தப் பெண் மடமட வென விஷயத்தைக் கக்கினுள். அதைக் கேட்ட கிளைவின் முகத்தில் கவலை பெரி தாகப் படர்ந்தது. "இந்த ரகசியத்தை எப்படிக் கண்டுபிடித்தீர்கள்?" என்று வினவினுன் கிளைவ்.

"எங்களுக்கு வழிகள் பல இருக்கின்றன. அதில் இதுவும் ஒன்று," என்ற அப்துல் வஹாப்கான் மர்மத்தை அவிழ்க்கத் துவங்கினுர்.

(தொடரும்)



செப். 25: துணிகளின் மீது விலையையும் வரியையும் முத் திரை குத்துவதற்கு ஜவுளி வியாபாரி கள் எதிர்க்கிருர்கள். துணியின் அழகு கெட்டுவிடுமென்று பயப்படு வது நியாயம்தானே?

செப். 26: நூற்பு ஆலை யில் சிற்றுண்டிச் சாலை திறக்கப் பட்டது. ஊசிப்போன வடைகளை இனி வீணடிக்கமாட்டார்கள்.

செப். 27: அங்கோலா வுக்குத் தந்திகள் அனுப்பினுல் ஏற் றுக் கொள்ளப்பட மாட்டாது என்று சென்னை தபால் தந்தி இலாகா தெரிவித்திருக்கிறது. என்னவோ அலங்கோலா.

செப். 28: சென்னை விமான நிலையத்தில் ஓர் அமெரிக்க தம்பதியிடமிருந்து 16,000 ரூபாய் மதிப்புள்ள கணக்கிடும் யந்திரங்களைக் கைப்பற்றினுர்கள். மதிப்பைக் கணக் கிடக் கஷ்டம் இருந்திராது.

செப். 29: பெரம்பூர் ஹைரோடில் ஒரு லாரியின் சக்கரம் கழன்று தனியாக ஓடி ஒருவரைத் தாக்கியது. துரதிர்ஷ்டச் சக்கரம்.

செப். 30: பருப்பு விலை குறைய அரசு நடவடிக்கை எடுக்கும். பருப்படியான காரியம்.

அக். 1: பரமக்குடி பிளாட்பாரத்திலிருந்த மரம் வேரு டன் தண்டவாளத்தின்மீது விழுந்து விட்டது. டி. டி. ஆர் ஞாபக மறதி யாக அதனிடம் டிக்கெட் கேட்டு விட்டாரோ?

ஏழு நாள் பேப்பர்



நெசவாளர்கள் பஸ்களை மறித்துப் போராட்டம் நடத்தியது ஏன்? கூட்டுறவுத் துறை அமைச்சர் இன்னுமா ஃபைல் படித்துக் கொண்டிருக்கிறார்?

# சுப்பு சாடுகிறார் எம்.ஜி.ஆர் ஆட்சியை

முதல்வரின் சொந்தத் தொகுதியான அருப்புக்கோட்டையில் நடைபெற்ற சம்பவத்தையே விவரிக்கிறேன்.

அந்தத் தொகுதியில் 75 சதவிகிதம் (சுமார் 16,000 பேர்கள்,) நெசவாளர்கள். இவர்களில் செயற்கைப் பட்டு நூலினால் நெசவு செய்கிறவர்கள் ஒரு பகுதி. ஃபைபர் நூல் நெசவு செய்கிறவர்கள் மற்றொரு பகுதியினர். எல்லோரும் மாஸ்டர் நெசவாளர்களிடம் கூலி வேலை செய்யக் கூடியவர்கள். செயற்கைப் பட்டு நூல் விலை அதிகமாகிவிட்டது என்பதற்காக கூலி வேலை செய்து பிழைப்பவர்களின் கூலியைக் குறைத்துவிட்டார்கள். 'ஸ்டேபிள் ஃபைபர்' நூல் விலை இறங்கிப்போய் விட்டது. அதிகம் ஸ்டாக் தங்கிவிட்டது. அதற்காகக் கூலியைக் குறைத்துவிட்டார்கள்..

ஸ்டாக் அதிகமாகி, தேக்கம் ஏற்பட்டுவிட்டபோது அரசு அதைச் சீக்கிரமாக விற்பனை செய்ய நடவடிக்கைகள் எடுக்க வேண்டாமோ? அதே போல் செயற்கைப் பட்டு நூல் விலை ஏறிவிட்டபோது விலைக் கட்டுப்பாட்டின் மூலம் நிலைமையைச் சமாளிக்க வேண்டாமோ? அரசு இந்த இரண்டு காரியங்களையும் செய்யத் தவறியதால் மாஸ்டர் நெசவாளர்கள் தங்களிடம் வேலை செய்கிறவர்களுக்குக் கூலியைக் குறைக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டுவிட்டது.

எம். ஜி. ஆர். பேரில் பரிபூரண நம்பிக்கை வைத்திருக்கும் பல்லாயிரக்கணக்கான நெசவாளர்களின் கதியைப் பாருங்கள். இவருடைய கட்சிக்காரர்கள்தான் அதிகம். "எம்.ஜி.ஆர் இருக்கிறார். நம்முடைய கஷ்டங்களைத் தீர்த்துவிடுவார்," என்று ஆண்களும், பெண்களும் நம்பிக்கையோடு இருந்தார்கள். அமைதியான முறையில் உண்ணாவிரதமும் ஊர்வலமும் நடத்தி இரண்டு நாட்கள் தங்கள் கோரிக்கைகளின் நியாயத்தை இந்த அரசுக்கு எடுத்துச் சொல்ல நினைத்தார்கள்.

அ. இ. அ. தி. மு. க அரசு இந்த விஷயத்தில் சரியான பரிகாரம் காணத் தவறிவிட்டதால், அந்த நெசவாளிகள் அமைதியான போராட்டத்தைக் கைவிட்டு, பஸ்களை மறித்து, அரசு அலுவலகங்களில் புகுந்து தங்கள் எதிர்ப்பைக் காட்டத் துவங்கினார்கள். ஓரளவுக்கு அராஜகம் தலைவிரித்து ஆடுகிற சூழ்நிலை உருவானது. அப்படி ஏற்பட்டுவிட்ட பிறகு போலீசார் அவர்கள். வழக்கப்படி செய்கிற வேலையைச் செய்தார்கள்—லத்தி சார்ஜ்.

# எத்தனை மனுக் கொடுத்தும் பயனில்லையே...



**வக்கீல் சார்!**

சென்னை உயர் நீதிமன்ற முன்னாள் பிரதம நீதிபதி மா. அனந்த நாராயணன் சரிபார்த்தது.

**கேள்வி:** நான் ஷெட்யூல்ட் வகுப்பைச் சேர்ந்தவன். தமிழக அரசாங்கத்தில் பணி புரிந்து வந்த என் மனைவி மூன்றரை வருடங்களுக்கு முன் இறந்துவிட்டாள். அதன் நிமித்தம் எனக்குக் கிடைக்க வேண்டிய ரூ. 10,000`த்திற்கு வேண்டிய சான்றிதழ்கள் (Succession certificate etc) வைத்து மனு கொடுத்துப் பல நூற்றுக்கணக்கான கடிதங்கள் பல அதிகாரிகளுக்கு எழுதியும் இதுவரை ஒரு பதில்கூட இல்லை. எனக்குப் பணம் கிடைக்க என்ன வழி?

—கிருஷ்ணசாமி, மதுரை-2

**பதில்:** அரசாங்கம் இது போன்று சாதாரண மக்கள் விஷயங்களில் அசட்டையாக இருப்பது நம் நாட்டில் சகஜமாகிவிட்டது. இதைவிட வருந்தத்தக்க விஷயம் என்னவெனில் மூன்று வருடங்கள் வாளாவிருந்துவிட்டு உம்போன்றவர்களுக்குப் பதில்கூட எழுதாமல், பிறகு நீங்கள் கோர்ட்டுக்குச் சென்றால் உங்களுடைய உரிமை காலாவதியாகிவிட்டது என்று, கடமை உணர்ச்சி ஏதும் இன்றி அரசாங்கமும் அதினால் நடத்தப்படும் கார்ப்பரேஷன்களும் வாதாடுவதே! உங்கள் மனுவை எடுத்து விசாரிக்க அதிகாரிகள் கடமைப் பட்டவர்கள். உங்கள் மனுவை அரசாங்கம் எடுத்துப் பரிசீலனை செய்யவேண்டும் என்று கேட்டுச் சென்னை உயர்நீதிமன்றத்தில் ரிட் மனு (Writ of Mandamus) தாக்கல் செய்து, ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள் உங்கள் மனுவை விசாரிக்க வேண்டும் என்று உத்தரவு வாங்கலாம். பிறகு உங்களுக்கு நியாயம் கிடைக்க வழி இருக்கிறது.

□ □ □

**கேள்வி:** என் அம்மாவைப் பெற்றவருக்கு நிறையச் சொத்துக்கள் உண்டு. 6 மகள்கள். 6 மகன்கள். என் அம்மா அவருடைய மூத்த தாரத்தின் மகள். அவர் தன்னுடைய சொத்தெல்லாவற்றையும் மகன்களுக்கு மட்டும் பிரித்துக் கொடுத்துவிட்டார். மகள்களுக்கு சொத்தே கிடையாது என்கிறார். என் அம்மா என்னுடைய 4'வது வயதில் இறந்துவிட்டார். என் தாத்தா தன் மகளுக்கும் (என் அம்மா) சொத்து கொடுக்க வேண்டுமென்றும் என் அம்மாவின் ஒரே வாரிசான எனக்கே அது சேர வேண்டுமென்றும் நான் வழக்கு போடலாமா?

—எம். ராமலிங்கம், கூத்தாண்டான்

**பதில்:** நீங்கள் வழக்கே தும் போட முடியாது. ஒருவர் தன் சொத்தைத் தன் இஷ்டப்படி பிரித்துக் கொடுக்க முழு உரிமையும் உண்டு. உங்கள் பாட்டனார் தன் மகன்களுக்கு மட்டும் தன் சொத்தைக் கொடுக்க விரும்பி அப்படிச் செய்வதை உங்கள் அம்மாவோ நீங்களோ ஆட்சேபணை செய்ய முடியாது. தவிர 'ஒரே வாரிசு' என்று நீங்கள் உங்களைக் கூறிக் கொள்வது சரியல்ல. உங்கள் தாயின் வாரிசுகள் இருவர்: அவளுடைய கணவரும் அவருடைய குழந்தையான நீங்களும். உங்கள் தாய்க்குச் சேரவேண்டியது ஏதேனும் இருந்தால் அதில் உங்கள் தந்தைக்கும் சம உரிமை உண்டு.

## 22. OMNIA AUDAX. *

அபதுல வஹாப்காவின் கூடாரம் இந்திய நவாபுகளின் படாம்டாபத்துக்குத் தக்கபடி பெரிய பட்டுச் சீலைத் திரைகளுடனும், அழகிய விளக்குகளுடனும இரண்டு பந்தங்களுடனும் காட்சியளித்தது. ஒரு கோடியிலிருந்த திரையின் சித்திரவேலை—அதை நீக்கினால் அடுத்தபடி வஹாப்கானின் பஞ்சணையிருக்கும் என நிரூபித்தது. கூடாரத்தின் ஒரு மூலையில் நவாபுகள் உபயோகப்படுத்தும் நீண்ட ஹுக்கா கூட இருந்தது. இத்தகைய விமரிசையுடனிருந்த கூடாரத்தின் உள்ளே ஆஜானுபாகுவாய் நின்ற அப்துல் வஹாப்கானின் உருவம் மிகவும் கம்பீரமாகத் தெரிந்தது. கை கால் கட்டி உருட்டப்பட்டிருந்த பெண்ணைப் பார்த்து, "உம், சொல்," என்று அவர் விரட்டியபோது அவர் குரலில் கூட ஒரு தனி கம்பீரம் ஒலித்தது.

அந்தப் பெண் சொன்ன பதில்களை, அவற்றில் விளைந்த கதையை வஹாப்கான் மௌனமாகக் கேட்ட நிலையில்கூட ஓர் உறுதி இருந்தது.

ஆறடிக்கு மேலாகத் தன்னை நோக்கி நின்ற வஹாப்கானை நோக்கி அந்தப் பெண் சொன்னாள். "ஆற்காடு நவாப் சந்தாசாகிப் அவர்கள் இங்கு நடப்பதை வேவு பார்க்க என்னை அனுப்பினார். தினசரி நான் வேவு பார்த்து விஷயங்களைச் சொல்லியனுப்ப நள்ளிரவில் ஒரு வீரன் பிரிட்டிஷ் சிப்பாய்களின் உடையணிந்து படைத் தளத்தின் முகப்பில் நிற்பான். அவனிடம் விஷயங்களைக் கூற எனக்கு உத்தரவு. காப்டன் ஜின்ஜின்ஸை முதலில் கையில் போட்டுக் 'கொள்ளும்படி எனக்கு உத்தரவு. அவரை மயக்குவது மிகச் சுலபம் என்று நவாப் சந்தாசாகிப் சொன்னார். 'காப்டன் ஜின்ஜின்ஸ் பெண் பித்துப் பிடித்தவன், தொடை நடுங்கி, அவனுக்கு நமது மதுவை நன்றாகப் புகட்டி விடு.' என்று சொல்லி ஒரு மதுக் குப்பியையும் கொடுத்தார் நவாப். அவர் எதிர்





பார்த்தது அப்படியே நடந்தது. மதுக் குப்பியை என் பாவாடைக்குள்ளிருந்த சராய் பையில் மறைத்து எடுத்து வந்தேன். என்னை ஜின்ஜின்ஸிடம் வீரர்கள் பிடித்துக் கொண்டு போய் விட்டதும் அவர்களை வெளியே செல்ல உத்தரவிட்டார் ஜின்ஜின்ஸ். அவரை மயக்க அவசியமில்லாது போயிற்று. அவரே என்னைப் பிடித்துக் கொண்டார் வெறியுடன். என் சராயிலிருந்த புட்டியையும் கையை விட்டு அவரே எடுத்தார். மதுவைப் புகட்டினேன். இங்கிருக்கிற படை பலம், நீங்கள் கோட்டையைப் பிடிக்க முயன்று முடியாமல்

---

* Omnia Audax (To Dare All)—Chats on Military Curios—By Stanley C. Johnson, M.A., D.Sc., F.R.E.S.—Page 48.

போனது எல்லாவற்றையும் அவர் சொன்னார். மது மயக்கத்தில் வாவி புரத்தில் அடிக்கடி என்னைப் போன்ற அழகிகள் கிடைப்பதால் இதை விட்டுப் போவதில்லையென்றும் கூறினார். அவர் பேசிக் கொண்டிருக்கையில்தான் இவர் வந்தார்...''

இந்த இடத்தில் அந்தப் பெண் தயங்கவே, ''மேலே சொல்,'' என்றார் வஹாப்கான்.

பெண் தொடர்ந்து, ''இவர் வந்து ஜின்ஜன்ஸின் மீது வெகுண்டு அவர் தலை மீது தண்ணீரைக் கொட்டி விட்டு வந்ததும் நான் பயமெடுத்து ஓடினேன் படைத்தளத்துக்கு வெளியே வரும் வீரனைப் பார்க்க. அப்பொழுது நீங்கள் பிடித்துக் கொண்டீர்கள்,'' என்று கூறினாள்.

''ஆம்,'' என்றாள் அவள்.

வஹாப்கான் திரும்பிப் பக்கத்தில் துப்பாக்கியைப் பிடித்துக் கொண்டிருந்த ஆப்பிரிக்க வீரனைப் பார்த்து, ''சரி, சுட்டுவிடு,'' என்று உத்தரவிட்டுத் திரும்ப முயன்றார்.

''பொறுங்கள்,'' என்று கூவினாள் அந்தப் பெண்.

''சொல், அந்த முக்கிய விஷயத்தை. எனக்கு ஏற்கனவே தெரியும்,'' என்றார் வஹாப்கான்.

பெண் சற்று நேரம் மிரள மிரள விழித்தாள். கடைசியில் கிளைவின் மீதும் விஜயகுமாரின் மீதும் அவள் கண்கள் நிலைத்தன. கண்களை அவர்கள் மீதிருந்து அகற்றாமலே சொன்னாள்: ''காப்டன் கிளைவ் வந்திருக்கிறாரா






''சந்தாசாகிப் எந்தவித விவரங்களை அறியும்படி சொன்னார்?'' என்று வினவினார் வஹாப்.

''இங்கிருக்கிற படைகளின் எண்ணிக்கை சுமாராக, காப்டன்களின் பெயர்கள். உங்கள் கூடாரமிருக்கும் இடம். உங்களைச் சுற்றியிருக்கும் பாதுகாப்பு,'' என்றாள் அந்தப் பெண்.

வஹாப்கான் மெல்ல நகைத்தார். ''என்னைத் தீர்த்துக் கட்டப் பார்க்கிறார் சந்தாசாகிப்,'' என்றும் கூறினார் கிளைவைப் பார்த்து. மீண்டும் அந்தப் பெண்ணை நோக்கி வினவினார், ''அவ்வளவுதானா?'' என்று,

என்பதையும், விஜயகுமாரன் என்ற ஒரு வீரன் வந்திருக்கிறாரா வென்பதையும் அறிந்து வரச் சொன்னார். அவர்கள் வந்திருந்தால் அவர்கள் உறங்கும் போது அவர்களைப் பிச்சுவாவால் குத்தித் தீர்த்து விடவும் சொன்னார்.''

கிளைவின் விழிகள் வியப்பால் மலர்ந்தன. ''எதற்கு இந்த உத்தரவு? நான் என்ன செய்தேன் நவாபை?'' என்று வினவினான்.

''நீங்களில்லாவிட்டால் இந்த பிரிட்டிஷ் படை ஜெயிக்க முடியாதென்று நவாப் அடிக்கடி தனது படைத் தலைவர்களிடம் சொல்கிறார். உங்கள் லெப்டினண்ட் அபாயகரமான வெறியன் என்றும் கூறுகிறார்,'' என்றான் அந்தப் பெண்.

அத்துடன் அந்தப் பெண்ணைக் கூடாரத்திலிருந்து அகற்றித் தனது அடிமைகளோடு சேர்த்துவிட உத்தரவிட்ட வஹாப்கான், ''காப்டன் கிளைவ்! இப்பொழுது புரிகிறதா உங்கள் மகிமை? உங்கள் மகிமையென்ன, உங்கள் லெப்டினண்ட் மகிமையுங்கூடப் புரிந்திருக்க வேண்டுமே உங்களுக்கு?'' என்று கேட்டுப் பெரிதாக நகைத்தார். ''சந்தாசாகிப் உங்களிருவர் உயிருக்கு ஈடாக ஆற்காட்டு ராஜ்யத்தில் பாதியை இனமாகக் கொடுப்பார். இது எனக்கு முன்பே தெரியும்,'' என்றும் விளக்கினார் நகைப்புக்கிடையே.

கிளைவ் கேட்டான், ''இந்த ரகசியம் உங்களுக்கு முன்பே எப்படித் தெரியும்?'' என்று.

''நான் பிடித்திருக்கும் மூன்றுவது வேவுகாரி இவள். முதல் வேவுகாரியே விஷயத்தைக் கூறிவிட்டாள். எனக்கு இந்த வேறு வேலையுமில்லை. இங்கு ஏப்ரல் முதல் வாரத்தில் ஜின்ஜின்ஸ் வந்தார். நான் அடுத்த வாரம் வந்தேன். இங்கு எங்களுக்குத் தூங்குவதைத் தவிர வேறு வேலை கிடையாது! வாலிகண்டபுரம் நகரத்தைப் பிடித்தோம், கோட்டையைப் பிடிக்கவில்லை. இந்த மூகாமில் கோட்டைக்கு வெளியேயுள்ள இந்தச் சமநிலத்தில் சந்தாசாகிப் வந்து எங்களை அழிப்பதற்காகக் காத்திருக்கிறோம்,'' என்று வெறுப்புடன் கூறினார் வஹாப்கான். ''சீக்கிரம் கோட்டையைத் தாக்கி உள்ளே நுழையுமாறோ, அல்லது முன்னேறி சந்தாசாகிபைத் தாக்குமாறோ காப்டன் ஜின்ஜின்ஸுக்குப் புத்தி சொல்லுங்கள்,'' என்று துக்கம் நிரம்பிய குரலில் விண்ணப்பித்துக் கொண்டார்.

கிளைவின் கண்கள் மகாவீரரான அப்துல் வஹாப்கான் கண்களுடன் கலந்தன. ''காலையில் இதைப் பற்றி விவாதிப்போம்,'' என்று கூறிய கிளைவ், கடைசியாக அந்தக் கூடாரத்தைவிட்டு வெளியேறி, காப்டன் டால்டனுடைய கூடாரத்துக்கு வந்து சேர்ந்தான். மறுநாள் பொழுது விடிந்ததும் காப்டன் டால்டனை நோக்கி, ''காப்டன்! அவசர ஆலோசனைக் கூட்டமொன்று ஏற்பாடு செய்யும்படி ஜின்ஜின்ஸிடம் கூறு,'' என்று உத்தரவிட்டான்.

''ஜின்ஜின்ஸ் மறுத்தால்..?'' என்று வினவினான் டால்டன்.

கிளைவின் நிதானம் பறந்தது. ''மறுக்க முடியாது,'' என்று சீறினான் கடுந்தரலில்.

கிளைவ் எதிர்பார்த்தது சரியாயிற்று. காப்டன் ஜின்ஜின்ஸ் பேராலோசனை சபையைத் தன்னுடைய கூடாரத்தில் காலை வேளை உணவு முடிந்ததும் கூட்டினான். பிரிட்டிஷ் படையின் முக்கிய லெப்டினண்டுகள் இருவரும் காப்டன் டால்டனுடன் அப்துல் வஹாப்கானும், அவரது இரு படைத் தலைவர்களும் ஜின்ஜின்ஸின் கூடாரத்துக்குக் குறித்த நேரத்தில் வந்து சேர்ந்




நண்பரிடம் கேட்டேன்: ''என்ன கையில்?''

''கட்டி'' என்றார் வருத்தத்தோடு.

மற்றொரு நண்பர்: ''நாம் எல்லாம் 'கட்டி' வரவில்லையே' என்று கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறோம். இவர் 'கட்டி வருகிறது' என்று முக்கால் அழுகிறாரே''

—இரா. மோகன்.

தார்கள். கடைசியாகக் கூடாரத்துக்குள் நுழைந்த கிளைவை, ஆசனத்திலிருந்து எழுந்திருக்காமலும் கை குலுக்காமலும் தலையை மட்டும் ஒரு புறம் கம்பீரமாகச் சாய்த்து வரவேற்ருன் காப்டன் ஜின்ஜின்ஸ்.

கையாலாகாதவர்களுக்கு இயற்கையாகவுள்ள அந்த வீம்பைச் சிறிதளவும் லட்சியம் செய்யாத கிளைவ் அங்கிருந்த ஒரு நாற்காலியில் அமர்ந்து விஜயகுமாரனையும் அமரச் சொன்னுன். இருவரும் அமர்ந்ததும் காப்டன் ஜின்ஜின்ஸ் தனது தர்பாரைத் தொடங்கி, ''ஜென்டில்மென்! வாட் வில் யூ ஹாவ்? குட் ஒயின், ஆர் விஸ்கி?'' என்று தனது விருந்தோம்பல் குணத்தைக் காட்டினுன்.

கிளைவ் காப்டன் ஜின்ஜின்ஸைக் கொடுங்கண்களால் நோக்கினுன். அந்தப் பார்வையைத் தொடர்ந்து, ''தாங்க்யூ காப்டன்! வீ ஹாவ் நாட் கம் ஹியர் டு ட்ரிங் நார் டு டிபாச் (நன்றி காப்டன். இங்கு நாங்கள் குடிக்கும் வரவில்லை, விபசாரத்துக்கும் வரவில்லை),'' என்று அவன் உதடுகள் சுடுசொற்களைக் கக்கின.

அவன் சொற்களின் காரணம் ஜின்ஜின்ஸுக்குப் புரிந்ததால் அவன் முகம் சிவக்க கம்பீரத்தை அதிகமாகக் கண்களில் காட்டி, ''யூ வாண்ட் டு அட்வைஸ் மீ அபௌட் த வார்? (போருக்கு எனக்கு யோசனை சொல்ல எண்ணுகிருய்?)'' என்று வினவினுன்.

கிளைவ் ஜின்ஜின்ஸை அலட்சியமாகப் பார்த்தான். ''யோசனையை நான் கண்டபடி விரயம் செய்வதில்லை. கேட்பவர்களுக்கு மட்டுந்தான் சொல்வது வழக்கம்,'' என்று பதிலும் சொன்னுன், குரலிலும் அலட்சியம் ஒலிக்க. அத்துடன் நிற்கவில்லை கிளைவ். ''உனக்கு யோசனை சொல்ல இங்கு டால்டன் இருக்கிருன். அப்துல் வஹாப் கான் இருக்கிருர். இன்னெருவர் தேவையில்லை,'' என்றும் கூறினுன்.

காப்டன் ஜின்ஜின்ஸின் உதடுகளில் புன்சிரிப்புப் படர்ந்தது. ''யார் யோசனையும் தேவையில்லை எனக்கு. நாளைக்கு வால்கொண்டா கோட்டையைத் தாக்கப் போகிறேன்,'' என்று தனது திட்டத்தையும் மெள்ள அவிழ்த்தான்.




ஒரு வண்டிக்காரன், ஜோடி மாடுகளைத் தட்டிக்கொண்டே சென்று கொண்டிருந்த விதம் விஜய்யின் மனத்தில் ஆசையை மூட்டியது.

''அண்ணே, கொஞ்சம் நானும் ஏறிக்கிறேனே?'' என்ருன்.

''விழுப்புரம் போறேம்பா.''

''கொஞ்ச தூரம்தான் அண்ணே. சும்மா ஜாலியாய்.''

''ஏறிக்க,'' என்றதும் மூட்டைகளின்மீது ஏறியமர்ந்து கொண்டான் விஜய்.

''ஆகா.... பிரமாதம்...'' என்று விஜய் சொல்லி வாய் மூடவில்லை. டபக்கென்று வண்டி நொடித்தது. ஒரு மாடு நடுச்சாலையில் படுத்துவிட்டது. 'அட சனியனே!' என்று திட்டியபடி வண்டிக்காரன் கீழே இறங்கினுன். தார்க்குச்சியால் குத்தினுன். நெருப்புக் குச்சியைக் கொளுத்தி மூக்கில் காட்டினுன். காலால் உதைத்தான். ஊகூம். மாடு எதற்கும் எழுந்திருக்கவில்லை.

விஜய் அரை விநாடி யோசித்தான். பிறகு சண்டித்தனம் பண்ணுகிற மாட்டிடம் போனுன். குனிந்து, ''எங்க ஊரிலே ஒரு ஜமீந்தார் சம்சாரம் பத்து லட்சம் ரூபாய் பெறுமானமுள்ள நகையைப் பூட்டிக்கிட்டு சினிமா பார்க்கக் கிளம்பினுங்க. தியேட்டருக்குப் போய்ப் பார்க்கிறப்போ என்ன ஆச்சு தெரியுமா?'' என்ருன். மாடு காதைத் தீட்டிக்கொண்டு அவனைப் பார்த்தது.

''என்ன ஆச்சரியம்ணு..'' சொல்லிக் கொண்டே நடக்கலானுன் விஜய். மாடு எழுந்து அவனைப் பின் தொடர்ந்தது. விஜய் அந்த ஸஸ்பென்ஸ் கதையைச் சொல்லிக்கொண்டே முன்னுல் நடந்தான்.

இப்படியே முக்கால் மணி நேரம். ''விழுப்புரம் வந்துட்டுது, வண்டிக்காரரே. மண்டியிலே மூட்டையை இறக்குங்க,'' என்ருன் விஜய்.

(தொடரும்)

இதைக் கேட்ட வஹாப்கான் நகைத்தார். "அதுதான் சரியான வழி," என்றும் இகழ்ச்சியுடன் கூறினர் நகைப்புக்கிடையே.

இகழ்ச்சி ஒலியைக் கவனிக்கவில்லை ஜின்ஜின்ஸ். "ஒப்புக் கொள்கிறீரா?" என்று வினவினன் பெருமையுடன்.

"ஒப்புக் கொள்கிறேன். நம்மை அழித்துக்கொள்ள இதைவிடச் சிறந்த வழி கிடையாது," என்ற வஹாப்கான் புன்முறுவல் கோட்டினர்.

வஹாப்கான் தன்னைக் கேலி செய்கிறார் என்பது அப்பொழுதுதான் ஜின்ஜின்ஸின் மூளையில் எட்டியது. "போர்த் தந்திரம் என்னைவிட உமக்குத் தெரியுமா?" என்று வினவினன் ஜின்ஜின்ஸ் கடுமையுடன்.

"தந்திரம் தெரியாது. போர் தெரியும்! நாம் கோட்டையை நோக்கி இப்பொழுது படையைத் திருப்பினல் பின்புறத்தில் சந்தாசாகிப் தாக்கத் தயாராக இருக்கிறார்," என்றார் வஹாப்கான்.

"சந்தாசாகிபா!" காப்டன் ஜின்ஜின்ஸின் குரல் லேசாக நடுங்கியது.

"எஸ்," என்று வஹாப்கான் ஆங்கிலத்தில் இறங்கினர்.

"ஹ்வேர் ஈஸ் ஹி?"

"விதின் த்ரீ மைல்ஸ்."

காப்டன் ஜின்ஜின்ஸ் முகத்தில் அதிர்ச்சி தெரிந்தது. "யூ ஆர் ஷ்யூர்? (உங்களுக்கு நிச்சயமாகத் தெரியுமா?)" என்று வினவினன் காப்டன் ஜின்ஜின்ஸ்.

"டாம் ஷ்யூர்," என்று எரிச்சலுடன் கூறினர் வஹாப்.

"வாட் டு யூ வாண்ட் மி டு டூ? (இப்பொழுது என்னை என்ன செய்யச் சொல்கிறீர்கள்?)" என்று வினவினன் ஜின்ஜின்ஸ்.

அதுவரை வாளாவிருந்த கிளைவ், "அட்வான்ஸ் அண்ட் அட்டாக் (முன்னேறித் தாக்கு)," என்றான்.

"டேன்ஜரஸ் (அபாயமானது)," என்றான் ஜின்ஜின்ஸ்.

கிளைவ் கடுமை நிரம்பிய கண்களால் உற்று நோக்கினன் ஜின்ஜின்ஸை. "அவர் மாட்டோ மஸ்ட் பி ஆம்லியா ஆடாக்ஸ் (நமது லட்சியம் எந்த ஆபத்தையும் எதிர்கொள்ளத் தக்கதாயிருக்க வேண்டும்)," என்று ஆங்கிலமும் லத்தீனும் கலந்த மொழியில் மிக உக்கிரத்துடன் கூறினன் காப்டன் கிளைவ் தனது போர் முறையை.

(தொடரும்)




6.10.77 இதழ் குமுதத்தில் முதல் பக்கத்தில் திரு.வி.க. பார்த்த ஓடும் திருடனை ஆறுமுத்து முதலியார் வீழ்த்திய நிகழ்ச்சி பற்றிக் குறிப்பிட்டிருக்கிறீர்கள்.

இது 'மர்மத் தட்டு' எனப்படும். காலின் பெருவிரலும், இரண்டாவது விரலும் சேருமிடத்திற்கு சற்று மேலாக குறிப்பிட்ட ஒரு முறையில் ஒரு தட்டுத் தட்டினல் ஆள் மயக்கம் போட்டு விழுந்து விடுவாரும்.

'இது எவ்வாறு சாத்தியம்?' என்பது புரியாததாலேயே இதற்கு 'மர்மத் தட்டு' என்று பெயர் ஆயிற்று. இன்று கூட நாகர்கோவில் பக்கங்களில் இதை அறிந்த சிலர் சண்டை சமயங்களில் எதிரியை வீழ்த்த இந்த மர்மத் தட்டை ரகசியமாக கையாள்கிறார்கள்.

இது 'அக்யுபங்சர்' முறையைப் போன்றது என்று நரம்பியல் நிபுணரும், அக்யுபங்சர் செய்பவருமான பேராசிரியர் நரேந்திரன்கூட ஒருமுறை என்னிடம் குறிப்பிட்டுள்ளார்.

—இ.எஸ்.எஸ். இராமன்

அசட்டுப் பிடிவாதம், அதைரியம், முடிவுகளை எடுக்க முடியாத மனம், இந்த மூன்றில் ஏதாவது ஒன்றிருந்தாலே போதும் மனிதன் குட்டிச் சுவராவதற்கு. இந்த மூன்றும் காப்டன் ஜின்ஜின்ஸிடம் முழு அளவில் இணைந்திருந்த தால் அவன் கிளைவின் யோசனையையோ வஹாப் கான் யோசனையையோ கேட்க மறுத்தான். ''துணிவு டன் முன்னேறித் தாக்கு'' என்று யோசனை சொல்லி அதற்கு எடுத்துக் காட்டாக ராணுவ ஆணைகளிலொன் ருன, ''ஆம்னியா ஆடாக்ஸையும்'' கிளைவ் சுட்டிக் காட்டியபோது, ''சந்தாசாகிப்பின் படையில் 500 பிரஞ்சுக்காரர்கள் இருக்கிறார்கள், தவிர சுதேசிப் படையும் நம்மைவிட அதிகமானது,'' என்று சாக்கு சொன்னான் ஜின்ஜின்ஸ்.

''உங்களிடம் 600 பிரிட்டிஷ்காரர்கள் இருக்கிறார்களே,'' என்று கிளைவ் கேட்டதற்கு, ''பெரு வாரியான எதிரியின் சுதேசிப் படை பிரிட்டிஷ்காரர் களை அழித்துவிடும்,'' என்று சால்ஜாப் சொன்னான் ஜின்ஜின்ஸ்.

''நான் 4000 வீரர்களை அழைத்து வந்திருக்கிறேனே,'' என்று அப்துல் வஹாப்கான் கூறியதற்கு, ''அவர்களுக்குப் பயிற்சி போதாது,'' என்றான் ஜின்ஜின்ஸ். இதைக் கேட்ட அப்துல் வஹாப் கான் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தது. ''எங்களுக்குப் பயிற்சி இருக்கிறதோ இல்லையோ, போரில் இறங்காமல் பெண்களிடம் குலாவவும் குடிக் கவும் உங்கள் காப்டனுக்குப் பயிற்சி இருக்கிறது,'' என்று மற்றவர்களை நோக்கிச் சீறிவிட்டுச் சரேலென்று எழுந்து கூடாரத்தை விட்டு வெளியேறினான் அப்துல் வஹாப்கான்.

அதுவரையில் நிதானத்துடனிருந்த கிளை வின் முகம் திடீரென நிதானத்தை இழந்து கோபத்தில் குப்பென சிவந்தது. ''விஜயகுமார்! நீ சென்று நவாபைச் சாந்தப்படுத்து,'' என்று விஜயகுமாரனுக்கு உத்தரவிட்டு அவன் வெளியே சென்றதும் சுடுவிழி களைக் காப்டன் ஜின்ஜின்ஸ் மீது திருப்பினான். ''காப் டன்! இந்த ஒரு சமயந்தான் இருக்கிறது வெற்றிக்கு. வெள்ளைக்கார சோல்ஜர்கள் உங்களிடம் அதிகம். நான் எடைபோட்ட வரையில் அப்துல் வஹாப்கானும் அவரது சிப்பாய்களும் உயிரை விடத் தயாராயிருக்கிறார் கள். இப்பொழுது உடனே முன்னேறிக் கோட்டைக்குச் செல்லும் நீர்நிலையைக் கைப் பற்றுங்கள். பிறகு சந்தாசாகேப் வந்தால் நீர்நிலை உங்களுக்குப் பாது காப்பளிக்கும். கோட்டைச் சுவர் மறைவு அளிக்கும். மறைவிலிருந்து நீங்கள் தாக்கலாம். ஆகவே உடனடி யாகக் கூடாரங்களைக் கழற்றிப் போருக்குத் தயாராகுங் கள்,'' என்று கூறினான் சொற்களில் கடுமையைக் காட்டி.

இதைக் கேட்டதும் காப்டன் ஜின்ஜின்ஸ் தனது உபதளபதிகளை ஒருமுறை சுற்றி நோக்கினான் கம்பீரமாக. பிறகு வி . வினான் கிளைவை நோக்கி, ''உன் பதவி என்ன?'' என்று,

சாண்டில்யன்

# ராஜ பேரிகை

## 23. அடிமைப் பெண்

27.10.77

"காப்டன்" என்றான் கிளைவ், ஜின்ஜின்ஸின் கண்களுடன் தனது கண்களைக் கலந்து.

ஜின்ஜின்ஸ் அந்தக் கண்களின் கூரிய நோக்கைத் தாளாது டால்டனை நோக்கித் திருப்பினான் தனது கண்களை. "காப்டன் டால்டன்! காப்டன் கிளைவ் இங்கு எதற்காக வந்திருக்கிறார்?" என்று வினவினான்.

"உணவுப்பொருள் கொண்டு வந்திருக்கிறார்," என்றான் காப்டன் டால்டன், குரலில் வெறுப்பைக் காட்டி.

அந்த வெறுப்பின் காரணத்தை உணர்ந்த ஜின்ஜின்ஸ் கிளைவை மீண்டும் நோக்கி, "காப்டன் கிளைவ்! இந்தப் படையைத் தலைமை தாங்கி நடத்த வந்திருக்கிறீரா?" என்று வினவினான்.

"இல்லை."

"கவர்னர் உத்தரவு என்ன?"

"உணவுப்பொருள்களை உங்களுக்கு சப்ளை செய்வது."

"வேறு உத்தரவு இல்லையே?"

"இல்லை."

"தென் யூ கான் கோ. போரை நான் கவனித்துக் கொள்கிறேன்," என்றான் ஜின்ஜின்ஸ் திட்டவட்டமாக.

காப்டன் கிளைவ் ஜின்ஜின்ஸின் தோரணையைக் கண்டு சிறிதும் சளைக்கவில்லை. "வேவு பார்க்க வரும் பெண்களைக் கட்டிக் கொண்டு போரை நடத்த முடியாது," என்று கடுங்குரலில் சொன்னான்.

காப்டன் ஜின்ஜின்ஸின் முகத்தில் அப்பொழுது தான் திகில் உதயமாயிற்று. "என்ன! வேவு பார்க்கும் பெண்களா!" என்று வியப்பும் திகிலும் கலந்த குரலில் வினவினான்.

"ஆம்."

"எங்கு பார்த்தாய் அவர்களை?"

"முதல் இரண்டு பேரைப் பார்க்கவில்லை. மூன்றாமவளை இந்தக் கூடாரத்தில் உங்கள் அணைப்பில் பார்த்தேன்."

"அவள் வேவுகாரியென்று உனக்கு எப்படித் தெரியும்?"

"அவள் உன் படைத்தளத்தின் ஓரத்துக்குச் சென்று அங்கு வரும் சந்தாசாகேபின் வீரனுக்குச் செய்தி



கொண்டு போவதற்கு முன்னால் வஹாப்கான் அவனைப் பிடித்து விஷயத்தைக் கக்க வைத்தார்.''

''இதை ஏன் என்னிடம் நீங்கள் சொல்லவில்லை?''

''நான் கேவலம் உணவுப் பொருள் கொண்டு வரும் கேப்டன்,'' என்றான் கிளைவ் இகழ்ச்சி நிரம்பிய குரலில். பிறகு தன் ஆசனத்திலிருந்து எழுந்து நின்று கொண்டு, ''ஜின்ஜின்ஸ்!'' என்று அழைத்தான் காப்டன் என்ற சொல்லைக் கைவிட்டு.

''யூ ஆர் டாக்கிங் டு காப்டன் ஜின்ஜின்ஸ்.'' கடுமை கலந்திருந்தது ஜின்ஜின்ஸின் குரலில்.

''ஐ நோ'' என்ற கிளைவ், ஜின்ஜின்ஸைப் பரம இகழ்ச்சியுடன் நோக்கினான். ''எ மான் பிகம்ஸ் காப்டன் நாட் பை தி டைட்டில் பட் பை பர்ஃபாமன்ஸ் (ஒரு மனிதன் பட்டத்தால் காப்டனாவதில்லை, சாதனையால் ஆகிறான்)'' என்றும் மிகக் கடும் சொற்களைப் பிரயோகித்து மேலும் தொடர்ந்தான் அதே குரலில்: ''காப்டன்! உடனடியாகப் போரைத் துவங்குங்கள். எதிரியை முன்னேறிச் சந்திக்க முயலுங்கள். இல்லையேல் கோட்டை வாயிலுக்கு எதிரிலுள்ள நீர்நிலையையாவது கைப்பற்றி எதிரி உங்களை அழிக்காத நிலையை ஏற்படுத்திக் கொள்ளுங்கள். நீங்கள் யார் யோசனையும் தேவையில்லையென்று சொன்னாலும் நான் சொல்கிறேன் யோசனையை. கசப்பாயிருந்தாலும் உண்மையைக் காணவும் ஒப்புக்கொள்ளவும், ஒப்புக்கொண்டு செயலாற்றவும் முற்படுங்கள். நான் உணவுப் பொருள் கொண்டுவரும் காப்டன்தான். ஆனால் கவர்னரிடம் இங்குள்ள நிலைமையை நான் சொல்வதிலிருந்து என்னை யாரும் தடுக்க முடியாது. துரிதமாக நீங்கள் நடவடிக்கை எடுக்காவிட்டால் இரு குற்றங்கள் உங்கள் மேல் சுமத்தப்படும். ஒன்று, நீங்கள் தக்க சமயத்தில் நடவடிக்கை எடுக்காதது. இரண்டு, நீங்கள் நம்மை நம்பியுள்ள முகம்மது அலியைக் கைவிட்டது. நினைவில் வைத்துக்கொள்ளுங்கள்.'' இதற்குப் பிறகு அந்தக் கூடாரத்திலிருந்து வெளியேறினான் கிளைவ்.

''காப்டன்! காப்டன்!' என்ற டால்டனின் அழைப்புக் குரல் சிறிது தடுக்கவே கிளைவ் நின்று திரும்பி நோக்கினான்.

''காப்டன்! இன்னும் ஒரு வாரம் நீங்கள் இங்கு தங்க முடியாதா?'' என்று வினவினான் காப்டன் டால்டன்.

''முடியாது. கவர்னர் உத்தரவில்லை அதற்கு.''

''இங்குள்ள நிலைமையை எடுத்தெழுதி அனுமதி கேட்க முடியாதா?''

''அனுமதி கேட்டாலும் பயனில்லை. முட்டாளான ஜின்ஜின்ஸிடம் என்னால் வேலை செய்ய முடியாது.''

''ஜின்ஜின்ஸ்....''

''எனக்கு சீனியர்.''

''இங்கு சீனியாரிடி எதற்கு? திறமைதானே தேவை?''

காப்டன் கிளைவ் இதற்கு உடனடியாகப் பதில் சொல்லவில்லை. சிறிது சிந்தித்துவிட்டு, ''காப்டன் டால்டன்! பிரிட்டிஷ் படை சில சம்பிரதாயங்களால் கட்டுப்படுத்தப்பட்டிருக்கிறது. அதை மீறுவதற்கில்லை. கவர்னர் உத்தரவில்லாமல் சீனியரான காப்டன் ஜின்ஜின்ஸின் உத்தரவுகளை மீறி நான் எதுவும் செய்ய முடியாது. நீ இருக்கும் நிலையில்தான் நானுமிருப்பேன். எதற்கும் நான் போய் கவர்னரிடம் விஷயங்களைச் சொல்கிறேன்,





''மந்திரி இன்னிக்குத் திடீர்னு வரப்போறாராம். மேஜையெல்லாம் சுத்தமாய் வைச்சுக்காதே. கலைச்ச மாதிரியே இருக்கட்டும்.''

''ஏன் சார்?''

''சுத்தமா வைச்சிருந்தா திடீர்னு வரப்போறது தெரிஞ்சு போச்சுன்னு தெரிஞ்சிடும்.''

அப்துல் வஹாப்கான் நம்மிடமிருந்து நழுவவிடாமல் நீ பார்த்துக் கொள்," என்று கூறிவிட்டு அப்துல் வஹாப்கான் கூடாரத்தை நோக்கி நடந்தான். அங்கு வஹாப்கானுக்கு தைரியம் சொன்னான். "நவாப்! பிரிட்டிஷ்காரர்கள் சிறந்த நண்பர்கள். உங்களேயோ உங்கள் அண்ணனையோ கைவிடமாட்டார்கள். உறுதியாய் நம்புங்கள்" என்று. அத்துடன் கவர்னரிடம் விஷயங்களை விவரிப்பதாகவும் கூறிவிட்டு விஜயகுமாரனை அழைத்துக் கொண்டு, வஹாப்கானிடம் அனுமதி பெற்று வேவுகாரப் பெண்ணேயும் கூட்டிக் கொண்டு ஸெய்ண்ட் டேவிட் கோட்டையை நோக்கிப் பயணமானான்.

அங்கிருந்து புறப்பட்ட மூன்றும் நாள் ஸெய்ண்ட் டேவிட் கோட்டையை அடைந்து கவர்னரிடம் விஷயங்களை அறிவித்து அந்த வேவுகாரியையும் அவர் முன்பு நிற்க வைத்தான். அன்றும் கவர்னர் அந்த ஆலோசனை அறையில்தானிருந்தார். வாலிகண்டபுரத்தின் பயங்கர நிலையைக் கேட்டபோது கூட அவர் முகத்தில் எந்த வித உணர்ச்சியும் தெரியவில்லை. அவர் விழிகளில் அந்த இரும்பு நோக்கு மட்டும் இருந்து கொண்டே இருந்தது. சிறிது நேரம் எதிரே நின்ற அடிமைப் பெண்ணை உற்று நோக்கினார். பிறகு யாரும் கேட்காத ஒரு கேள்வியை மெல்லக் கேட்டார் ஸாண்டர்ஸ். "ஹௌ ஆர் யூ ரிலெடட் டு சந்தா சாகிப்?" என்ற அந்தக் கேள்வியைக் கேட்டு கிளைவ் அசந்து போனான். அந்தப் பெண்ணின் முகத்திலோ இணையிலா பிரமிப்பு பரவியது. அதிலிருந்து அவளுக்கு ஆங்கிலமும் சிறிது தெரியுமென்பதைப் புரிந்து கிளைவின் பிரமிப்பு எல்லை கடந்தது.

இத்தனைக்கும் அந்தப் பெண் வாயைத் திறக்கவில்லை. ஆகவே கவர்னர் ஸாண்டர்ஸே சொன்னார், "யூ ஆர் ஹிஸ் டாட்டர்," என்று.

இதற்கு அந்தப் பெண் தலை அசைத்தாள். கவர்னர் மந்திரவாதியாகத்தானிருக்க வேண்டும் என்றும் கிளைவ் தீர்மானித்தான். "யுவர் எக்ஸிலன்ஸி!" என்று பிரமிப்புடன் துவங்கினான் பேச.

கவர்னர் கையசைப்பினாலேயே அவனை மேலே பேசவிடாமல் அடக்கிவிட்டு, "லுக் அட் ஹர் ஃபேஸ்" என்று கூறினார்.

கிளைவ் அந்தப் பெண்ணின் முகத்தை நோக்கினான். சந்தாசாகிபின் முகச்சாயல் அதில் பூர்ணமாயிருந்ததை அப்பொழுதுதான் கண்டான். இருப்பினும் கவர்னருக்கு அந்தச் சாயல் எப்படித் தெரியும் என்று அவனால் புரிந்து கொள்ள முடியாததால் திகைத்து நின்றான்.

புன்சிரிப்பையே காட்டிப் பழக்கமில்லாத கவர்னர் தாமஸ் ஸாண்டர்ஸின் முகமும் சிறிது உவகையின் சாயலைக் காட்டியது. கவர்னர் மௌனமாகவே தமது மேஜை டிராயரைத் திறந்து அங்கு எதையோ தேடி, முடிவில் ஒரு காகிதச் சித்தி

---




அப்பா கொசு பிள்ளைக் கொசுவிடம் சொல்லிற்று. "எங்க காலம் மாதிரி இல்லை இப்போ. நீங்கள்ளாம் ரொம்ப அதிர்ஷ்டம் செய்தவங்க."

பிள்ளைக் கொசு மறுத்தது. "அதெப்படிச் சொல்றீங்க? இந்தக் காலத்திலேதான் டிடிடி என்ன, கண்ட கொசு மருந்தெல்லாம் வந்து உயிரை வாங்குறதே?"

"இருக்கலாம்," என்றது அப்பா கொசு. "ஆனால் என் காலத்திலே நான் பீச்சுக்குப் போனா, பெண்களுடைய முகத்திலோ கையிலோதான் கடிக்க முடியும். இப்போ பாருங்க, நீங்க எங்கேயெல்லாம் கடிக்க வாய்ப்பு இருக்கு!"

நன்றி: 'ஸன்'

ரத்தை எடுத்து மேஜை மீது போட்டார். அதில் சந்தாசாகிபின் உருவம் தத்ரூபமாகக் காட்சியளித்தது. "ஐ லைக் டு நோ மை எனிமீஸ் அண்டு ப்ரண்ட்ஸ்," என்று கூறி முகம்மது அலி சித்திரமொன்றையும் எடுத்து மேஜை மீது போட்டார்.

"ஹௌ டிட் யூ கெட் திஸ்?" என்று சந்தாசாகிபின் படத்தைச் சுட்டிக் காட்டி வினவினான் கிளைவ்.

"ஐ ஆஸ்க்ட் முகம்மது அலி டு ஸெண்ட் ஒன்," என்றார் கவர்னர்.

கிளைவ் அதற்கு மேல் எதுவும் பேசவில்லை. கவர்னரின் உத்தரவுக்காக எதிர்பார்த்து நின்றான். கவர்னர் அவனைக் கவனிக்காமல் அந்தப் பெண்ணைப் பார்த்து, "யூ வாண்ட்டு கோ டு யுவர் ஃபாதர்? (உன் தந்தையிடம் போக விரும்புகிறாயா?)" என்று வினவினார்.

"ஐ ஆம் நாட் ஹிஸ் ஸ்ட்ரெய்ட் டாட்டர் (நான் அவர் நேர்ப் பெண்ணல்ல)" என்று கூறினாள் அவள்.

"டாட்டர் ஆப் எ ஸ்லேவ்? (அடிமைப் பெண்ணுக்கு பிறந்தவளா?")

"எஸ்" என்றாள் அவள்.

"எனிவே சந்தாசாகிப் ஹாஸ் ட்ரெய்ண்ட் யூ வெரி வெல் (எப்படியிருப்பினும் சந்தாசாகிப் உன்னை நன்றாகப் பழக்கியிருக்கிறார்)" என்று கூறிய கவர்னர், "காப்டன்! ரிலீஸ் ஹர் அண்டு ஹாவ் ஹர் ஸேப்லி டெலிவர்ட் டு ஹர் பாதர், (காப்டன்! இவளை விடுதலை செய்து ஜாக்கிரதையாக சந்தாசாகிபிடம் அனுப்பிவிடு)" என்றார்.

முடியாதென்பதற்கு அறிகுறியாக கிடுகிடுவென்று பக்கவாட்டில் தலையசைத்தாள் அவள். "நான்போனால் நவாப் கொன்றுவிடுவார்," என்றும் திட்டவட்டமாகக் கூறினாள் ஹிந்துஸ்தானியில்.

இதைக் கிளைவ் மொழி பெயர்த்தவுடன் கவர்னர் கேட்டார் ஆங்கிலத்தில், "என்ன செய்யப் போகிறாய்?" என்று.

அந்தப் பெண் சொன்ன பதிலைக் கேட்டதும் எதற்கும் அசையாத கவர்னரும் அசைந்து சிரித்தார் பலமாக. கிளைவோ சொல் செயல் இரண்டையும் இழந்து நின்றான்.

"நான் இனி இவருக்குச் சொந்தம்," என்று அவள் கிளைவை நோக்கிக் கையைக் காட்டினாள். அது மட்டுமல்ல, தனது உரிமையை ஊர்ஜிதம் செய்ய அவன் பக்கத்தில் போயும் நின்று கொண்டாள்.

(தொடரும்)








?

சேந்தன்

67'ம் பக்கம்



போர்ன்விடாவில் உள்ள
அதிக கோகோ அதனை
அதிக சுவையுள்ளதாகவும்
போஷாக்கு அளிப்பதாகவும்
ஆக்குகிறது.

ஊட்டமளிக்கும் மால்ட்,
பால், சர்க்கரை இவை
நன்கு கலந்திட்ட
போர்ன்விடாவை சூடான
கப் பாலிலே இரண்டு
ஸ்பூன்கள் போடுங்கள்:
கிடைப்பது சுவைமிக்க
சக்தியளிக்கும் பானம்.

உங்கள் குழந்தைகளுக்கு
தினமும் இரண்டு வேளை
போர்ன்விடா கொடுங்கள்.
அவர்களுக்கு தினமும்
வளர்ச்சிக்கு தேவையான
சக்தியை அளிக்கிறது.
அவர்களுக்கு ஈடு
கொடுக்க...உங்களுக்கும்
போர்ன்விடா தேவை!




இப்போது!

~~75 பைசா~~ ரூ.1 மிச்சப்படுத்துங்கள்

விசேஷ சலுகை கொண்ட 450 கிராம்
ரீஃபில் பேக் வாங்கி. இந்த
சலுகை சரக்கு உள்ளவரையே!

குறிப்பு: இந்தப் பேக்கைத்
திறந்தவுடனே, வழக்கமான
போர்ன்விடா டின்னில் அதை
நிரப்பி, புதுமை கெடாமல்
பாதுகாருங்கள்.



காட்பரிஸ்
# போர்ன்விடா

அதிக கோகோ அளித்திடும் சுவையும் போஷாக்கும்

OBM 8376A/TM

# ராஜ பேரிகை

சாண்டில்யன்

## 24. காப்டனின் சங்கடம்

எதற்கும் பிரமிக்காத காப்டன் ராபர்ட் கிளைவ் அந்த அடிமைப் பெண்ணின் சொல்லைக் கேட்டும் செயலைக் கண்டும் அடியோடு அதிர்ச்சிக்குள்ளாகி, கவர்னர் ஸாண்டர்ஸ் முன்பு ஆடு திருடிய கள்ளன் போல் விழித்துக் கொண்டு நின்றான் பல விநாடிகள். சிறிது அசைந்தாலும் பக்கத்தில் நிற்கும் அந்த அடிமைப் பெண்ணின் உடல் தன்மீது பட்டுவிடும் என்ற பயத்தில் பக்க வாட்டிலோ பின்னாலோ கூட நகராமல் சிலை போலவே காட்சியளித்தான். ஆனால் அந்த அடிமைப் பெண் சும்மா இல்லை. கிளைவின் ஒரு கையுடன் தனது கையைப் பின்னிக் கொண்டாள். "அடிமைக்கு உத்தரவிடுங்கள்," என்று கேட்டாள் ஹிந்துஸ்தானியில்.

"நீ எனக்கு அடிமையுமில்லை. நான் உத்தரவிட ஏதுமில்லை," என்று கடுப்புடன் பதில் கூறினான் கிளைவ் அரைகுறை ஹிந்துஸ்தானியில்.

அந்த நிலையில் ஸாண்டர்ஸின் இதழ்களிலும் புன்முறுவல் அரும்பி அவரது வாயிலிருந்த பைப்பும் லேசாக அசைந்தது. அந்தப் பைப்பை எடுத்துக் கையில் வைத்துச் சிறிது நேரம் திருகிக் கொண்டே இருந்த கவர்னர், "காப்டன்! தி கேர்ல் இஸ் ப்யூடிஃபுல்," என்று குறிப்பிட்டார். அவர் சொற்களில் நேரடியாக உணர்ச்சி தெரியாவிட்டாலும் மறைமுகமாக விஷமம் ஊடுருவி நின்றது.

காப்டன் கிளைவ் நின்ற இடத்தில் லேசாக அசைந்து அவள் கையிலிருந்து தனது கையை விடுவித்துக் கொண்டான். பிறகு கவர்னரை நோக்கி, "யுவர் எக்ஸலன்ஸி! பிரிட்டிஷ் படை அடிமைகளை ஏற்பது வழக்கமல்ல," என்றான்.

கவர்னர் ஸாண்டர்ஸ் உற்சாக நிலையிலிருந்ததால் நாற்காலியில் சிறிது சாய்ந்து உட்கார்ந்து, "காப்டன்! இன் தி ஆர்ட்டிகில்ஸ் கவர்னிங் மிலிடரி டிஸிப்ளின் ஐ டோண்ட் ஃபைண்ட் எனி ரெபரென்ஸ் டு ஸ்டேட்டஸ் ஆப் ஸ்லேவ் கேர்ல்ஸ் (காப்டன், நமது ராணுவக் கட்டுப்பாடு விதிகளில் அடிமைப் பெண்களின் அந்தஸ்து பற்றிய



குறிப்பு எதையும் காணவில்லை)'' என்று கூறினர்.

இந்தச் சமயத்தில் அந்த அடிமைப் பெண்ணும் உரையாடலில் கலந்து கொண்டு, ''யுவர் எக்ஸலென்ஸி இஸ் ரைட்,'' என்று சொன்னாள்.

இதைக் கேட்ட கிளைவ் அசந்து போய், ''உனக்கு இங்கிலீஷ் தெரியுமா?'' என்று வினவினன்.

''இங்கிலீஷ், பிரஞ்சு இரண்டு மொழிகளில் எங்களுக்குப் பயிற்சியளிக்கப்படுகிறது,'' என்றாள் அவள்.

''எங்களுக்கு என்றால் சந்தாசாகிபின் பெண்களுக்கா?'' என்று வினவினன் கிளைவ்.

''இல்லை,'' என்றாள் அடிமைப் பெண்.

''வேறு யாருக்கு?''

''அடிமைகளுக்கு. நான் ஒரு பெண் இருக்கிறேனென்பதுகூட நவாபுக்குத் தெரியாது. எத்தனையோ அடிமைகள். எத்தனையோ பெண்கள். எல்லோரையும் நவாப் அறிய முடியாது. எங்களுக்குப் பயிற்சியளிக்கும் ஹவில்தார்களுக்குத்தான் தெரியும்.''

கிளைவ் சிந்தனையிலிறங்கினன். கவர்னர் ஸாண்டர்ஸும்



சிறிது சிந்தித்தார். ''காப்டன்! பெட்டர் டேக் தி கேர்ல் டு யுவர் ரூம். வெயிட் ஹியர் ஃபார் ஃபிஃப்டீன் டேஸ் (காப்டன்! இந்தப் பெண்ணை உங்கள் அறைக்கு அழைத்துச் செல்லுங்கள். இங்கேயே பதினைந்து நாட்கள் தங்குங்கள்)'' என்று முடிவில் உத்தர விட்டார்.

கிளைவும் ஒரு தீர்மானத்துக்கு வந்து கவர்னர் அறையின் கதவைத் திறந்து, ''லெப்டினண்ட்!'' என்று அழைக்க விஜயகுமாரன் உள்ளே தோன்றி கவர்னரை வணங்கினன். ''காப்டன்!'' என்று கிளைவையும் வணங்கி உத்தரவை எதிர்பார்த்து நின்றான்.

அடுத்த வினாடி இடப்பட்ட கிளைவின் உத்தரவு விஜயகுமாரனைத் திகைக்க வைத்தது. ''லெப்டினண்ட்! இவளை எனது அறைக்கு அழைத்துப் போ!'' என்று உத்தரவிட்டதைக் கேட்டதும் கிளைவுக்குச் சித்தப் பிரமை பில்லையென்பதை உறுதி செய்து கொள்ள அவனை ஒரு கணம் கூர்ந்து நோக்கினன் விஜயகுமாரன். பிறகு ''உங்கள் அறைக்கா!'' என்று வினவினன்.

இந்தச் சமயத்தில் கவர்னர் இடைபுகுந்து, ''லெப்டினண்ட்! காப்டன் கிளைவுக்கு இந்த மாளிகையில் ஒரு தனி அறை எப்பொழுதும் ஒதுக்கப் பட்டிருக்கிறது. இதே மாடியில் கோடி அறை,'' என்ற அறிவிப்பை விடுத்தார்.

விஜயகுமாரனுக்குச் சிந்திக்கவும் அவகாசமில்லாததால், ''ஆம்,'' என்று அந்தப் பெண்ணை அழைத்துக் கொண்டு அவள் பின்தொடர வெளியே சென்றான்.

அவ்விருவரும் சென்ற பிறகு கிளைவ் கவர்னரை நோக்கி, ''யுவர் எக்ஸலன்ஸி, வாட் இஸ் திஸ் காமெடி அபௌட்? (யுவர் எக்ஸலென்ஸி! இந்த ஹாஸ்ய நாடகத்துக்கு என்ன அர்த்தம்?)'' என்று வினவினன்.

கவர்னர் ஒரு முறை பைப்பை வாயில் வைத்துப் புகையை நன்றாக இழுத்து வெளிவிட்டார். ''ஐ வில் ராதர் டர்ம் இட் எ ட்ராஜடி (இதைத் நான் விபரீதம் என்று கருதுவேன்)'' என்றும் சொன்னார்.

''என்ன விபரீதம் இதில்?''

''ஒரு அழகி கிடைக்கிறாள்...''

''ஆம்.''

''அவள் பிரிட்டிஷ் காப்டனிடம் அடிமையாயிருக்க, அவன் எதைச் சொன்னாலும் செய்ய....''

''யுவர் எக்ஸலென்ஸி...''

''செய்யத் தயாராயிருக்கிறாள். அப்படியிருக்க ஒரு ராணுவ காப்டன் அவளைக் கண்டு நடுங்குகிறான்,'' என்ற கவர்னர், ''மை பாய்! யூ ஆர் லக்கி (தம்பி! நீ அதிர்ஷ்டசாலி)'' என்றும் கூறி அவன் போகலாமென்பதற்கு அடையாளமாகக் கையை அசைத்தார்.

காப்டன் அவருக்குத் தலை வணங்கி வெளியே வந்து தனது அறையை அடைந்ததும் அங்கு உண்மையாகவே விபரீத நிலை இருந்தது. அறை வாயிற்படியில் விஜயகுமாரன் உட்கார்ந்திருந்தான். உள்ளே அடிமைப் பெண், கிளைவுக்குப் படுக்கையை அங்கிருந்த சிறு கட்டிலின்மீது விரித்துக்

---




ஊழலில் ஈடுபட்டு சஸ்பெண்ட் செய்யப்பட்ட அரசாங்க ஊழியர்களுக்குப் பஞ்சாப் ரெவின்யூ மந்திரி ஜீவன் சிங் புதிய அறிவுரை ஒன்றைக் கூறியிருக்கிறார்.

அதன்படி அவர்கள் சீக்கியர்களின் பொற்கோயில் அமைந்துள்ள அமிர்தசரஸ் குளத்தில் தங்கள் பாதங்களைக் கழுவி அதன் தலைமைக் குருவிடம் 'இவர்கள் இனிமேல் ஊழலில் ஈடுபடமாட்டார்கள்,' என்று சர்டிபிகேட் வாங்கிவர வேண்டுமாம். அப்படி வாங்கி வந்தால் அவர்கள் மீண்டும் சர்விஸில் சேர்த்துக்கொள்ளப் படுவார்களாம்.

—ஆதாரம் : சண்டே ஸ்டாண்டர்டு

—வி. த. ஸ்ரீதரன்

சீக்கியர் அல்லாதவர்களும் கடவுள் நம்பிக்கை இல்லாதவர்களும் எந்தக் குளத்தில் குளிப்பது! யாரிடம் சர்டிபிகேட் பெறுவது!

கொண்டிருந்தாள். அந்த நிலையைக் கண்ட கிளைவ் சினத்தின் வசப்பட்டு, ''லெப்டினண்ட்!'' என்று கண்டிப்பு நிரம்பிய குரலில் விஜய குமாரனை அழைத்தான்.

விஜயகுமாரன் சட்டென்று எழுந்து சல்யூட் அடித்து, ''எஸ் காப்டன்!'' என்று உத்தரவுக்கு எதிர் பார்த்து நின்றான்.

''இங்கு ஏன் வாயிற்படியில் உட்கார்ந்திருக்கிறாய்?'' கிளைவின் குரலில் கோபம் நிரம்பி வழிந்தது.

''அவள் உள்ளே விட மறுக்கிறாள்.''

''அவள் உத்தரவுப்படி தான் நீ நடக்க வேண்டுமா?''

''இல்லை.''

''பின் உள்ளே செல்வது தானே?''

''செல்ல முயன்றேன். தலையணையை எடுத்து வீசினாள் என்மீது.''

''பிறகு?''

''பிடித்தும் தள்ளினாள்.''

''இதைச் சொல்ல உனக்கு வெட்கமாயில்லை?''

''இல்லை. முதலில் அவள் பலசாலி. இரண்டாவது உங்கள்......''

''விஜயகுமார்!''

''அவள்தான் சொன்னாள்.''

''என்ன சொன்னாள்?''

''உங்களுக்குச் சொந்தமென்று.''

இதைச் சொன்ன விஜய குமாரன் வெளிப்படையாகச் சிரிக்கவில்லையென்றாலும் உள்ளூர நகைப்பதை அவன் முகம் தெளிவாகக் காட்டியது.

கிளைவ் அவன் முகத்தைக் கவனித்து விஷயத்தை உணர்ந்து கொண்டாலும் உணராதது போலவே நடித்து, ''விஜயகுமார்! யூ கம் வித் மி,'' என்று கட்டளையிட்டு அறைக்குள் சென்றான். விஜயகுமாரனும் பின் தொடர்ந்தான். கிளைவ் உள்ளே நுழைந்ததும் அவன் ஹாட்டை அந்தப் பெண்ணே கழற்றி எட்ட இருந்த கோட் ஸ்டாண்டில் மாட்டினாள். பிறகு அவன் கோட்டையும் அவிழ்த்து அதற்குப் பக்கத்தில் மாட்டிவிட்டாள். கிளைவ் பிரமை பிடித்தவனைப் போல் சட்டென்று



நாட்டிய முத்திரை என்பதற்காக அல்லாமல், வித்தியாசமான கோணத்தில் எடுக்கப்பட்டது என்ற காரணத்தால் சிறப்புப் பெற்றிருக்கிறது இந்த வண்ணப் படம்,

அட்டையில்: குமாரி சிந்தூரா.
படம் எடுத்தவர்: இ. அமலோர்

---

கட்டிலில் போய் உட்கார்ந்து கொண்டான். அந்தப் பெண் தூரத்திலிருந்த பீங்கான் பேஸினில் எட்ட இருந்த மண் கூஜாவிலிருந்து நீரை ஊற்றி, ஒரு டவலையும் எடுத்துக் கிளைவிடம் நீட்டினாள். கிளைவ் ஏதோ சொப்பனத்தில் நடப்பவன் போல் பேஸினில் முகம் கைகள் கழுவி டவலால் துடைத்துக் கொண்டான். பிறகு கிளைவுக்கும் விஜயகுமாரனுக்கும் உணவை அந்தப் பெண்ணே பரிமாறினாள். அவர்கள் உணவருந்திய பின் தானும் நிதானமாக கிளைவின் பிளேட்டிலேயே உணவைப் பரிமாறிக்கொண்டு அருந்திக் கை கழுவினாள். ப்ளேட் முதலியவற்றைப் பக்கத் தறையில் அலம்பிக் கொண்டு வந்து சுத்தமாக வைத்தாள்.

அவள் நடவடிக்கைகளைக் கிளைவும் விஜயகுமாரனும் வேடிக்கையாகக் கவனித்துக் கொண்டு ஒருவன் படுக்கையிலும் இன்னொருவன் நாற்காலியிலும் உட்கார்ந்திருந்தார்கள். அலுவல்களைச் சீராக முடித்த பின் அவள் விஜயகுமாரனை நோக்கி, ''லெப்டினண்ட்!'' என்று அழைத்தாள்.

''எஸ் மேடம்,'' என்றான் விஜயகுமாரன்.

''யூ டு நாட் ஸ்பீக் குட் இங்க்லீஷ்,'' என்றாள் அடிமைப் பெண்,

''யூ மீன் மீ?''

''எஸ்.''

''ஹெள?''

''ஐ ஆம் நாட் மேடம்; ஐ ஆம் மிஸ்.''

இதைக் கேட்ட கிளைவ் தன்னையும் மறந்து கைகளைத் தட்டி விட்டான்.

''யூ ஸி! மை லார்ட் அப்ரிஷியேட்ஸ் மி (பார்த்தாயா? என் தலைவர் என்னைப் பாராட்டுகிறார்)'' என்றாள் அடிமைப் பெண்.

கிளைவின் முகம் திடீரெனப் பரிதாபமாக அவளை நோக்கியது. விஜயகுமாரன் நகைத்தான்.

கிளைவுக்கு ஒரு யுக்தி தோன்றவே, ''மை டியர் கேர்ல்,'' என்று அழைத்தான் அவளை.

''எஸ் லார்ட்,'' என்றாள் அவள் பூரித்த உள்ளத்தின் உவகை முகத்தில் விரிய.

''மை லெப்டினண்ட்,'' என்று விஜயகுமாரனைக் காட்டினான்.

''எஸ்?'' என்ற அவள் புருவங்கள் கேள்விக்குறியால் உயர்ந்தன.

''அழகாயிருக்கிறான்,'' என்றான் கிளைவ்.

''ட்ரூ,'' என்றாள் அவள்.

''உனக்கு என்னைவிடத் தகுந்தவன்.''

இந்த உரையாடலைக் கேட்ட விஜயகுமாரன், ''மிஸ்!'' என்று அவளை அழைத்தான்.

''எஸ்!''

''எனக்கு ஒரு காதலி இருக்கிறாள்.''

''குட்!''

''காப்டனுக்கு யாருமில்லை.''

''வெரி குட்!''

''தவிர, என்னைவிடப் பெரிய வீரர். தனிக் கட்டை. தவிர. . . .''

''எஸ் எஸ்.''

''குட் மேட் டு யூ. டோண்ட் ஃபர்கெட் கவர்னர் கேவ் யூ டு ஹிம், நாட் டு மி (உனக்குச் சரியான ஜோடி. தவிர, கவர்னர் உன்னை அவருக்குத் தான் தந்தாரே தவிர எனக்கல்ல)'' என்று விளக்கினான் விஜயகுமாரன்.

''யூ ஆர் ரைட். நௌ கெட் அவுட்,'' என்று அந்த அடிமைப் பெண் வாயிற்படியைச் சுட்டிக் காட்டினாள் விஜயகுமாரனுக்கு.

விஜயகுமாரன் ஏதோ பெரிய விபத்திலிருந்து தப்பியவன் போல் சரேலென எழுந்தான் நாற்காலியிலிருந்து. ஆனால், ''ஸிட் டௌன்,'' என்ற கிளைவின் கடுமைக் குரல் அவனை மீண்டும் உட்கார வைத்தது.

கிளைவ் முடிவாகக் கூறினான். ''நாம் மூவரும் இந்த அறையில் படுக்கப் போகிறோம்,'' என்று.

அன்றைய நாடகம் அந்தக் கட்டளையுடன் முடிந்தது. கிளைவ் ஆணையிட்டதும் அந்தப் பெண் அறை மூலைக்குச் சென்று சுருட்டிப் படுத்துக் கொண்டாள். அன்றும் அடுத்த பதினைந்து நாளும் கிளைவுக்கும் விஜயகுமாரனுக்கும் வாழ்க்கை பரம நரகமாயிருந்தது. அவர்கள் எங்கு சென்றாலும் அடிமைப் பெண் அவர்களைத் தொடர்ந்து சென்றாள். ஸெய்ண்ட் டேவிட் கோட்டையிலிருந்த சோல்ஜர்கள் கிளைவையும் லெப்டினண்டையும் கேலியாகப் பார்த்தார்கள். பின்னால் ஏதோ கிசுகிசுவென்று பேசினார்கள். இந்த நிலைக்குப் பரிகாரம் பதினைந்தாம் நாளன்றே வந்தது. அந்த இரவில் எங்கோ வெளியிலிருந்து வந்த அடிமைப் பெண் தூங்கிக் கொண்டிருந்த கிளைவை அசைத்து எழுப்பினாள். அவன் எழுந்து உட்கார்ந்ததும் பேசவேண்டாமென்று சைகை காட்டி விட்டுக் கட்டிலில் பக்கத்தில் உட்கார்ந்து அவன் கழுத்தைத் தன் கையால் வளைத்துக் காதுக்கருகில் கிசுகிசுவென்று ஏதோ சொன்னாள்.

இந்தச் சமயத்தில், ''ஐ ஆம் ஸாரி,'' என்ற குரல் வாயிற்படியிலிருந்து வந்தது. கிளைவ் திகிலுடன் பார்த்தான் வாயிற்படியை. கவர்னர் ஸாண்டர்ஸ் புன்முறுவலுடன் நின்று கொண்டிருந்தார்.

(தொடரும்)



# அக்டோபர் 10 அலகாபாத் இரவு 12-15

அக்டோபர் மாதம் 10'ம் தேதி திங்கள் கிழமை அதிகாலை 12–15 மணிக்கு அலகாபாத்தில் உள்ள நைனி ரயில்வே ஸ்டேஷனில் ஏற்பட்ட பயங்கர விபத்தை நேரில் கண்டவர் விவரிக்கிறார்:

விபத்துக்குள்ளான எக்ஸ்பிரஸ் வண்டி 110 கிலோ மீட்டர் வேகத்தில் வந்து மோதியதால் முன்னால் இருந்த என்ஜின் கூட்ஸ் வண்டியின் மேலே ஏறி நசுங்கி அதன் பாகங்கள் தனித் தனியாக இருந்தன.

அடிபட்ட ஒரு பெண்மணி பாணி பாணி, (தண்ணி, தண்ணி) என்று கேட்க, அருகிலிருந்த ஒரு போலீஸ்காரர் தண்ணீர் கொடுக்காமல் அந்தப் பெண்மணி போட்டிருந்த நகைகளைக் கழற்றி கொண்டிருந்தார். அவள் 'எனக்கு தண்ணி கொடுத்த பிறகாவது இந்த நகைகளை எடுத்துக் கொள்' என்றுளாம். இதைப் பார்த்துக் கொண்டிருந்த சிலர் அந்தப் போலீஸ்காரரை அடித்து விரட்டி விட்டு, அந்தப் பெண்ணுக்குத் தண்ணீர் கொடுத்தார்கள்.

ஏழு வயதுக் குழந்தை, தன் தாயையும், தந்தையையும் இழந்த நிலையில், மேரா மம்மி கஹாங், மேரா டாடி கஹாங் (என் அம்மா எங்கே, என் அப்பா எங்கே) என்று கதறிக் கொண்டிருந்தது.

ஒரு காலையும், ஒரு கையையும் இழந்த ஒருவர், 'ஐயோ! என் லட்ச ரூபாய்ப் பெட்டியைக் காணோமே' என்று அலறிக் கொண்டிருந்தார். எத்தனையோ லட்சாதிபதிகள் விபத்தில் இறந்துவிட்டனர்.

குழந்தை பெற்றெடுக்கப் பிறந்தகம் சென்று கொண்டிருந்த ஒரு பெண்மணியின் உடல் நசுங்கி, குழந்தை வெளியே வந்து இருந்தது.

தன் தாய், தந்தை, தங்கை, தம்பி ஆகியோரை இழந்த ஒரு பெண்மணியின் உடைமைகளை அவர் முன்னே வைத்தார்கள். 'என் குடும்பமே அழிந்த பிறகு இந்தச் சாமான்கள் எனக்கு எதற்கு வேணும்? எல்லாம் எடுத்துக் கொண்டு போங்கள்!' என்று கதறிக் கொண்டிருந்தார் அவர்.

—சு. சுப்பிரமணியம்

## 25 தோல்வி

கழுத்தை அடிமைப் பெண்ணின் கரம் வளைத்துக் கட்டி, காதில் அவள் வாய் புதைத்து நின்ற நிலையில் கவர்னர் தன்னைக் கண்டதே பரம சங்கடமாயிருந்தது கிளைவுக்கு. அத்துடன் அவர் ''ஐ ஆம் ஸாரி,'' என்று சொன்னதும் புன்முறுவல் பூத்ததும் கிளைவின் எரிச்சலைப் பலமடங்கு உயர்த்தவே. ''இதில் வருந்துவதற்கு ஏதுமில்லை,'' என்றான் சுத்தத் தமிழில்.

கவர்னர் ஸாண்டர்ஸ் தாம் சாதாரண மனிதரல்ல என்பதை நிரூபித்தார். ''உண்மை, உண்மை,'' என்றார் அவரும் சுத்தத் தமிழில். அவருடைய தமிழைக் கண்டு அசந்து போனான் கிளைவ். ''யுவர் எக்ஸலன்ஸி..'' என்று வியப்புடன் ஏதோ சொல்லவும் தொடங்கினான்.

''சொல்,'' என்றார் ஸாண்டர்ஸ்.

''தமிழை எப்படிக் கற்றுக் கொண்டீர்கள்?''

''தினம் இரண்டு மணி நேரம் செலவழித்து.''

''எதற்கு?'

''ஒரு தேசத்தில் நாம் இருப்பதாக முடிவு செய்து விட்டால் அந்தத் தேசத்தின் மொழியை நாம் அறிந்து கொள்ள வேண்டும்,'' என்று கூறினார் கவர்னர்.

கிளைவ் அவரை வியப்புடன் நோக்கினான். ''வாட் டு யு மீன் யுவர் எக்ஸலன்ஸி? (என்ன சொல்கிறீர்கள் எக்ஸலன்ஸி?)'' என்று சொந்த மொழிக்குத் திரும்பினான் காப்டன்.

இந்தச் சமயத்தில் அடிமைப் பெண் இடைப் புகுந்தாள். ''ஹிஸ் எக்ஸலன்ஸி ஹாஸ் டிஸைடெட் (எக்ஸலன்ஸி ஒரு முடிவுக்கு வந்து விட்டார்)'' என்று ஆங்கிலத்தில் திட்டமாகப் பேசினாள்.

கவர்னர் அவள்மீது தனது பார்வையைச் செலுத்திவிட்டு, ''யு ஆர் எ ஷ்ரூட் கேர்ள்,'' என்றார்.

''ஹௌ?'' கிளைவ் வினவினான் வெறுப்புடன்.

''ஷீ அண்டர்ஸ்டாண்ட்ஸ் (அவள் புரிந்து கொள்கிறாள்),'' என்றார் கவர்னர்.

கிளைவுக்கு கவர்னரின் மனத்தில் ஓடியது என்னவென்று புரிந்தாலும் அவர் வாயாலேயே அதை வரவழைக்கத் தீர்மானித்து, ''அவள் எதைப் புரிந்து கொண்டிருக்கிறாள்?'' என்றான்.

''நான் இங்கி

ராஜ பேரிகை

சாண்டில்யன்



ருந்து அசையப் போவ தில்லை என்பதை,'' என்றார் கவர்னர் திட்டவட்டமாக.

''எங்கிருந்து?''

'' இ ந் தி யா வி லிருந்து. இப்பொழுது கர்நாடகம் இருக்கும் நிலையில் ஒன்று பிரிட்டன் நிலைக்கும், அல்லது பிரான்ஸ் நிலைக்கும்,''என்று தமிழில் சொன்ன கவர்னர் உணர்ச்சி மேலிட்டு, ''ஐ ஹாவ் டிஸைடெட் தட் இட் ஷல் பி அஸ் (இருக்கப் போவது நாம்தான் என்பதை நாம் தீர்மானித்துவிட்டேன்)'' என்றார்.

இந்த உரையாடலுக்கு முன்பே எழுந்து சற்று எட்டி நின்றிருந்த விஜயகுமாரன், ''யுவர் எக்ஸலன்ஸி...'' என்று உரையாடலில் உட்புகுந்தான்.

''எஸ், லெப்டினண்ட்?'' கவர்னரின் சண்கள் அவன் இருந்த திசையை நாடின.

''இந்த நாட்டை நீங்சள் ஆள நினைக்கிறீர்கள்?'' என்று விஜய குமாரன் வினவினான்,

''ஆம்.''



பாம்பாட்டி தெரிகிறது, மகுடி தெரிகிறது, பாம்பு யார்? ரஜனிதானு?

படம்:
சாய்ந்தாடம்மா
சாய்ந்தாடு

"இந்த நாட்டு மன்னர்கள், நவாபுகள், கைகைக் கட்டிக்கொண்டு சும்மா இருப்பார்களா?"

"மாட்டார்கள். தங்களுக்குள் சண்டை பிடித்துக் கொண்டிருப்பார்கள். அங்குதான் நாங்கள் வருகிறோம்," என்ற கவர்னர், "மை டியர் பாய்! ஸ்டாண்டிங் டிவைடெட் இஸ் யுவர் பர்த்ரைட் (பிரிந்து நிற்பது உங்கள் பிறவிக் குணம்)" என்றும் சுட்டிக் காட்டினர்.

பிறகு கிளைவை நோக்கி, "காப்டன்! நீங்களும் உங்கள், உம்.. உம்..உங்கள் அடிமைப் பெண்ணும் இருந்த நிலையில் நான் உட்புகுந்தது சரியல்ல. ஆனல் விஷயம் அவசரம். அதனுல்தான் வந்தேன்," என்ருர்.

"இஸ் இட் ஸோ அர்ஜண்ட் யுவர் எக்ஸலன்ஸி (எக்ஸலன்ஸி அத்தனை அவசர வேலையா?)" என்று வினவினுன் காப்டன்.

"காப்டன் டால்டன் இஸ் ஹியர்," என்ருர் கவர்னர்.

"தட்ஸ் வாட் ஷி டெல்ஸ் மி," என்ருன் கிளைவ்.

"வி ஹாவ் லாஸ்ட் தி பாட்டில் அட் வால்கொண்டா (நாம் வால்கொண்டா போரில் தோற்று விட்டோம்)" என்று கவர்னர் செய்தி சொன்னுர்.

அதற்கும் வியப்புக் காட்டவில்லை கிளைவ். "ஷி டோல்டு மி தட் ஆல்ஸோ (அதையும் சொன்னுள் இவள்)" என்று அடிமைப் பெண்ணைச் சுட்டிக் காட்டினுன்.

கவர்னர் மீண்டும் அவளை உற்று நோக்கினுர். பிறகு கேட்டார். "நானும் டால்டனும் பேசினதைப் பார்த்தாயா?" என்று.

"பார்த்தேன். பிறகு கேட்டேன்."

"எப்படி?"

"முதலில் சாவி போடும் கதவுத் துளையில் ஒரு கண்ணை வைத்தேன், பிறகு காதை வைத்தேன்," என்ருள் அவள்.

## முன்கதை

பதினெட்டாவது நூற்றாண்டின் இடைக்காலத்தில் ஒரு நாளிரவு திருவரங்கனை ஏகாந்தத்தில் தரிசிக்க, தஞ்சை அரசகுமாரி நந்தினியும், அமைச்சர் டபீர் பண்டிதரும் வருகிறார்கள். அங்கு கர்ப்பக்கிரக முன் மண்டபத்தில் தங்களுக்கு முன்னமேயே ஒரு வாலிபன் வந்து ஒரு நவாபின் தலையைக் கொணர்வதாக சபதம் செய்துகொண்டிருப்பதைக் காணுகின்றார்கள். அந்தச் சமயத்தில் அரங்கன் கண் வைரமொன்றும் காணாதிருப்பதைக் கண்டு, அந்த வாலிபனைத் திருடனென்று தீர்மானித்துக் கைது செய்ய உத்தரவிடுகிறார் அமைச்சர். விஜயகுமாரன் என்ற அந்த வாலிபன் தஞ்சை விரரை அச்சுறுத்தி அமைச்சர் கண் முன்பே அரசகுமாரியைக் கடத்திச் சென்றுவிடுகிறான். இடையே, முராரிராவ் என்ற மகராஷ்டிர தளபதியையும் பிரிட்டிஷ் ஸோல்ஜரான ராபர்ட் கிளைவையும் சந்தித்து, அவர்கள் நட்பைப் பெறுகிறான்.

நந்தினியை அவனே தஞ்சை மன்னரிடம் ஒப்படைத்து தஞ்சை அரண்மனையிலேயே தங்கிய சமயத்தில் நந்தினிக்கும் விஜயகுமாரனுக்கும் காதல் ஏற்படுகிறது.

இந்தச் சந்தர்ப்பத்தில் பிரிட்டிஷ் பிரெஞ்ச் மோதல் அதிகமாகி சந்தாசாகிபின் கை ஓங்கவே அதை அடக்கப் புது பிரிட்டிஷ் கவர்னர் ஸாண்டர்ஸ் முயற்சி எடுக்கிறார். காப்டன் ஜின்ஜின்லின் தலைமையில் ஒரு படையை வாலிகண்டபுரத்துக்கு அனுப்புகிறார். அங்கு சென்ற கிளைவும் அவனிடம் லெப்டினண்ட் ஆகிவிட்ட ராஜகுமாரனும் அங்கிருந்த கேவல நிலையைக் கவர்னருக்கு அறிவிக்கச் சந்தாசாகிபின் வேவுகாரியான ஒரு அடிமைப் பெண்ணை அழைத்து வருகிறார்கள். ஒரு நாள் இரவு அந்த அடிமைப் பெண் திடீரென வந்து கிளைவின் கழுத்தைக் கட்டிக்கொண்டு ஏதோ சொல்கையில் கவர்னர் பார்த்துவிடுகிறார். 'ஐயம் ஸாரி' என்று கூறிக்கொண்டு கிளைவின் அறைவாயிலில் நிற்கிறார்.

---

கவர்னர் ஒரு விநாடிதான் சிந்தனையில் இறங்கினார். பிறகு, "யூ வில் பி யூஸ்ஃபுல் டு அஸ் (நீ எங்களுக்கு உபயோகப்படுவாய்)" என்று கூறிவிட்டு கிளைவைத் தம்மைத் தொடரும்படி கையால் சைகை செய்து திரும்பி நடந்தார். 'டக், டக்' என்ற சீரான பூட்ஸ் ஒலி தோல்வியிலும் அசையாத அவர் திட மனத்திற்கு அத்தாட்சி கூறியது.

அவர் சென்ற அடுத்த விநாடி கிளைவ் தனது ஹாட்டைத் தரித்துக் கொண்டு, "விஜயகுமாரா! விஷயம் என்னவென்பதையும், அடுத்த திட்டம் என்னவென்பதையும் நான் அறிந்து வருகிறேன்," என்று கூறிவிட்டு கவர்னர் அறையை நோக்கிச் சென்று அங்கு காப்டன் டால்டனுடன் கை குலுக்கியதும் இருவரையும் அமரச் சொன்ன கவர்னர் ஸாண்டர்ஸ், "காப்டன் டால்டன்! ரிலேட் வாட் ஹாப்பன்ட் இன் வால் கொண்டா இன் டிடெய்ல். (வால்கொண்டாவில் நடந்ததை விவரமாகச் சொல்)" என்று உத்தரவிட்டார்.

காப்டன் டால்டன் மிகுந்த வேதனையுடனும் வெறுப்புடனும் வாலிகண்டபுரத்தின் தோல்வியை விவரித்தான் தெளிவாகவும் உறுதியாகவும். அவன் சொன்னான் ஆங்கிலத்தில்: "யுவர் எக்ஸலன்ஸி, வெற்றியாக வேண்டிய போர் தோல்வியை அளித்தது. இத்தனைக்கும் காப்டன் ஜின்ஜின்ஸின் திடமில்லாத மனமும் முடிவுகளை எடுக்க முடியாத மூளையும்தான் காரணம். காப்டன் கிளைவ் வந்த பிறகும் அவர் யோசனைக்குப் பிறகும் ஜின்ஜின்ஸ் முன்னேறி சந்தாசாகிபின் படையை எதிர் கொள்ள மறுத்தார். அனாவசியமான தாமதம் எதிரியின் கையை வலுப்படுத்தியது. கோட்டையைத் தாக்க நமது மார்ட்டர் பீரங்கிப் படை பின் வாங்கிப் பாசறைக்கு வந்தது. சந்தாசாகிப் படையின் முன்னோடிகள் மறு நாள் தூரத்திலிருந்த மலை உச்சிகளில் தெரிந்தார்கள். அந்த மலைப் பகுதிகள் எங்களுக்கும் எதிரிப் படைக்கும் இடையில் இருந்தது. அந்த மலைப் பகுதியிலிருந்து கோட்டை வாயிலுக்குச் செல்லும் நீர் நிலையைக் கைப்பற்ற எதிரியின் படை முன்னேறியது. நீர் நிலையின் பக்கத்திலிருந்த நாங்கள், அதைச் சுலபமாகக் கைப்பற்றி இருக்கலாம். ஆனால் ஜின்ஜின்ஸ் அசையவில்லை. அசைந்த போதும் அவரால் திட்டமாகக்

கட்டளை இட முடியவில்லை. நாங்கள் அணிவகுத்து நின்றபோதும் எங்களை நோக்கிக் கேட்டார் 'நாம் முன்னேறித் தாக்க வேண்டும் என்பது உங்கள் கருத்தா?' என்று. இதனால் உபதலைவர்கள் அதைரியமடைந்தார்கள். இத்தனைக்கும் இரு படைகளும் கை கலந்த போது சுதேசிகளே நன்றாகப் போரிட்டார்கள். அப்துல் வஹாப்கான் படை சீறிச் சென்றது சந்தாசாகிப்பின் மீது. வஹாப்கானின் குதிரை சுடப்பட்டு வீழ்ந்த போதும்கூட அவர் மீண்டும் வேறு புரவி ஏறிப் போரிட்டார்– சுதேசிகளுடைய வீரம்கூட வெள்ளையரை ஊக்கவில்லை. இதைவிட மானக்கேடான போரை நான் பார்த்ததில்லை. அப்துல் வஹாப்பின் படையினர் நம் கோழைத்தனத்தைக் கண்டு வெறுத்தனர், இப்பொழுது ஜின்ஜின்ஸ் தமது படையுடன் திருச்சிக்கு ஓடிக் கொண்டிருக்கிறார். சந்தாசாகிப் அவரைத் தொடர்ந்து செல்கிறார்.''

இந்தக் கதையைச் சொல்லி முடித்த காப்டன் டால்டன் தன் மன வேதனையை முகத்தில் நன்றாகக் காட்டினான். ''இதை எதிர்பார்த்துத் தான் உங்களை அங்கேயே தங்கிப் படையை நடத்தும்படி கேட்டுக் கொண்டேன்,'' என்று கிளைவ் மீதும் குற்றம் சாட்டினான்.

கவர்னர் ஸாண்டர்ஸ் தீவிர சிந்தனையில் இறங்கிக் கண்களை மூடிக் கொண்டார். கடைசியாக அவர் கண் விழித்தபோது அவர் மனத்தில் ஏதோ திட்டமொன்று உருவாகி இருப்பது புலனாயிற்று. கவர்னர் ஸாண்டர்ஸ் கூறினார். ''காப்டன் டால்டன்! யூ ஜாயின் ஜின்ஜின்ஸ். காப்டன் கிளைவ்! யூ கோ டு தேவிகோட்டா வித் யுவர் லெப்டினென்ட் அண்ட் தட் கேர்ள்–(காப்டன் டால்டன், நீ போய் ஜின்ஜின்ஸுடன் சேர்ந்து கொள். காப்டன் கிளைவ், உன் லெப்டினன்டையும் அந்தப் பெண்ணையும் அழைத்துக் கொண்டு தேவி கோட்டைக்குப் போ)'' என்று.

கட்டளை திட்டமாயிருக்கவே இரு காப்டன்களும் எழுந்து கவர்னருக்கு சல்யூட் செய்தார்கள். ''தேவிக்கோட்டையில்..'' என்று கிளைவ் ஏதோ சொல்ல முற்பட்டான். அவனைத் தமது கையசைப்பால் நிறுத்திய ஸாண்டர்ஸ், ''யூ வில் ரிஸீவ் மை ஆர்டர்ஸ் ஸூன் (விரைவில் என் உத்தரவு கிடைக்கும் உனக்கு)'' என்றார். அத்துடன் பேட்டி முடிந்துவிட்டதை அறிவிக்க கவர்னரும் ஆசனத்திலிருந்து எழுந்து அவர்கள் வணக்கத்திற்குப் பதிலாகத் தலையை லேசாக ஒரு புறமாகச் சாய்த்தார். காப்டன்கள் சென்றதும், ''எந்தத் தோல்வியையும் வெற்றியாகத் திருப்ப முடியும். எப்படி என்பதை அறிவாளிகள் தீர்மானிக்கிறார்கள்,'' என்று தாமாகவே சொல்லிக் கொண்டார்.

(தொடரும்)

## புதிர்



சிவப்புக் கல் பதித்த தோடு மூன்று ஜோடி. பச்சைக் கல் பதித்த தோடு மூன்று ஜோடி. ஆக, ஆறு ஜோடித் தோடுகள் அந்தப் பணக்காரியின் நகைப் பெட்டியில் எல்லாம் கலந்த மாதிரி இருக்கிறது. மின்சாரம் நின்று போய்விட்டதால், அறையில் ஒரே இருட்டு. குறைந்த பட்சம் எத்தனை தோடுகளைப் பெட்டியிலிருந்து எடுத்தால் ஒரே மாதிரியான கல் பதித்த ஒரு ஜோடி கம்மல் சந்தேகமில்லாமல் கைக்கு அகப்படும்?



**'69**

பொன்னு ராமன்

தலை தீபாவளிக்கு என் கணவர் வருவாரோ என்று ஆகிவிட்டது. 1969ல் தலை தீபாவளி. கல்கத்தாவிற்கு ஆபீஸ் விஷயமாகச் சென்றிருந்த அவர் தீபாவளிக்கு அம்பா சமுத்திரம் வர வேண்டும். ஆனால் அது பற்றி டெலிபோனோ தகவலோ கொடுக்கவில்லை. சென்னைக்கு பிளேனில் வந்த அவர் திருநெல்வேலி எக்ஸ்பிரஸ்ஸில் அம்பா சமுத்திரத்திற்கு வந்து கொண்டிருந்தார். அது எங்களுக்குத் தெரியாமல், நானும் சகோதரர்களும் பெரியப்பாவும் காரிலே மதுரைவரை சென்று பார்ப்பது என்று கிளம்பினோம்.

கோவில்பட்டி ஸ்டேஷனில் வண்டி மூன்று நிமிடம் நின்றபோது ஒவ்வொரு கம்பார்ட்மெண்ட் ஆக நாங்கள் தேடிக் கொண்டே சென்றோம். ரிஸர்வேஷன் கிடைக்காததால் மூன்றாம் வகுப்பில் ஒரு மூலையில் உட்கார்ந்திருந்த இவரை ரயில் கிளம்பும் சமயம் பார்த்துக் கண்டு பிடித்தேன். அவசரம் அவசரமாக அவரும் உடன் வந்திருந்த உறவுகாரர்களும் இறங்கினார்கள். மாலை மூன்று மணிக்கு அம்பாசமுத்திரம் போய்ச் சேர்ந்த பிறகு தான் வீடு களை கட்டியது.

எனது இரு சகோதரிகள் அத்திம்பேர் உறவுகாரர் பலர் வந்திருந்தார்கள். எங்களுக்கு சிவாஜி படம் பிடிக்கும். அக்கா அத்திம்பேருக்கு எம்.ஜி.ஆர் படம் தான் பிடிக்கும். இருந்தாலும் அக்காவிற்காக, கல்யாணி தியேட்டரில் புதிதாக வந்திருந்த எம்.ஜி.ஆர். படத்திற்கு அனைவரும் — மொத்தம் 12 டிக்கட் — சென்றோம்.



**'76**

சித்ரா சிவராமகிருஷ்ணன்

**1975** ஜூன் 19ம் தேதி எங்களுக்குத் திருமணம் நடந்தது. அப்போது என் கணவர் மணலியில் வேலை செய்து கொண்டிருந்தார். வேலை இருப்பதாகவும் இரவு வர பத்து மணி ஆகும் என்றும் டெலிபோன் செய்தார். எனக்குக் கவலையாகப் போய்விட்டது. அப்போது நான் எம். ஏ. இரண்டாவது வருடம் படித்துக் கொண்டிருந்தேன். யாரோ இரவு போன் செய்தார். லைன் சரியாக கேட்காததால் நியூஸன்ஸ் போன் என்று நினைத்து, என் தந்தையிடம் கொடுத்தேன். போலீஸில் ஒப்படைத்துவிடுவேன் என்று அவரை பயமுறுத்தினார். (அது என் கல்லூரி மேட்! மறுநாள் தான் தெரிந்தது.) இரவு பதினொரு மணிக்கு மறுபடியும் போன். வள்ளென்று சீறினோம். நல்ல வேளை, இம்முறை கூப்பிட்டது என் கணவர்! அவர் வண்டி நின்று போய்விட்டது என்று சொன்னார். நானும் சகோதரன் ஐயப்பனும் காரில் சென்றோம். பாதி வழியில் எங்களுக்கும் பெட்ரோல் இல்லாமல் போய்விட்டது. எப்படியோ சமாளித்து மாதவரத்தில் அவர் நின்று கொண்டிருந்த இடத்திற்கு, இரவு 1 மணிக்கு சென்றோம். தீபாவளி வந்துவிட்டதே! மாதவரம் ரோடிலேயே ஒருவருக்கொருவர் தீபாவளி வாழ்த்துக்கள் தெரிவித்துக் கொண்டோம்!

வீடு திரும்பி இரண்டு மணி நேர ரெஸ்ட்டுக்குப் பிறகு ஆயில் பாத் அமர்க்களமாக நடந்தது.

பேட்டி: எஸ். ரஜத்

படம்: உத்ரா

# தலைக்குத் தலை தீபாவளி

# ராஜஸ்ரீ



இட்டத்தட்ட ஒரு மைல் சுற்றளவுடனும், பதினெட்டு அடி உயரமுள்ள சுவர்களுடனும், இடையிடையே வட்டமும் சதுரமுமான ஸ்தூபிகளுடனும், கொள்ளிடம் முகத்துவாரத்தில் மிகக் கம்பீரமாக வங்கக் கடலை நோக்கிக் கொண்டிருந்த தேவிக் கோட்டையை, கவர்னர் உத்தரவிட்ட அடுத்த நாளிரவே அடைந்த ராபர்ட் கிளைவ், அதன் பாதுகாப்பைப் புது கவர்னர் மிகவும் பலப்படுத்தியிருப்பதைக் கண்டான், கோட்டையின் படை மட்டுமின்றி, கோட்டைக்குச் சற்றுத் தூரத்திலிருந்த புதர்கள் மறைவிலும் சிப்பாய்கள் படுத்துக் காவலிருந்ததையும், கொள்ளிடத்தைத் தாண்டி தானும் விஜயகுமாரனும் அடிமைப் பெண்ணுடன் காலடி வைத்த மறு விநாடி சிப்பாய்களால் 'சாலன்ஜ்' செய்யப்பட்டதையும் பார்த்த கிளைவ், இந்த நிலையில் இந்தக் கோட்டையை யாரும் திடீரெனத் தாக்க முடியாதென்ற முடிவுக்கு வந்தான். கோட்டைக்குப் பக்கத்திலோடிய கொள்ளிடத்தின் கரையிலும் சிறு சிறு படகுகள் தளைகளில்

## 26 மன ஓட்டம்! நீராட்டம்

பிணிக்கப்பட்டிருந்ததையும், அவற்றில் ஒவ்வொன்றிலும் ஒரு துப்பாக்கி வீரனும் இருப்பதையும் கவனித்த கிளைவ், கவர்னர் உத்தரவு வரும் வரையில் தான் நிம்மதியாகப் படுத்து உறங்கலாமென்று தீர்மானித்தான்.

ஆனல் வீரனுக்குக் கடமை முன்னலிருக்கும்போது உறக்கம் எங்கிருந்து வரும்? ஆகவே கோட்டையை அடைந்து அங்குள்ள காப்டனல் ராஜோபசாரத்துடன் வரவேற்கப்பட்டு உணவருந்திய பின்னும் கிளைவுக்கு உறக்கம் பிடிக்காததால், "விஜயகுமாரா! சற்றுக் கோட்டைக்கு வெளியே சுற்றிப் பார்ப்போமா?" என்று கேட்டான்.

விஜயகுமாரன் இதழ்களில் புன்முறுவல் அரும்பிற்று பழைய நினைப்புகளால். "பார்க்கலாம்," என்ற அவன் பதிலிலும் லேசாக நகைப்பொலி இருந்தது.

அதன் காரணத்தை காப்டன் கிளைவ் உணர்ந்திருந்தாலும் உணராதது போலவே கேட்டான், வெளியே செல்லத் தனது கோட்டை எடுத்து அணிந்த வண்ணம், "எதற்காக நகைக்கிருய் விஜயகுமார்?" என்று.

"நகைக்கவில்லையே," என்ருன் விஜயகுமாரனும் வெளியே செல்ல எழுந்து.

"பகிரங்கமாக நகைக்கவில்லே," என்று ஒப்புக் கொண்டான் கிளைவ்.

"உள்ளே நகைப்பது உனக்குத் தெரிகிறது?"

"ஆம். பதிலின் ஒலியிலிருந்து."

இதற்கு உடனடியாகப் பதில் சொல்லவில்லே விஜயகுமாரன். கிளைவின் கூரிய அறிவையும் எதையும் அறியும் ஆற்றலையும் வியக்கவே செய்தான் சில விநாடிகள். பிறகு சொன்னுன், "ஆமாம் கிளைவ்! இதே கோட்டையில் முன்பு சந்தித்தோம் எதிரிகளாக...." என்று.

"இன்று வந்திருக்கிருேம் நண்பர்களாக," என்று சுட்டிக் காட்டினுன் கிளைவ்.

"அப்பொழுதும் நாம் நண்பர்கள்தான்."

"ஆனுல் எதிர்ப்படைகளில் இருந்தோம்."

"அதனுல் நட்பு எப்படிக் கெடும்?"

"கெடாது என்பதை அன்றே நிரூபித்தாய் நீ என் உயிரைக் காத்து."

காப்டனின் இந்தக் கடைசிச் சொற்களுக்கு பதில் சொல்லவில்லே விஜயகுமாரன். காப்டனுடன் வெளியே நடக்கவே செய்தான். ஜூன் மாதத்து சந்திரன் தேவிக் கோட்டையையும் அதன் மேற்குப் புறக் காடுகளேயும்

சாண்டில்யன்

தென்புறக் கொள்ளிடத்தையும் கண் கொள்ளாக் காட்சியாகச் செய்து கொண்டிருந்தது. தூரத்தேயிருந்த கடலலைகளை உள்ளே வாங்கிக் கொண்டு பின்னோக்கி வந்த கொள்ளிடச் சிற்றலைகள் ஆயிரமாயிரம் கண்ணாடிகளைப் போல் ஜொலித்தன. இத்தகைய சூழ்நிலையில் நடந்து சென்ற காப்டன் கிளைவின் மனமும் விஜயகுமாரன் மனமும் வெவ்வேறு நிலைகளில் இருந்தன.

கிளைவ் திருச்சிக்கு ஓடிக் கொண்டிருந்த பிரிட்டிஷ் படையின் கதியைப் பற்றியும் இந்தியாவில் பிரிட்டனின் எதிர்காலத்தைப் பற்றியும் சிந்தித்துக் கொண்டிருந்தான். "இப்பொழுதைய நிலைகொண்டு பார்த்தால் இங்கு பிரிட்டனின் அரசியல் வானம் கறுத்துத்தான் கிடக்கிறது. ஆனால் ஒரு சிறு காற்று, நமக்கு அனுகூலமான ஒரு சிறு சம்பவம், இந்த மேகத்தை விரட்டி விடும். அந்தக் காற்று, சம்பவம், எப்பொழுது வரும்?" என்று எண்ணிப் பார்த்தான் கிளைவ்.

விஜயகுமாரன் மனம் காப்டன் நினைவுகளுக்கு எதிர் திக்கில் ஓடிக் கொண்டிருந்தது. இன்பமான சிந்தனைகள் அவன் சித்தத்தில் எழுந்து உலாவிக் கொண்டிருந்தன. "அதோ அந்தப் புதருக்கருகில்தானே நானும் நந்தினியும் உட்கார்ந்திருந்தோம்! எத்தனை பேச்சுக்களைப் பேசியிருப்போம்! பேசாதபோது உள்ளங்கள் ஊமையாக இருந்ததில்லையே!" இப்படிப்பட்ட நினைவுகள் அவன் சித்தத்தில் எழுந்துலாவின. நந்தினியின் அழகிய உருவம் பக்கத்துக் காடுகளில் தெரிந்தது. கொள்ளிட அலைகளில் தெரிந்தது. திடீரென்று பக்கத்தில் நடப்பது போலும் தோன்றியது. அவள் பாதச் சிலம்பின் ஒலிகூட அந்தச் சமயத்தில் அவன் மனக் காதில் விழுந்தது. 'இப்பொழுது நந்தினி என்ன செய்து கொண்டிருப்பாள் தஞ்சை அரண்மனையில்?' என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டான். இத்தகைய எண்ணங்கள் மேலோங்கிவிடவே நடையும் சற்று நிதானப்பட, கிளைவ் முன்னால் தனியே சென்றுவிட்டதைக் கூட அவன் கவனிக்கவில்லை. நினைவுச் சுழலில் ஈடுபட்ட காரணத்தால் திடீரென நடையை நிறுத்தி ஒரு புதருக்கருகில் உட்கார்ந்து கொண்டு விழித்த வண்ணமே சொப்பன உலகில் சஞ்சரித்தான். அன்றும், நந்தினி அவன் பக்கத்தில் வந்து உட்கார்ந்து கொண்டாள். தன் மலர்க் கரத்தை அவன் கையுடன் பூட்டினாள். அந்த இன்பத்தால் அவன் தரையில் படுக்கவும் செய்தான். படுத்த இடம் தரையாகத் தெரியவில்லை. மலர் மடியில் படுத்துக் கிடப்பதாகவே தோன்றியது. தாயின் மடி எத்தனை இன்பமாயிருக்கிறது என்று நினைத்தான் அந்தத் தரையை நினைத்து. 'இதுவே நந்தினியின் மடியாயிருந்தால் எத்தனை சிறப்பாயிருக்கும்?' என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டான்.

நாழிகைகள் ஓடியது தெரியாமல் விண்ணை நோக்கி, வெண்ணிலவின் அழகை நோக்கி, இடையே சிந்தனையில் சுழன்ற எழில் நந்தினியை நோக்கிப் படுத்துக் கிடந்த விஜயகுமாரன் பக்கப் புதரில் ஏதோ சலசலப்பதைக் கேட்டுக் கண் விழித்து சுயநிலை வந்து திடீரென எழுந்து உட்கார்ந்தான். உட்கார்ந்தவன் திடீரென வெருளவும் செய்தான். புதர்களின் மறைவிலிருந்து வந்த அடிமைப் பெண் அவன் அருகில் வந்து மிக சொந்தமாக அமர்ந்து கொண்டாள். அவன் கையையும் பிடித்துத் தன் மடியில் வைத்துக் கொண்டு பிடிக்கலானாள்.

"விடு கையை," என்று சீறிய விஜயகுமாரன் தனது கையை இழுத்துக் கொண்டான். "யார் வரச் சொன்

முதல் வகுப்புப் பாட நூலில், உயிர்மெய் எழுத்துக்களில் 'ரோ' என்ற எழுத்தைக் கற்பிக்க 'துரோகம்' என்ற சொல்லை அச்சிட்டிருக்கிறார்கள்.

'ரோ'வுக்குரிய சொல்லுக்குப் பஞ்சமா என்ன? ரோஜாப்பூ, ஆராரோ, காரோட்டி—இப்படி எத்தனை இல்லை?





—சு. நீலமேகம்

னது உன்னை இங்கே?" என்று கடிந்தும் கொண்டான்.

"என் எஜமான்," என்றாள் அடிமைப் பெண், அவன் அதட்டலைச் சிறிதும் லட்சியம் செய்யாமல்.

"எதற்காக?" இம்முறை விஜயகுமாரன் குரலில் எரிச்சல் பன்மடங்கு அதிகமாயிற்று.

"உங்களுக்குத் துணையிருப்பதற்காக?"

"எனக்கு எதற்குத் துணை?"

"எனக்குத் தெரியாது."

"அவருக்குத் தெரியுமாக்கும்?"

"ஆம்."

"துணை என்றால் என்ன செய்யச் சொன்னார்?"

"உங்கள் கைகால்களைப் பிடிக்கச் சொன்னார்."

"அவ்வளவுதானே!"

"இல்லை."

"வேறென்ன?"

"நீங்கள் எந்த உபகாரத்தை விரும்பினாலும் செய்யச் சொன்னார்."

இதைக் கேட்ட விஜயகுமாரனுக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியாததால், "பெண்ணே!" என்று அனுதாபத்துடன் அழைத்தான்.

"ஏன்?" என்றாள் அவள்.

"என் விருப்பம் எதுவாயினும் நீ செய்ய வேண்டியதுதானே?"

"ஆமாம்."

"அப்படியானால் எழுந்து கோட்டைக்குப் போய்விடு. நான் தனியாயிருக்க விரும்புகிறேன்."

இதற்கு அந்த அடிமைப் பெண் தலையைப் பக்கவாட்டில் விடுவிடுவென அசைத்தாள். "அந்த ஒரு விஷயம் நடக்காது. உங்களைத் தனியாக மட்டும் விடக் கூடாதென்று எசமான் உத்தரவு," என்று திட்டமாக அறிவித்த அடிமைப் பெண் நன்றாகச் சப்பணம் கொட்டி உட்கார்ந்து விட்டாள் அவன் பக்கத்தில்.

இதனால் பெரிதும் சங்கடப்பட்ட விஜயகுமாரன், "கிழவன் எங்கே இப்பொழுது?" என்று வினவினான் ஆத்திரத்துடன்.

"கோட்டைக்குப் போய் விட்டார்."

"எப்பொழுது?"

"ஒரு மணி நேரத்துக்கு முன்பு."

"இப்பொழுது நேரமென்ன?"

"பன்னிரண்டு மணி."

இதை அவள் சொல்வதற்கும் கோட்டை மணி பன்னிரண்டு அடிப்பதற்கும் சரியாயிருந்தது.

அதைக் காதில் வாங்கிய விஜயகுமாரன், "நள்ளிரவு வரையிலா தங்கிவிட்டேன்!" என்று தன்னைத் தானே இரைந்து வினவிக் கொண்டு எழுந்திருந்தான் துரிதமாக. கோட்டைக்கும் நடந்தான் வேகத்துடன். அவன் வேகத்துக்குச் சற்றும் சளைக்காமல் அடிமைப் பெண்ணும் அவனு





## மறுத்த காரணம்

பிஸ்பேன் என்ற எழுத்தாளர் எழுத ஆரம்பித்து 50 வருடங்கள் பூர்த்தியானபோது பத்திரிகை முதலாளி அதைக் கொண்டாடும் வகையில், "ஆறு மாதம் முழுச் சம்பளத்துடன் ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள்," என்றார். பிஸ்பேன் மறுத்துவிட்டார். அவர் சொன்ன காரணம்: "ஒன்று நான் ஆறு மாதம் தொடர்ந்தாற் போல் எழுதாவிட்டால் பத்திரிகை சர்குலேஷன் விழுந்துவிடும். அல்லது விழாமல் இருந்துவிடும்."

---

டன் ஒட்டினாள். இப்படி அந்த இருவரும் ஜோடியாகக் கோட்டைக்குள் நுழைவதைக் கண்ட காவலர் ஒருவரையொருவர் பார்த்து லேசாகப் புன்னகை கோட்டினார்கள்.

அடுத்த இரண்டு நாட்களில் அந்தப் புன்னகையும் பின்பக்க ரகசியப் பேச்சுகளும் அதிகமாயின. அவற்றைக் கவனிக்காததுபோல் கவனிக்கவே செய்தான் விஜய குமாரன். அந்த அடிமைப் பெண்ணோ அவன் எங்கு சென்றாலும் அவனைத் தொடர்ந்து சென்றாள். இதைச் சகிக்க முடியாத விஜயகுமாரன் மூன்றாம் நாளிரவு கிளைவை மிக உக்ரத்துடன் அணுகி, "எதற்காக இவளை என்மீது ஏவி இருக்கிறாய்?" என்று வினவினான்.

"துணைக்கு," என்றான் கிளைவ், உள்ளே சிரித்துக் கொண்டாலும் முகத்தில் சிரிப்பைக் காட்டாமல்.

"எனக்கு எதற்குத் துணை? யார் என்னைத் தூக்கிக் கொண்டு போய்விடுவார்கள்?" என்று சீறி விழுந்தான் விஜயகுமாரன்.

கிளைவ் தனது முகத்தில் கவலையைக் காட்டினான். "விஜயகுமார்! யூ ஆர் எ ஸிக் ஃபெல்லோ நௌ," என்று கூறினான்.

"நானா? நோயாளியா?"

"எஸ். வென் ஐ டேக் யூ ஃபார் எ வாக் யூ ஸிட் டௌன்," என்றான் கிளைவ்.

"நோய் காரணமா அதற்கு?"

"எஸ்."

"என்ன நோய்?"

"யூ ஆர் லவ் ஸிக் (உனக்குக் காதல் நோய்)" என்று கூறிய கிளைவ், "விஜயகுமார், சுரக்காரனைக் கூட நான் நம்புவேன். காதல் வியாதிக்காரனை நம்ப முடியாது. திடீரென்று அவனுக்கு மூளை பிசகும். மறதி ஏற்படும். நாம் இப்பொழுதுள்ள நிலையில் இரண்டும் ஆபத்து. இந்தக் கோட்டையில் கூட நாம் பாதுகாப்பில் இல்லை. எந்த நேரம் நம்மை யார் தாக்குவார்களோ சொல்ல முடியாது. நாம் விழித்திருக்க வேண்டிய சமயம் இது. அதற்காகத்தான் உனக்குத் துணை அனுப்புகிறேன்," என்றான் கிளைவ்.

அடுத்த பல நாட்களுக்குக் கவர்னரிடமிருந்து எந்த உத்தரவும் வராதிருக்கவே அந்த அடிமைப் பெண்ணின் தொல்லை மிக அதிகமாயிற்று.

விஜயகுமாரன் கடைசியாக அவளை உதற ஒரு வழி கண்டுபிடித்தான். அதை நிறைவேற்ற ஒருநாள் காலை கொள்ளிடக் கரைக்குச் சென்று தன் உடைகளைக் களைந்தான். அவனைப் பின்பற்றி வந்த அடிமைப் பெண் அதை லட்சியம் செய்யாமல் அருகே நின்றாள். கடைசியாக ஒரு ராணுவ ட்ராயரை மட்டுமே அணிந்து நின்ற விஜயகுமாரன் சரேலென்று கொள்ளிட நீரில் குதித்து நீந்திச் சென்றான். அடிமைப் பெண் முழங்காலைக் கட்டிக் கொண்டு அவன் நீந்துவதைப் பார்த்துக் கொண்டு கரையில் உட்கார்ந்திருந்தாள். நீண்ட நேரம் நீச்சலடித்த அவன் கரையேற வந்தபோது தனது கையொன்றை நீட்டி அவன் கரையேறவும் உதவினாள். சொட்டச் சொட்ட நனைந்த தேகத்துடன் கரையில் நின்ற விஜயகுமாரன் திடீரென்று எதையோ நினைத்துக் கொண்டு சிரித்தான். அடிமைப் பெண்ணும் சிரித்தாள் சற்று பலமாக. ஆனால் விஜயகுமாரன் சிரிப்பு மட்டும் திடீரென உறைந்துவிட்டது அவன் உதடுகளில். சற்று எட்ட நின்று இந்த வேடிக்கையைக் கவனித்துக் கொண்டிருந்தாள் நந்தினி.

(தொடரும்)

சந்தர்ப்பம், உரிமை, அதிகாரம் மாநில அரசுக்கு இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். அதுதான் முறையும் ஆகும். உதாரணமாக, இந்தியா முழுவதும் ஒரே உணவு மண்டலமாகச் செயல்பட வேண்டும் என்று மத்திய அரசு அண்மையில் நிர்ணயித்தது.

இதன் காரணமாகத் தமிழ்நாடு பாதிக்கப்படுமோ என்ற சந்தேகம் மாநில அரசுக்கு இருந்தது. தமிழக அமைச்சர்கள் உடனேயே மத்திய மந்திரிகளை அணுகிப் பேச்சு வார்த்தைகள் நடத்தி, தமிழ்நாட்டுக்கு ஏற்ற வகையில் மத்திய ஆட்சியின் சட்டத்தைத் தங்கள் தேவைக்கு ஏற்ப மாற்றிக் கொள்ளும் ஏற்பாடுகளைச் செய்து விட்டுத் திரும்பினார்கள். மாநில அரசின் 'திறந்த மனப்பான்மை' கொள்கைக்கு இது ஒரு வெற்றியாகும். எல்லாச் சமயங்களிலும் மத்திய அரசு சொல்வதற்கு முழுவதற்கும் இணங்க முடியாத சந்தர்ப்பங்களும் இருக்கக்கூடும். அப்போது சுமுகமான பேச்சுவார்த்தைகள் மூலம் பிரசினைகளைத் தீர்த்துக் கொள்ள முடியும் என்பதற்கு இது ஒரு முன்னோடி.

மத்திய மாநில உறவு இப்போது தமிழகத்தைப் பொறுத்தவரையில் நன்றாகவே அமைந்திருக்கிறது. எந்தவிதமான பிடிவாதமான கொள்கையையும் முன்கூட்டியே அறிவித்துக் கொள்ளாமல் இருப்பதுதான் காரணம்.

இதையொட்டி எம். ஜி. ஆர் மந்திரி சபையைப் பாராட்ட வேண்டிய சில நிகழ்ச்சிகளும் நடைபெற்றிருக்கின்றன என்பதைக் குறிப்பிட விரும்புகிறேன்.

கிருஷ்ணா நதி நீரைச் சென்னைக்குத் தருவித்துக் கொள்ளக் கூடிய திட்டத்தை வெற்றிகரமாக மத்திய அரசோடு பேச்சுவார்த்தைகள் நடத்தி அதை நிறைவேற்றி வைக்கக்கூடிய காரியத்தை எம். ஜி. ஆர் அவர்கள் செய்திருக்கிறார்கள். கிருஷ்ணா நதி நீர் வெகு விரைவிலேயே பூண்டிக்கு வந்து சேரும்போது. மாற்றுக் கட்சிக்காரர்களும் இந்தத் திட்டம் வெகு விரைவினில் பூர்த்தியாக ஒத்துழைப்பார்கள் என்ற நம்பிக்கை எனக்கு ஏற்படுகிறது. பூண்டியோடு நின்றுவிடாமல் இன்னமும் தெற்கே பல நதிகளில் கிருஷ்ணா நீர் பாய்ந்தோடி நம்முடைய விவசாயத்திற்குப் பயன் தரும் காரியங்களை எம். ஜி. ஆர் இதே உற்சாகத்தோடு ஏற்பாடு செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். ஏனெனில், இப்போதே 155 கோடி ரூபாய் செலவைத் தமிழகம் இதற்காக ஏற்றுக் கொண்டிருக்கிறது. பூண்டியோடு நின்று விடாமல், மேட்டூர் அணைக்கும் அதற்கும் அப்பால் உள்ள தென்னக மாவட்டங்களுக்கும் நீர் வசதி செய்து கொடுத்தால் தமிழகத்தின் விவசாய உற்பத்தி பல மடங்கி பெருகும். தமிழக மக்கள் அண்டை மாநிலங்களுக்கு அதிக அளவுக்கு உணவு தானியங்கள் கொடுத்து, அவர்களிடமிருந்து நீர்வள வசதியைப் பெற்று 'எல்லோரும் இன்புற்றிருக்கும்' நிலையை அடையலாம். தண்ணீர்தான் நம்முடைய முக்கியமான முதல் தேவை என்று எம். ஜி. ஆர் உணர்ந்திருக்கிறார். மகிழ்ச்சி.

முதலமைச்சருடைய வேண்டுகோளை ஏற்று எல்லாத் தொழிலாளர்களும் அவரவர் வேலைக்குச் செல்லவும், தொழில் உற்பத்தி மேன்மேலும் பெருகவும், ஆலைகள் நன்றாக இயங்கவும் எம். ஜி. ஆர் தன் சொந்தச் செல்வாக்கைப் பயன்படுத்தி நடைமுறைக்குக் கொண்டுவர வேண்டும். அது அவர் மேற்கொள்ள வேண்டிய முதல் கடமை ஆகும்.

எம். ஜி. ஆர் ஆட்சி நல்ல முறையில் செயல்படத்தக்க யோசனைகளையும், மாற்றுக் கட்சியினர் அதாவது எதிர்க்கட்சி அரசியல் தலைவர்கள் தந்து உதவக்கூடிய ஒரு சூழ்நிலையை எம். ஜி. ஆர் உண்டுபண்ண வேண்டும்.

திட்டங்களைத் தீட்டுவதற்குக்கூட மற்ற அரசியல் கட்சித் தலைவர்களின் ஆலோசனையை நாடலாம். பிற்பாடு எதிர்க்கட்சித் தலைவர்கள் எதிலும் குறை சொல்லமுடியாத நிலையை ஏற்படுத்தலாம் அல்லவா?

பேட்டி: பால்யூ

---

''இந்தாடா, நான் உனக்குக் கொடுக்க வேண்டிய நாற்பது ரூபாய்.''

''டேய்...அதாண்டா இன்னிக்கு வெய்யில் அடிக்குது.''

—என். பாலகிருஷ்ணன்,



# அரசகுமாரி! நீங்கள் தீர்க்கதரிசி!

27.

சாண்டில்யன்



அசந்தர்ப்பமான அந்த நிலையால் விஜயகுமாரவின் நகைப்பு உறைந்ததே தவிர, கொள்ளிடத்தின் நகைப்பு உறையவில்லை. காலைக் கதிரவனின் கிரண வீச்சினால் பளபளத்த கொள்ளிடத்தின் சிற்றலைகள் அவனைப் பார்த்துப் பலமாகவே நகைத்தன. நந்தினி நகைக்கவுமில்லை, இருந்த இடத்திலிருந்து நகரவுமில்லை. இகழ்ச்சி மிகுந்த பார்வையொன்றை மட்டும் அவன் மீது வீசினாள். போதாக் குறைக்கு இந்தச் சமயத்தில் அடிமைப் பெண் தன் கையிலிருந்த துண்டை எடுத்து, ''எசமான்! உடம்பைத் துடைத்து விடட்டுமா?'' என்று கேட்டுக் கொண்டு அவனை நெருங்கினாள்.

விஜயகுமாரன், ''சீ! பிரும்மஹத்தி! துடைக்கவும் வேண்டாம், ஒரு மண்ணாங்கட்டியும் வேண்டாம். கொடு அதை இங்கே,'' என்று எரிந்து விழுந்து துண்டைப் பிடுங்கிக் கொண்டு, ''போ கோட்டைக்கு.'' என்று கூறிக் கோட்டையையும் சுட்டிக் காட்டினான்.

''ஏன், அவள் துடைத்து விடுவாளா?'' என்று வினவினாள் அடிமைப் பெண், எட்ட நின்ற நந்தினியைக் காட்டி.

விஜயகுமாரன் நிலை அந்த அடிமைப் பெண் பேச்சினால் மிகப் பரிதாபமான கட்டத்தை அடையவே, அவன் சொன்னான் கடுமையாக, ''அட சனியனே! யார் எதைச் செய்தால் உனக்கென்ன? நீ போய் விடு.'' என்று.

அடிமைப் பெண் ஒரு விநாடி அவனையும் நோக்கி நந்தினியையும் நோக்கினாள். ''சரி, சீக்கிரம் நீங்கள் கோட்டைக்கு வாருங்கள். இங்கு அதிக நேரம் கடத்த வேண்டாம்,'' என்று சொல்லிவிட்டு மெள்ளக் கோட்டையை நோக்கிச் சென்றாள்.

விஜயகுமாரனும் மடமடவென்று தலை துவட்டி அந்தத் துண்டைத் தோளில் போட்டுக் கொண்டு தரையிலிருந்த தன் உடைகளைக் கையில் எடுத்துக் கொண்டு நந்தினியை அணுகினான். ''நீ எப்பொழுது வந்தாய் நந்தினி?'' என்று வினவவும் செய்தான்.

நந்தினியின் இதழ்களில் மட்டுமின்றி அவள் கண்களிலும் இகழ்ச்சிக் குறி நன்றாகப் படர்ந்திருந்தது. ''எப்பொழுது வந்தாலும் இங்கு உங்கள் புனல் விளையாட்டுக்கு இடைஞ்சலாக வந்தேன்,'' என்று பதில் சொன்னாள் நந்தினி, குரலிலும் இகழ்ச்சி தோன்ற.

விஜயகுமாரன் சித்தத்தில் சினம் லேசாகத் துளிர்த்தது. ''நீ தவறாகப் புரிந்து கொண்டிருக்கிறாய்,''



என்ற அவன் விளக்கத்திலும் சினம் விரவிக் கிடந்தது.

''எதை?'' அலட்சியமாகக் கேட்டாள் நந்தினி.

''புனல் விளையாட்டுக்காக நான் வரவில்லை இங்கே. நீந்த வந்தேன். அந்தப் பிசாசு என்னைத் தொடர்ந்து வந்தது.''

'''பிசாசாயிருந்தாலும் அழகான பிசாசுதான். உங்களிடம் பற்றுள்ள பிசாசுதான்.''

''நந்தினி!''

''என்ன வீரரே?''

''நீ தப்புக் கணக்குப் போடுகிறாய். அவளுக்கும் எனக்கும் எந்தவித சம்பந்தமுமில்லை.''

''அப்படியா.''

''ஆம். அவள் என்னைத் தொடர்ந்து நீச்சலை வேடிக்கை பார்க்க வந்தால் நான் என்ன செய்ய முடியும்?''

நந்தினி இகழ்ச்சி நகை கோட்டினாள். ''முடியாது. முடியாது.'' என்றாள் லேசாக நகைத்து.

''என்ன முடியாது?'' ஏதும் புரியாமல் கேட்டான் விஜயகுமாரன்.

''அவளைப் பிரிய முடியாது. அவள் வேடிக்கை பார்ப்பதைத் தவிர்க்க முடியாது,'' என்ற நந்தினி, ''அதுவும்....'' என்று ஒரு சொல்லைத் துவங்கி வாசகத்தை முடிக்காமல் விட்டாள்.

''அதுவும்?'' சீற்றத்துடன் எழுந்தது விஜயகுமாரன் கேள்வி.

''உங்களைக் கைலாகு கொடுத்துக் கரைக்குத் தூக்கியதைத் தவிர்க்க முடியாது.'' என்று கூறிய நந்தினி சரேலென்று திரும்பி நடந்தாள் கோட்டையை நோக்கி.

இரண்டே எட்டில் அவளை

ராஜ பேரிகை

அனுகி அவள் இரண்டு தோள்களையும் பிடித்துத் தலையை நோக்கித் திருப்பிய விஜயகுமாரன், அவள் விழிகளைத் தைரியமாகவே சந்தித்தான். "சத்தியமாகச் சொல்கிறேன் நந்தினி. அவனுக்கும் எனக்கும் எந்தவித சம்பந்தமுமில்லை. எல்லாம் அந்தக் கிளாவின் வேலை. கோட்டைக்கு வா, அவனையே சொல்ல வைக்கிறேன்," என்று கெஞ்சினான் நந்தினியை நோக்கி.

இதைக் கேட்ட நந்தினியின் விழிகள் நன்றாகவே நகைத்தன. "கிளாவ் தான் என்னை இங்கே அனுப்பினார்," என்று சொன்னாள் நந்தினி.

"அவன் வேலைதானா இது? அடிமைப் பெண்ணை என்மேல் ஏவிவிட்டு உன்னையும் இங்கு அனுப்பி என்னை வேடிக்கையா பார்க்கிறான் கிளாவ்?" என்று சீறிய விஜயகுமாரன், நந்தினியைக் கையைப் பிடித்துச் சரசரவென்று இழுத்துக் கொண்டு கோட்டையை நோக்கி நடந்தான்.

"விடுங்கள் கையை. முதலில் உடைகளை அணிந்து கொள்ளுங்கள். யாராவது உங்களுடன் இந்த நிலையில் என்னைப் பார்த்தால் ஏதாவது நினைப்பார்கள்," என்ற நந்தினி கையை விடுவித்துக் கொண்டாள்.

விஜயகுமாரன் பக்கத்திலிருந்த புதருக்குச் சென்று அதன் மறைவில் தனது ஆடைகளை அணிந்து கொண்டு வெளியே வர இருவரும் கோட்டையை நோக்கி நடந்தார்கள் மௌனமாக. கோட்டையின் முன் வாசலிலேயே நின்றிருந்த கிளாவ் அவர்களிருவரையும் பார்த்துப் புன்னகை புரிந்தான். "காதல் பறவைகள் வருகின்றன," என்று கூறவும் செய்தான் விஷமமாக.

நந்தினி இதைக் கேட்டுச் சிறிதும் வெட்கப்பட்டாளில்லை. "காதல் ஜோடிகளைச் சேர்ப்பதில் காப்டனுக்குத் திறமை அதிகம் என்பதை இன்றுதான் அறிந்தேன்," என்றாள் நந்தினி இகழ்ச்சி ததும்பிய குரலில்.

"என்ன சொல்கிறீர்கள் அரசகுமாரி?" என்று வினவினான் கிளாவ் ஏதுமறியாதவன் போல்.

"முதலில் அந்த அழகியையும் இவரையும் அனுப்பினீர்கள் கொள்ளிட நீரில் விளையாட." நந்தினி பேச்சை முடிக்கவில்லை, அவள் பார்வை முடித்தது.

"யாரவள்?" கிளாவ் கேட்டான் உணர்ச்சியற்ற குரலில்.

"யாரோ அடிமைப் பெண்ணாம்."

"அவளா? இன்னும் விஜயகுமாரனை விடவில்லையா?"

"இல்லை. அவளையும் அனுப்பி என்னையும் அனுப்பினீர்கள்."

"நானாக அனுப்பவில்லையே அரசகுமாரி. நீங்கள்தான் கேட்டீர்கள் லெப்டினண்ட் எங்கேயென்று. போன இடத்தைச் சொன்னேன். நீங்கள் உடனடியாக அங்கு பறப்பீர்களென்று எனக்குத் தெரியுமா?" என்றான் கிளாவ். அரசகுமாரி சட்டென்று திரும்பி, தான் தங்கியிருந்த அறை நோக்கிச் சென்றாள்.

கிளாவை நோக்கி விஷப் பார்வையை வீசிய விஜயகுமாரன், அரசகுமாரியைத் தொடர்ந்து சென்றான். அப்படி விரைந்த இருவரையும் நோக்கிப் புன்முறுவல் கொண்ட கிளாவ், "காதல் என்பது பைத்தியம் தான். நல்லவேளை, அது என்னைப் பிடிக்கவில்லை," என்று தனக்குள் சொல்லி நகைத்துக் கொண்டான்.

பிறகு பக்கத்திலிருந்த ஒரு சிப்பாயை அழைத்து, "அவர்களிருவரும் சிற்றுண்டியருந்தியதும் என் அறைக்கு அழைத்து வா," என்று



"சார், பத்தாவது மாடியிலிருந்து என் டிபன் பொட்டலம் விழுந்துட்டுது! உடனே போய் எடுக்கணும்!"

"டிபன்தானே? போனால் போகட்டுமேப்பா!"

"அதில்லே சார்! என் ஒய்..ப் வந்திட்டிருக்கிறாள். அதை நான் வேணும்னு எறிஞ்சிட்டேன்னு நினைப்பாள்!"



பச்சைப் புல்லை நடுவில் வைத்தால் பக்கென்று பற்றிக்கொண்டுவிடும். சிவப்புக் கல் மூக்குத்தி படத்தில் ரோஜாரமணி ஸ்ரீதேவி

உத்தரவிட்டு விட்டுக் கோட்டையின் மத்தியிலிருந்த தனது அறையை நாடிச் சென்றான் காப்டன் கிளைவ்.

சுமார் ஒரு மணி நேரத்திற்குப் பின்பு கிளைவின் அறையை விஜயகுமாரனும் நந்தினியும் அடைந்த போது, கிளைவ் சுவரில் தீட்டப்பட்டிருந்த கர்நாடக நாட்டுப் படத்தைப் பார்த்துக் கொண்டு நின்றிருந்தான். அவன் தீவிர ஆலோசனையிலிருந்ததால் தாங்கள் வந்ததை அவன் அடியோடு கவனிக்கவில்லையென்பதை இருவருமே உணர்ந்தார்கள். அந்தப் படத்திலிருந்து அவர்களை நோக்கித் திரும்பிய கிளைவ்; சற்று முன்பு விளையாட்டுப் பேச்சு பேசிய கிளைவ் அல்லவென்பதையும், காப்டன் கிளைவ் என்பதையும் இருவருமே புரிந்து கொண்டனர். அவன் பேச்சின் தோரணையும் ராணுவ முறையில் கட்டுத்திட்டமாக இருந்தது.

கிளைவின் சிறிய விழிகள் அவர்களிருவரையும் ஒரு வினாடிதான் கவனித்தன. அவன் இதழ்களிலிருந்து சொற்கள் பதுமையின் வாயிலிருந்து உதிருவன போல் வறட்சியுடன் உதிர்ந்தன. "உங்கள் தந்தை சொல்லியனுப்பிய செய்தியைச் சொல்லுங்கள்," என்று கேட்டான் நந்தினியை நோக்கி.

நந்தினியின் விழிகளில் வியப்பு நிரம்பி நின்றது. "தந்தையின் செய்தியா!" அவள் சொற்களிலும் வியப்பின் சாயை இருந்தது.

"ஆம். மகாராஜா பிரதாப் சிங் என்ன சொல்லியனுப்பியிருக்கிறார்?" என்று வினவினான் கிளைவ்.

"மகாராஜா என்னைத் தூதனுப்பியதாக யார் சொன்னது?" என்று கேட்டாள் நந்தினி மிகக் கம்பீரமாக.

"பிரிட்டிஷ் படையிருக்கும் இந்தத் தவிக் கோட்டையை வேடிக்கை பார்க்க உங்களை மகாராஜா அனுப்பியிருக்க மாட்டார்," என்றான் கிளைவ் தீர்மானமாக.

"நானாக வந்தால் என்னை யார் தடை செய்ய முடியும்?"

"எனது சோல்ஜர்கள். மகாராஜா பிரதாப் சிங், அல்லது பிரிட்டிஷ் கவர்னர், இந்த இருவரிடமிருந்து வருபவர்களை மட்டுமே இந்தக் கரையில்

காலடி எடுத்து வைக்க உத்தரவிட்டிருக்கிறேன்,'' என்றான் கிளைவ்.

''அப்படி வந்தாலும் செய்தி ஏன் கொண்டு வரவேண்டும்?''

''இப்பொழுதுள்ள போர் நிலைமையால்,'' என்ற கிளைவ், ''அரசகுமாரி! சொல்லுங்கள் செய்தியை,'' என்று ஆணையிட்டான்.

நந்தினி சிறிது நேரம் பதில் ஏதும் பேசவில்லை. பிறகு தனது மடியிலிருந்து முத்திரையிட்ட கடிதம் ஒன்றை எடுத்துக் கிளைவிடம் நீட்டி, ''இது திருச்சியிலுள்ள நவாப் முகம்மது அலிக்கு எழுதப்பட்டிருக்கிறது. இதை அவரிடம் சேர்த்துவிட மகாராஜா உத்தரவு,'' என்று கூறினாள்.

கடிதத்தை வாங்கிய கிளைவ் அதன் விலாசத்தைப் படித்தான் இரு முறை. பிறகு அதைத் தனது பையில் வைத்துக் கொண்டான். அடுத்தபடி கேட்டான், ''அரசகுமாரி, நான் திருச்சிக்குப் போகாவிட்டால்?'' என்று.

''போவீர்கள் என்று மகாராஜா திட்டமாக நம்புகிறார்.''

''நம்புவதற்குக் காரணம்?''

''இப்பொழுதுள்ள போர் நிலைமை.'' நந்தினி, கிளைவ் முன்பு சொன்ன சொற்களைத் திருப்பினாள்.

கிளைவ் கூறினான், ''அரசகுமாரி! மகாராஜாவுக்கு மட்டும் குடும்ப எதிரிகள் இல்லாவிட்டால் இன்று அவர் தஞ்சையை மட்டுமல்ல, இந்தக் கர்நாடகத்தையே ஆளத் தகுதியுள்ளவர்,'' என்று.

அந்தப் பாராட்டுதலைத் தலை தாழ்த்தி ஏற்றுக் கொண்டாள் நந்தினி. கிளைவ் மேலும் சொன்னான், ''அரசகுமாரி! பெரும் இக்கட்டான நிலையில் இன்று தஞ்சை இருக்கிறது. நாம் ஒருவரையொருவர் கைவிடாதவரை சந்தாசாகிபை முறியடிக்கலாம். இதை உங்கள் தந்தையிடம் கூறுங்கள். இச்கடிதத்தை நான் திருச்சிக்குப் போகும்போது முகம்மது அலியிடம் கொடுக்கிறேன்,'' என்று பையிலிருந்த கடிதத்தையும் தட்டிக் காட்டினான்.

''அந்தக் கடிதம் இன்னும் பதினைந்து நாட்களுக்குள் நவாபின் கைகளில் இருக்க வேண்டும். இல்லையேல் நிலைமை எப்படி மாறும் என்று சொல்லமுடியாது,'' என்றாள் நந்தினி.

காப்டன் கிளைவ் உடனடியாகப் பதில் சொல்லவில்லை. ''கவர்னர் உத்தரவிட்டால்தான் நான் திருச்சி போகமுடியும்,'' என்று கூறினான் சிறிது சிந்தித்துவிட்டு.

''உங்கள் கவர்னர் அறிவாளியாயிருந்தால் உங்களை உடனடியாகத் திருச்சிக்கு அனுப்புவார்.''

கிளைவ் தலையசைத்தான். ''இப்பொழுது வந்திருக்கும் கவர்னர் எதிலும் தாமதம் காட்டாதவர். ஆனால் எப்பொழுது உத்தரவு வருமோ தெரியாது,'' என்றான்.

அந்தச் சமயத்தில் உள்ளே நுழைந்த ஆர்டர்லி, ''காப்டன்! கவர்னரிடமிருந்து தூதன் வந்திருக்கிறான்,'' என்று அறிவித்தான்.

''வரச் சொல்.''

அடுத்த வினாடி உள்ளே நுழைந்த ஒரு சோல்ஜர் காப்டனிடம் ஒரு கவரை நீட்டினான், கவரைப் பிரித்து உள்ளிருந்த கடிதத்தைப் படித்த கிளைவின் முகத்தில் சந்துஷ்டி, கவலை இருவித உணர்ச்சிகள் ஆட்கொண்டன. கையில் பிடித்திருந்த கவர்னரின் கடிதத்துடன் திரும்பி சுவரிலிருந்த படத்தை நோக்கினான் கிளைவ். பிறகு, ''அபாயம்! மிகுந்த அபாயம்!'' என்று சற்று இரைந்தே சொன்னான். கடைசியில் அரசகுமாரியை நோக்கி, ''நீங்கள் தீர்க்கதரிசி,'' என்றும் பாராட்டினான்.

(தொடரும்)

## சரித்திரம் சொல்கிறது

**உங்களுக்கு ஒரு காரியம் செய்யப் பிடிக்காது என்று வைத்துக் கொள்வோம். அதைச் செய்ய வைப்பான். ஆர்வத்தோடு செய்ய வைப்பான். அவனே தலைவன்.**

**—ட்ருமன் (முன்னாள் அமெரிக்க ஜனாதிபதி)**

# உயிருடன் போய்ச் சேர்ந்தால்...

1-12.77
ராஜபேரிகை

## 28, ஜூலை, 1751

கவர்னரின் கடிதத்தைப் படித்து சுவரிலிருந்த கர்நாடக தேசப் படத்தையும் பார்த்து 'அபாயம் அபாயம்' என்று கிளைவ் கூறியதன்றி, அரசகுமாரியை நோக்கி, 'நீங்கள் தீர்க்கதரிசி' என்று பாராட்டியதால் கவர்னர் கடிதத்தில் முக்கியமான விஷயம் ஏதோ அடங்கியிருக்கிறதென்பதை விஜயகுமாரன் நந்தினி இருவரும் புரிந்து கொண்டாலும், விளக்கம் காப்டன் வாயிலிருந்தே வரட்டுமென்று இருவரும் அவனையே நோக்கிக் கொண்டிருந்தார்கள். கிளைவ் நீண்ட நேரம் தீர்க்க சிந்தனையிலிருந்தான். பிறகு கையிலிருந்த கவர்னரின் கடிதத்தை விஜயகுமாரனிடம் நீட்டி, "இதைப் படி. அரச குமாரிக்கும் காட்டு," என்று கூறினான்.

விஜயகுமாரன் கடிதத்தைப் பிரித்து அரசகுமாரிக்கும் காட்டித் தானும் படித்தான். தலையோடு தலையிழுக்கக் கவர்னர் கடிதத்தைப் படித்த இருவரும் மீண்டும் கிளைவை நோக்கிய போது இருவர் கண்களிலும் பிரமிப்பின் சாயை இருந்தாலும் விஜயகுமாரன் மட்டுமே சொன்னான். "கிளைவ்! நீ சொன்னது சரி. அரசகுமாரி தீர்க்கதரிசிதான்," என்று.

"ஆம்! அரசகுமாரி என்னைப் பதினைந்து நாட்களுக்குள் முகம்மது அலியிடம் கடிதத்தைச் சேர்க்கச் சொன்னார்கள். கவர்னரும் உடனடியாகத் திருச்சிக்குச் செல்ல உத்தரவிடுகிறார். கவர்னருக்கும் அரசகுமாரிக்கும் நிரம்ப ஒற்றுமையிருக்கிறது," என்றான் கிளைவ்.

"கடிதம் கொடுத்திருப்பது நானல்ல. மகாராஜா பிரதாப் சிம்மர்," என்று நினைவூட்டினாள் நந்தினி.

கிளைவ் அதை ஆமோதிப்பதற்கு அறிகுறியாக லேசாகத் தலையை ஆட்டினாலும், "கடிதத்தில் கண்ட விஷயம் மிக முக்கியமானதாயிருக்க வேண்டும்," என்றான் நந்தினியை நோக்கி. மேலும் சொன்னான், "இல்லாவிட்டால் கடிதத்தை இங்கு கொண்டுவர சொந்தப் பெண்ணை அனுப்பியிருக்க மாட்டார் மகாராஜா," என்று.

விஜயகுமாரன், "ஆம் ஆம்," என்றான்.

"என்ன ஆம் ஆம்?" என்று சினத்துடன் கேட்டாள் நந்தினி.

"அரசாங்க விஷயமான முக்கியமான முடிவுகளை உன்னிடம் தானே விடுகிறார் மகாராஜா?" என்று வினவினான் விஜயகுமாரன்.

சாண்டில்யன்

"யார் சொன்னது? டபீர் பண்டிதரில்லையா? மானுஜி அப்பா இல்லையா?" என்று கேட்டாள் நந்தினி.

"அவர்களும் இருக்கிறார்கள், இன்னும் பல பேரும் இருக்கிறார்கள். ஆனால் நான் பிரிட்டிஷார் சார்பாகத் தூது வந்தபோது முடிவெடுக்க உன் அறைக்குத்தானே மகாராஜா என்னை அழைத்து வந்தார்கள்?" என்று கேட்டான் விஜயகுமாரன்.

அந்தத் தூதின்போது நடந்த சம்பவங்கள் நந்தினியின் நினைவுக்கு வரவே அவள் நாணத்தால் தலை குனிந்தாள். அந்த அசந்தர்ப்ப நிலையிலிருந்து அவளை விடுவிக்க கிளைவ் இடைபுகுந்து, "நடந்த விஷயங்களைப்பற்றி இப்பொழுது பேச அவகாசமில்லை. நடக்க வேண்டிய விஷயங்கள், எடுக்க வேண்டிய முடிவுகள் அபாயமானவை. அவற்றை கவனிப்போம்," என்று கூறி "விஜயகுமார்! கவர்னர் நம்மை உடனடியாகத் திருச்சி செல்ல உத்தரவிடுகிறார். அதுவும் அங்கிருக்கும் முகமது அலியின் படைகளுக்கும் நமது படைகளுக்கும் உணவு எடுத்துச் செல்லப் பணிக்கிறார். ஒரு பெரும் படைக்கு, திருச்சியின் முற்றுகையில் கோட்டைக்குள் சிறைப் பட்டுக் கிடக்கும் ஒரு படைக்கு, உணவு எடுத்துச் செல்வதென்றால் குறைந்த பட்சம் பதினைந்து பொதி வண்டிகளாவது வேண்டும். வழி நெடுக எதிரி இருக்கிறான். சந்தா சாகேபும் பிரெஞ்சுக்காரரும் திருச்சியை வளைத்து நிற்கிறார்கள். அந்தத் தடையைப் பிளந்து நாம் உட்செல்ல வேண்டும். ஆகவே உணவுப் பொதி வண்டி காக்க ஐம்பது சோல்ஜர்களாவது வேண்டும்," என்றும் விளக்கினான்.

அத்தகைய உணவுப் பொதி வண்டிக் கூட்டத்தைக் கொண்டுபோய் திருச்சியில் சேர்ப்பதிலுள்ள கஷ்டத்தைத் திட்டமாகத் தெரிந்து கொண்ட விஜயகுமாரன், "இத்தனை கூட்டத்தை எதிரி கண்ணிலிருந்து மறைக்க ஒரே வழிதானிருக்கிறது," என்றான்.



"என்ன வழி?" என்று ஆவலுடன் கேட்டாள் நந்தினி.

"எதிரி சோல்ஜர்களையும் சிப்பாய்களையும் குருடர்களாக அடிக்க வேண்டும்," என்றான் விஜயகுமாரன் அலுப்புடன்.

விஜயகுமாரன் அலுப்பின் காரணத்தை கிளைவ் உணர்ந்திருந்தானாகையால் அதற்குப் பதில் சொல்லவில்லை அவன். ஏதோ யோசித்தான் பல விநாடிகள். கடைசியாகச் சொன்னான் "விஜயகுமார்! அரசகுமாரியின் உதவி கொண்டு கொள்ளிடத்துக்கு அக்கரையிலிருக்கும் கிராமங்களில் பொதி வண்டிகளைத் தயார் செய். நான் ஸெய்ண்ட் டேவிட் கோட்டைக்குச் சென்று

கவர்னருடன் பேசிவிட்டு தேவனும் பட்டினத்தில் உணவுப் பொருள்களைத் திரட்டி வருகிறேன். அப்புறம் அதைக் கொண்டு செல்லும் வழியைப் பற்றி யோசிப்போம்,'' என்று கூறிவிட்டு அவர்கள் இருவரும் போகலாம் என்று கையாலும் சைகை செய்தான்.

அவர்கள் சென்ற இரண்டு மணி நேரத்திற்தெல்லாம் இரண்டு சோல்ஜர்களுடன் கிளைவ் செய்ண்ட் டேவிட் கோட்டையை நோக்கிப் பயணமானன். அவன் புரவியைத் தட்டி விடு முன்பாக விஜயகுமாரனை நோக்கிச் சீக்கிரம் பொதி வண்டிகளை ஏற்பாடு செய்யுமாறு கூறினன். அத்துடன் புரவியிலிருந்தபடியே குனிந்து, ''அந்த அடிமைப் பெண் மீது ஒரு கண் வைத்திரு, அவளை எக்காரணத்தை முன்னிட்டும் தப்பவிடாதே,'' என்று எச்சரிக்கவும் செய்தான்.

''ஏன்? அவள்...'' என்று ஆரம்பித்த விஜயகுமாரனைக் கண்ணைக் காட்டியே அடக்கி, ''காரணம் கேட்காதே. எந்த நிமிஷத்திலும் அவள் தப்பப் பார்க்கலாம்'' என்று சொல்லிவிட்டுக் குதிரையைத் தட்டி நடக்கவிட்டுச் சற்று தூரம் சென்றதும் பறக்கவிட்டான்.

கிளைவின் புரவி கண்ணுக்கு மறைந்ததும் விஜயகுமாரன் பக்கத்தில் நின்ற நந்தினி, தான் அரசகுமாரியாயிருந்தாலும், வந்ததும் தூதுக்காகத் தான் என்றாலும், பெண்தான் என்பதைக் காட்டிக் கொண்டாள். ''உங்களிடம் காதில் ரகசியமாக அடிமைப் பெண்ணைப் பற்றிச் சொன்னரே, அது என்ன?'' என்று வினவினள் சந்தேகத்துடன் விஜயகுமாரனை நோக்கி.

''கிளைவ் ரகசியமாகச் சொன்னது உன் காதில் விழுந்துவிட்டதா?'' என்று கேட்டான் விஜயகுமாரன் நகைத்து.

''ஆம். எனக்குப் பாம்புச் செவி,'' என்ருள் அரசகுமாரி சினம் உதயமான விழிகளால் அவனை நோக்கி.

''அப்படியானல் நீ பாம்பா?''

''ஆம்.''

''கடிப்பாய் போலிருக்கிறது?''

''அதற்கு நான் தேவையில்லை.''



''சார், உங்க தோட்டத்துப் பக்கம் கிணறு வெட்டனும்னீங்களே! வேலைக்கு வரலாமா?''

''ஏன்?''

''நீங்கள் கண்ணை வைக்க வேண்டிய வேவுகாரி இருக்கிருள்.''

இதைக் கேட்ட விஜயகுமாரன் புன்முறுவல் கொண்டான். ''கிளைவ் சொன்னது முழுதுமே உன் காதில் விழுந்திருக்கிறது?'' என்றும் கூறினன் முறுவலின் ஊடே.

''விழாமல் எப்படியிருக்கும்? உங்கள் காதருகில் ரகசியம் பேசுவது போல் காப்டன் குனிந்தாரே தவிர விஷயத்தை என் காதில் விழும்படியாகத்தானே சொன்னர்.'' என்ற அரசகுமாரி, ''சரி சரி. நீங்கள் போய் அடிமைப் பெண்மீது கண்ணை வையுங்கள்,'' என்று கூறிவிட்டு வேகமாகக் கொள்ளிடத்தை நோக்கி நடந்தாள்.

விஜயகுமாரன் அவள் சென்ற வேகத்தைக் கவனித்தான். ஒரு விநாடி கோட்டையை நெருங்கினன். கோட்டைத் தளத்தில் அந்த அடிமைப்பெண் நின்றிருந்தாள். அவள் கிளைவ் சொன்ன ரகசியத்தையும் மீறி தனக்கும் நந்தினிக்கும் நடந்த விவாதத்தையும் கவனித்திருக்க வேண்டுமென்ற முடிவுக்கு வந்த விஜயகுமாரன் ஒரு சிப்பாயை அழைத்து அந்தப் பெண்ணைக் கண்காணிக்கும்படி உத்தரவிட்டு, நந்தினி சென்ற வழியைப் பின்பற்றிச் சென்ருன்.

அவனை விட்டு வெகு வேகமாகச் சென்ற நந்தினி கொள்ளிடக் கரைக்குச் சற்று முன்பிருந்த ஒரு பெரிய மரத்தின்மீது சாய்ந்து கொண்டு கொள்ளிடத்தை நோக்கினள். விஜயகுமாரனும் வந்து அவள் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு, ''நந்தினி!'' என்று அழைத்து அவள் இடையில் தன் இடது கையை செலுத்தினன்,

அந்த சாகசத்துக்கு அவள் நெளியவுமில்லை, பதில் சொல்லவுமில்லை. மரக்கட்டை போல் உணர்ச்சியற்று உட்கார்ந்திருந்தாள். அவள் இடையை அவன் இறுக்கி அவளைத் தன் பக்கத்தில் இழுத்தான். இழுபட்ட போதும் அவள் எந்த உணர்ச்சியையையும் காட்டவில்லை. அவனைத் தடை செய்யவுமில்லை, அதற்கு இழைந்து கொடுக்கவுமில்லை. ''நந்தினி!'' என்று மீண்டும் அழைத்தான் விஜயகுமாரன்.

''என்ன?'' சுட்டது பதில்.

''இந்த மாதிரி ஊடலுக்கு இது வேளை அல்ல,'' என்றான் விஜயகுமாரன்.

''ஊடல் செய்ததாக யார் சொன்னது?''

''யாரும் சொல்ல வேண்டியதில்லை. உன் போக்கு சொல்கிறது.''

''என்ன என் போக்குக்கு?''

''எதற்கு இங்கு வந்தாய்?''

''கொள்ளிடத்தைப் பார்க்க.''

''இதுவரை பார்த்ததில்லையா?''

''பார்த்திருக்கிறேன். மனச் சாந்தி குலையும் போதெல்லாம் இதைப் பார்ப்பேன். எத்தனையோ முறை இங்கு வந்தும் இருக்கிறேன், அமைதியை நாடி.''

விஜயகுமாரன் வலது கை அவள் தலையைக் கோதிக் கொடுத்தது. ''கொள்ளிடம் ஒரு வெறும் நதி. அதில் ஏது சாந்தி?'' என்று வினவின அவன் உதடுகள்.

''கொள்ளிடமும் காவிரியும் வெறும் நதிகளல்ல. இந்த நாட்டின் புண்ணிய நதிகள் எதுவுமே வெறும் நதிகளல்ல. மக்களுக்கு அவை தாய்மார்கள். தாயைப் பார்ப்பதிலும் சாந்தி, அமிழ்ந்து அவள் அலைக்கரங்களால் அணையப் படுவதும் சாந்தி,'' என்ற நந்தினி பெருமூச்செறிந்தாள்.

அவள் மன வேதனையைப் புரிந்து கொண்டான் விஜயகுமாரன். ''நந்தினி! வீணாக மனத்தை அலைய விடுகிறாய். நான் ஒன்று சொல்கிறேன். இந்த ஜன்மத்தில் இந்த மனம் வேறொரு பெண்ணை நாடாது. என்னால் ஏற்படும் வேதனைக்காக நீ கொள்ளிடத்திடமோ காவிரியிடமோ சாந்திக்குச்

---

## துறவி?



தெ. பொ. மீ.

பெங்களூரிலிருந்து ஞானபாண்டியன் என்ற நண்பர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனாரை அங்கு பார்த்ததாகவும், அவர் துறவியாகி விட்டார் என்றும் எழுதியிருந்தார்.

சென்னை அ. ச. ஞானசம்பந்தம் வீட்டுக்கு அவர் வந்த சமயம் தெ. பொ. மீ. யைச் சந்தித்தேன்.

உடல்மெலிந்து, வெண்தாடியோடு, காட்சியளித்தார்.

மதுரைப் பல்கலைக் கழகத் துணை வேந்தர் பதவியிலிருந்து ஓய்வு பெற்ற பின் சிறிது காலம் அண்ணாமலை சர்வகலாசாலையில் பணியாற்றியவர் அவர்.

மகேஷ் யோகியின் 'ஆழ்நிலை தியானப்பயிற்சி' தெ. பொ. மீ.யை வெகுவாகக் கவர்ந்தது.

ட்ரான்ஸெண்டென்டல் மெடிடேஷன் என்கிற பாவனை தியானப்பயிற்சி முறையை மீனாட்சிசுந்தரனார் பயின்றார். பிறகு சென்னையில் சில ஆண்டுகள் சிந்தாதிரிப்பேட்டை கல்யாணம் பெண்கள் உயர்நிலைப்பள்ளி மாணவிகளுக்கு 'ஆழ்நிலை தியானப் பயிற்சி'யை கற்றுக் கொடுத்தார்.

சுவிட்சர்லாந்தில் சில மாதங்களும், இலங்கையில் சில மாதங்களும் தங்கியிருந்தார் தெ. பொ. மீ.

இப்போது சமைத்த உணவை அவர் அதிகம் உண்பதில்லை.

வெறும் பால் பழம் தேங்காய் வெல்லம் ஆகியவற்றையே உட்கொள்ளுகிறார். காரம், உப்பு, புளி ஆகிய சுவைகளை அடியோடு ஒதுக்கிவிட்டார்.

—பால்யூ

செல்ல வேண்டாம்; இன்று நீயும் நானும் நாட்டின் பெரும் மாறுதல்களுக்கு முன்பு நிற்கிறோம். வரலாற்று வாயில் எப்படித் திறக்கும், எப்பொழுது திறக்கும், யார் அதில் நுழைவார்கள், வெற்றிவாகையுடன் என்று சொல்ல முடியாத நிலையில் இருக்கிறோம். இந்தச் சமயத்தில் சிறு விஷயங்களை நினைத்து உன் மனத்தை சஞ்சலத்துக்குள்ளாக்காதே.

''கிளைவின் மனம் எனக்குத் தெரியும். இந்த அடிமைப் பெண்ணை உபயோகப் படுத்தி உணவுப் பொதிகளைத் திருச்சிக்குக் கொண்டு செல்ல ஏதோ திட்டமிடுகிறான். அவன் வந்தவுடன் விஷயம் தெளிவாகும். நந்தினி! அரசகுமாரியாக நடந்து கொள். என் சபதம், தஞ்சை அரசின் பிற்காலம், நமது வாழ்க்கை எல்லாமே இந்த சந்தா சாகிப் முகம்மது போரிலும், பிரிட்டிஷ் பிரெஞ்சு சர்ச்சையிலும் அடங்கியிருக்கிறது. விளைவுகளை நமக்கு அனுகூலமாகத் திருப்பப் பார்க்கிறேன். அதற்கு உன் நிர்மலமான மனம், அந்த மனம் அளிக்கும் துணை, இரண்டும் எனக்குத் தேவை. அவற்றை மறுக்காதே,'' என்று கூறி அவளை இரு கைகளாலும் இழுத்தணைத்தான்.

அவள் மறுக்கவில்லை. மனத்தின் மாசு திரை நீங்க அவள் இதழ்களை அவனுக்குப் பறிகொடுத்தாள் ஒரு நிமிடம். நீண்ட நேரத்துக்குப் பின்பு கோட்டையை அடைந்த இருவர் மனத்திலும் சாந்தியும் சந்துஷ்டியும் நிரம்பி நின்றது.

அந்த சந்துஷ்டியின் விளைவாக மறுநாளே கொள்ளிடத்துக்கு அக்கரை சென்ற விஜயகுமாரன் பொதி வண்டிகளை ஏற்பாடு செய்தான். நான்காம் நாள் கிளைவும் பல உணவுப் பொதிகளுடன் ஸெய்ண்ட் டேவிட் கோட்டையிலிருந்து வந்து சேர்ந்தான். வந்ததும் வராததுமாகப் பயணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளைத் துரிதமாகச் செய்தான். ஆனால் புறப்படு முன்பு இரண்டு நாட்களைக் கர்நாடக நாட்டுப் படமிருந்த அறையில் அந்த நாட்டுப் படத்தைப் பார்ப்பதிலேயே கழித்தான். பிறகு தனிக் காகிதத்தில் ஒரு பகுதியைத்தானே வரைந்து பையில் வைத்துக் கொண்டான்.

*1751* ஜூலை. மாதத்தின் முதம் வார முடிவில் பொதி வண்டிகளை அழைத்துக் கொண்டு விஜயகுமாரனுடனும், அடிமைப் பெண்ணுடன் மிக அபாயமான தனது பயணத்தைத் துவங்கினான் கிளைவ். தேவிக் கோட்டையிலிருந்து ஐந்து மைல் தூரத்திலிருந்த ஆச்சாள் புரத்தை அடைந்ததும் விஜயகுமாரனைத் தனிமையில் அழைத்துப் புரவியிலிருந்து குதித்து. ''விஜயகுமார்! நாம் சிறிது மாற வேண்டும் உருவத்திலும் உடையிலும். அதுமட்டுமல்ல, சம்பிரதாயமான வழியிலிருந்தும் மாற வேண்டும். இப்படி உட்கார்,'' என்று கூறி ஆச்சாள்புரம் கோயில் வாசலில் உட்கார்ந்து பையிலிருந்த காகிதத்தைப் பிரித்துக் காட்டினான். விவரித்தான்.

கிளைவின் திட்டம் மிகச் சாமர்த்தியமானதாயிருந்தது. இருந்தும் அபாயம் ஒவ்வொரு கணமும் எதிர் நோக்கும் திட்டம் அது. ''திருச்சிக்கு உயிருடன் போய்ச் சேர்ந்தால் பெரும் விசித்திரம்!'' என்று கிளைவிடம் வாய்விட்டுச் சொன்னான் விஜயகுமாரன். (தொடரும்)

---



## வலிக்காத பிரசவம்

'மழை வருவதையும், பிள்ளை பிறப்பதையும் எப்பொழுதுமே சொல்ல முடியாது' என்ற பழமொழியை நாம் கேட்டிருக்கிறோம். அதெல்லாம் பழைய கதை. இங்கிலாந்தில் அரசாங்கத்தில் பணி புரியும் அதிகாரிகளெல்லாம் ஆறு மாதத்திற்கொரு முறை வேறு இடத்துக்கு மாற்றப்பட வேண்டும். இது அங்கு கடைப்பிடிக்கப்படும் பழக்கம். இந்த மாதிரி சமயத்தில் அதிகாரிகளாயுள்ள பெண்களை பிரசவமாக இருபது முப்பது நாட்களுக்கு முன்பாகவே ஊசி போட்டு வலியை வரச்செய்து பிள்ளையைப் பெற்றுக்கொள்ளச் செய்துவிடுகிறார்கள்.

—எஸ். அமுதகுமார்.







காட்பரிஸ் நட்மேட். பாலேடு சாக்கலேட்டினுல் மூடப்பட்டு மென்று சுவைக்க காரமலும் மொறுமொறுப்பான வாதாம் பருப்பும் கலந்த ஒப்புவமையல்லாத நற்சுவை. இன்பமூட்டும் இன்சுவை. அதை சுவைத்துப் பாருங்கள்—இன்றே! இப்பொழுதே!

# ராஜ பேரிகை

8-12-77

தேவிக் கோட்டையிலிருந்து ஐந்து மைல் தூரத்திலிருந்த ஆச்சாள் புரம் சிவலோக தியாகராஜ ஸ்வாமி கோயிலின் கோபுர வாசற்படியில் உட்கார்ந்து பையிலிருந்த கர்நாடக தேசப் படத்தைப் பிரித்து விஜயகுமாரனுக்குக் காட்டிய கிளைவ், "விஜயகுமார்! படத்தை நன்ருகக் கவனி. தேவிக் கோட்டையிலிருந்து திருச்சிக்கு மூன்று வழிகள் இருக்கின்றன. கொள்ளிடத்தைச் சற்று மேற்கில் தாண்டி வடபுறம் சென்று, போர்ட்டோ நோவோவிலிருந்து நேராக வால் கொண்டாவை அடைந்து திருச்சி ஆற்காட்டுப் பெருஞ்சாலை மூலமாகத் திருச்சியை அடைவது ஒரு வழி. சற்றுச் சுற்று வழிதான். இருப்பினும் சாலைகளும் பாதைகளும் பயணத்துக்கு மிக அனுகூலம். இரண்டாவது வழி இங்கிருந்து சீர்காழி வழியாகத் தஞ்சை சென்று அங்கிருந்து மேற்கில் பயணம் செய்து திருச்சியை அடைவது. மூன்ருவது வழி சீர்காழியை அடைந்ததும் காவிரிப்பூம் பட்டினம் சென்று, அங்கிருந்து நேர் மேற்கில் திரும்பி தஞ்சையை அடைந்து திருச்சி செல்வது. இம் மூன்றில் எது நமக்கு அனுகூலம்?" என்று வினவினுன்.

விஜயகுமாரன் தரையில் விரிக்கப்பட்டிருந்த அந்தப் படத்தை நன்ருகக் கவனித்தான். "முதல் வழி செல்வது சுற்றுமட்டுமல்ல, தற்கொலைக்கு ஒப்பானதும்கூட. வால்கொண்டா சந்தாசாகிப் வசமிருக்கிறது. அங்கிருந்து திருச்சி செல்லும் பெருஞ்சாலையில் ஆற்காட்டுப் படைகள் கண்காணிப்பு மிக அதிகமாயிருக்கும். நெடுக உள்ள வேவுப் படைகளின் கண்ணில் மண்ணைத் தூவுவதும் மிகவும் கஷ்டம்," என்று கடைசியாகச் சொல்லவும் செய்தான்.

கிளைவ் விஜயகுமாரன் பேச்சை ஆட்சேபிக்கவுமில்லை, அங்கீகரிக்கவுமில்லை. "அடுத்த வழி?" என்று மட்டும் வினவினுன்.

விஜயகுமாரன் கண்ணைப் படத்திலிருந்து எடுக்கவில்லை. இரண்டாவது வழியைத் தன் ஆள்காட்டி விரலால் நீளத் தடவினுன் ஒருமுறை. பிறகு சொன்னுன், "இந்த வழியில் தஞ்சை வரையில் பாதுகாப்பு இருக்கிறது நமக்கு. அதற்குப் பின் நேராகத் திருச்சியை முற்றுகையிட்டிருக்கும் சந்தாசாகிபின் வாயில் நுழைவோம்," என்று.

அதற்கும் பதில் சொல்லவில்லை காப்டன் கிளைவ். விஜயகுமாரன் மூன்ருவது வழியையும் ஆராய்ந்தான். "இது மிக அபாயம். காரைக்கால் பிரெஞ்சு தளம். அதில் போய் மாட்டிக்கொள்வதைவிட இந்த ஆச்சாள்புரத்திலேயே தற்கொலை செய்து கொள்ளலாம்," என்ருன்.

கிளைவ் தீர்க்காலோசனையில் ஆழ்ந்தான் பல விநாடிகள். "கடைசியில் மூன்று வழிகளும் உபயோகமில்லையா?" என்று வினவினுன்.

"உபயோகமில்லை என்று சொல்லவில்லை. ஆபத்து இருப்பதைச் சுட்டிக் காட்டினேன்," என்ருன் விஜயகுமாரன்.

"நாம் திருச்சிக்குச் செல்வது சந்தாசாகிபின் பாராட்டுதலைப் பெறுவதற்கல்ல. முகம்மது அலியைச் சந்திக்கச் செல்கிருேம். ஆகையால் காரணத்திலேயே ஆபத்திருக்கிறது..." என்ற கிளைவ் தனது கண்களைப் படத்திலிருந்து உயர்த்தி சற்று எட்ட நின்றிருந்த அடிமைப் பெண்ணை நோக்கினுன் சில விநாடிகள். பிறகு அவளை அருகில் வரும்படி சைகை செய்து, "பெண்ணே! நீ என் அடிமைதானே?" என்று வினவினுன்.

சாண்டில்யன்



''என் உயிரைக் காத்திருக்கிறீர்கள் முகம்மது அலியின் சகோதரரிடமிருந்து,'' என்ருள் அடிமைப் பெண்.

''எனக்காக உன் உயிரைக் கொடுப்பாயா?'' என்று வினவினுன் கிளேவ்.

''என் உயிர் உங்களுடையது. உங்களிஷ்டப்படி அதை உபயோகிக்கலாம்,'' என்ருள் அவள் முகத்தில் எந்தவிதச் சலனமுமின்றி.

''உன் தந்தைக்கு நான் எதிரி,'' என்று சுட்டிக் காட்டினுன் கிளேவ்,

''ஆம்,''

''அவருக்கெதிராக நான் எடுக்கும் நடவடிக்கைகளில் நீ எப்படி எனக்கு உதவ முடியும்?''

''தந்தை என்னைப் பார்க்கதில்லை. நான் அவரைப் பார்த்ததில்லை. பாசத்திற்கு இடமில்லை.''

''வேறு எதற்கு இடம்?''

''கடமைக்கு.''

''சரி, நீ போ,'' என்று கிளேவ் அவளை அனுப்பிவிட்டு மீண்டும் படத்தில் கண்களைச் செலுத்தினுன். கடைசியாகத் தன் விரலால் தான் செல்ல உத்தேசித்திருந்த வழியைக் காட்டினுன் விஜயகுமாரனுக்கு. ''விஜய

குமார்! மேற்படி மூன்று வழிகளிலும் நாம் போகப் போவதில்லை. தஞ்சையை நாம் புறக்கணிப்போம். இங்கிருந்து கொள்ளிடக்கரை வழியே சென்று தெற்கே திரும்பி, கோயிலடிக் கோட்டையை அடைகிறோம் நேராக. கோயிலடி பிரெஞ்சுக்காரர் தளம். அங்கு ஒருநாள் இளைப்பாறிக் காவிரியைக் கடந்து திருச்சி எல்லையை அடைகிறோம். பிறகு திருச்சி பெருஞ்சாலையையும் சிறு வீதிகளையும் புறக்கணித்து வயல்கள் வழியாக இரவில் திருச்சி கோட்டை மதிளை அடைகிறோம். மதிளை அடைந்ததும் ஒரு அம்பை எறிகிறோம். கோட்டைக்குள் அந்த அம்பு ஒரு ஓலையைத் தாங்கிச் செல்லும். பிறகு வெகு வேகமாகப் பொதி வண்டிகளைச் செலுத்தித் தெற்குக் கோட்டை வாசலில் நுழைகிறோம். அங்கிருக்கும் சிறு பிரெஞ்சுப் படையுடன் மோத வேண்டியிருக்கும். நாம் எதிரியைத் தாக்கியவுடன் உள்ளிருந்து நமக்கு உதவி கிடைக்கும்,'' என்று விவரித்தான் கிளைவ்.

விஜயகுமாரன் அது மிகவும் ஆபத்தான வழி என்பதை உணர்ந்தாலும், அதைவிடச் சிறந்த வழியை அவன் அறியாததால் ஒரு கேள்வி கேட்டான். ''கோயிலடி பிரெஞ்சு தளமானால் அங்குள்ள படைப் பிரிவை எப்படி ஏமாற்ற முடியும்? அங்கு எப்படி இளைப்பாற முடியும்?'' என்று வினவினான் விஜயகுமாரன்.

''இங்குதான் நாம் மாறுகிறோம். இங்கிருந்து நாம் கிளம்புமுன்பே நானும் நம்முடன் வரும் ஐந்து பிரிட்டிஷ் சோல்ஜர்களும் பிரெஞ்சு ராணுவ உடைகளை அணிந்து கொள்வோம். எனக்குப் பிரெஞ்சு பேசத் தெரியும். நீ முகம்மதிய உடை அணிவாய். நீ சந்தாசாகிபின் படையில் ஹவில்தார் அல்லவா?'' என்று கேட்டான் கிளைவ்.

''ஹவில்தாரா! சந்தாசாகிபின் படையிலா!'' வியப்பு குரலில் மிதமிஞ்சி ஒலிக்கக் கேட்டான் விஜயகுமாரன்.

''ஆம்.'' கிளைவின் பதிலில் ஏளனமிருந்தது.

''யார் நம்புவார்கள் இதை?''

''பிரெஞ்சுக்காரர்.''

''எப்படி?''

''சந்தாசாகிபின் மகள் அதற்கு அத்தாட்சி கூறுவாள்.''

''அடிமைப் பெண்ணு!''

''ஆம். அவளை வேவுக்குத் தயார் செய்தது நீதானே?''

இந்த விபரீதத் திட்டத்தைக் கேட்டதும் வாயைப் பிளந்தான் விஜயகுமாரன். ''இந்தக் கட்டுக் கதையை யார் நம்புவார்கள்?'' என வினவினான்.

''பிரெஞ்சுக்காரர்,'' என்றான் கிளைவ்.

''எதற்காக நம்ப வேண்டும்?''

---

## கிரிக்கெட்டில் அதிக பட்சம் எத்தனை ரன் எடுக்க முடியும்?

# எப்படி



கிரிக்கெட் சரித்திரத்திலேயே மிகவும் விந்தையான போட்டி 1926—27'ம் ஆண்டு மெல்போர்னில் விக்டோரியா அணிக்கும் நியூ சவுத் வேல்ஸ் அணிக்கும் இடையே நடைபெற்றது.

உட்புல்லும் பான்ஸ்போர்டும் விக்டோரியாவின் முதல் ஆட்டத்தைத் துவக்கினர். இருவரும் ஜோடியாக 375 ரன்கள் 223 நிமிடங்களில் குவித்தனர். அடுத்ததாக ஹென்ட்ரி வந்தார். அவரும் பான்ஸ்போர்டும் ஸ்கோரை 573'க்கு (1 விக்கெட்) என்பதற்கு உயர்த்தினர். பின்னால் வந்த ஜாக்ரைடரும் ஹார்ட்கோப்பும் ஸ்கோரை 657'லிருந்து 834'க்கு (6 விக்கெட் நஷ்டம்) என்பதற்கு உயர்த்தினர். கடைசியாக விக்டோரியா 633 நிமிடங்களில் 1107 ரன்கள் எடுத்து ஆல் அவுட் ஆகியது! உலக இரிக்கெட் வரலாற்றில் இவ்வளவு அதிக ரன்கள் வேறு எந்த அணியும் எடுக்கவில்லை. ஆனால் 3 வாரங்களுக்குப்பின் அதே இரண்டு அணிகளிடையே நடந்த போட்டியில் விக்டோரியாவின் ஸ்கோர் என்ன தெரியுமா? 35 ரன் ஆல் அவுட்!

—இ. சங்கர்

"நாம் செல்வதே சந்தா சாகிபின் படைகளுக்கு உணவு சப்ளை செய்வதற்காக. அதின் சிறிது கோவிலடி படைகளுக்கும் அளிக்க டுப்ளே உத்தரவிட்டிருக்கிறார். அதற்காகத் தான் கோவிலடிக்குப் போகிறோம்," என்று சர்வசகஜமாகச் சொன்னான் கிளைவ்.

இந்தக் கோட்டைப் புளுகைப் பிரெஞ்சு தள அதிகாரி ஜீரணிப்பாரா என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டான் விஜயகுமாரன். "கண்டிப்பாக இந்தப் புரட்டு வெளிப்பட்டுவிடும்," என்றே நம்பவும் செய்தான்.

இருப்பினும் கிளைவ் தனது திட்டத்தை உடும்புப்பிடியாகப் பிடித்து அன்றிரவே பிரிட்டிஷ் சோல்ஜர்களையும், பொதி வண்டி ஓட்டுபவரையும் அழைத்து விஷயத்தைக் கூறி எச்சரித்தான். "பிரிட்டிஷ் சோல்ஜர்கள் பிரெஞ்சு ராணுவ உடை தரிக்க வேண்டும். நமது உடைக்கும் அதற்கும் செங்குத்தாக உள்ள அவர்கள் ஹாட்டைத் தவிர வேறு வித்தியாசம் கிடையாது. மற்றவர்கள் முகம்மதிய உடைகளில் வருவார்கள். என்னைத் தவிர யாரும் பேசக் கூடாது. பேசுவதானால் அடிமைப் பெண் பேசுவாள். உத்தரவை மீறி யார் வாயைத் திறந்தாலும் அந்த இடத்திலேயே சுட்டுவிடுவேன்," என்று திட்டமாகக் கூறவும் செய்தான். பிறகு அரசகுமாரியைத் தனிப்பட அழைத்து, "அரசகுமாரி! நீங்கள் தஞ்சை சென்று உங்கள் தந்தையிடம் கூறுங்கள், அவர் ஆணைப்படி இன்னும் பதினைந்துநாளல்ல, ஒரு வாரத்திற்குள்ளாகவே அவர் கடிதம் முகம்மது அலியின் கையிலிருக்கு மென்று," எனக் கூறினான்.

"ஏன்? நீங்கள் தஞ்சை வரவில்லையா?" என்று கேட்டாள் நந்தினி.

"தஞ்சை வந்தால் நாங்கள் வருவது எதிரிக்குத் தெரிந்துவிடும். பிறகு நாங்கள் திருச்சியை அணுகுவது குதிரைக் கொம்பாகிவிடும். தவிர உங்கள் தந்தையின் இஷ்டமும் அதுவல்ல," என்றான் கிளைவ்.

"தந்தையின் இஷ்டம் அதுவல்லவா?" என்று கேட்டாள் நந்தினி வியப்புடன்.

"அல்ல."

"எப்படித் தெரியும் உங்களுக்கு?"

"தஞ்சையில் எங்களை எதிர்பார்த்தால் உங்களிடம் ஓலையை அனுப்பியிருக்க மாட்டார் உங்கள் தந்தை. தற்சமயம் அவர் சந்தாசாகிபின் சந்தேகத்துக்கு ஆளாவதும் உசிதமல்ல."

இதைக் கூறிய கிளைவ் நேராக எதிரிலிருந்த ஒரு வீட்டுக்குச் சென்றான், அங்கு சென்று தங்கியதும் மறுநாள் உடைகளை மாற்றி இரவிலேயே பயணம் செய்யத் துவங்கினான். விஜயகுமாரனும் மாற்றுடை அணிந்து அரச

## வைகையின் நடுவே நாலு கழுதைகள்

வைகையில் வெள்ளத்தின் போது விக்டர் மேம்பாலத்திற்கு அருகே சுமார் ஒரு கிலோ மீட்டர் தொலைவில் உள்ள மேட்டுப்பாங்கான இடத்தில் நாலு கழுதைகள் தவித்துக்கொண்டிருந்தன.

மதுரையில் உள்ள ஜீவகாருண்ய சங்க செயலாளர் புல், பழைய காகிதம் போன்றவற்றைத் திரட்டினார். ஆழ்வார்புரம் பகுதி வாலிபர்கள் சிலர் அந்த உணவுடன் ஆற்று வெள்ளத்தில் நீந்திச் சென்று கழுதைகளுக்குக் கொடுத்தனர். பசியுடன் இருந்த கழுதைகள் பழைய காகிதங்களைத்தான் முதலில் விரும்பித் தின்றனவாம்!

(ஆதாரம்: தினமலர்) —கே. ராமசுப்பிரமணியம்.



படிக்கக் கூடாத ஜோக் மாதிரி பார்க்கக் கூடாத ஜோக் எதுவோ ஸ்ரீதேவியின் கண்ணில் பட்டிருக்கிறதோ? படம் : 'சாய்ந்தாடம்மா சாய்ந்தாடு'

குமாரியிருந்த இல்லத்துக்குச் சென்று அவளிடம் விடை பெற்றுக் கொண்டான். விடை பெற்றபோது அவளைக் கட்டியணைக்கவும் செய்தான். ''விடுங்கள்! யாராவது பார்த்தால் நான் சந்தாசாகிபின் ஹவில்தாரின் மனைவியென்று நினைப்பார்கள்,'' என்று கூறி வருத்தம் கலந்த புன்முறுவலொன்றை வெளியிட்டாள் நந்தினி. பெரிய ஆபத்தை நோக்கி அவன் செல்கிறானென்பதை உணர்ந்ததால் அவள் இதயம் வெடித்துக் கொண்டிருந்தது. கண்களில் நீர் திரண்டது. அவற்றைத் தனது உதடுகளால் அழித்த விஜயகுமாரன், ''அஞ்சாதே நந்தினி! சண்டிப் பாய்ந்து திரும்புவேன் உயிருடன். நிறைவேற்ற வேண்டிய சபதமிருக்கிறது. அனுபவிக்க வேண்டிய சொத்து இருக்கிறது. இரண்டையும் விடமாட்டேன்,'' என்று ஆறுதல் சொன்னான்.

''சொத்தா!'' கண்ணீருக்ிடையில் கேட்டாள் நந்தினி.

''ஆம்.''

''எங்கே?''

''இதோ,'' என்று அவள் மார்பைத் தொட்டுக் காட்டி, ''இந்தப் பயணத்திலும் சரி, பின்னால் ஏற்படவிருக்கும் போரிலும் சரி ஒன்று வீர சொர்க்கமடைவேன் வீரனாக, அல்லது இன்ப சொர்க்கம் நாடி வருவேன் காதலனாக,'' என்று சொன்ன விஜயகுமாரன் அவளை இழுத்து நொறுக்கியணைத்து, முத்திரை பொதித்து விலகிச் சென்றான்.

விக்கினுள் அரசகுமாரி. அவள் உள்ளம் சுக்குநூறாக வெடித்துக் கொண்டிருந்தது. ''அரங்கன்தான் உங்களைக் காத்து என்னிடம் அனுப்ப வேண்டும்,'' என்று பள்ளிகொண்ட பரமனை மனத்துள் வேண்டவும் செய்தாள்.

(தொடரும்)

30

# சாம்ராஜ்யப் புயல்

மறுநாளிரவு மாற்றுடையணிந்து விஜயகுமாரனுடனும் மற்ற வீரர்களுடனும் தனது பயங்கரப் பயணத்தைத் துவக்கிய கிளேவ், அரசகுமாரியை ஜாக்கிரதையாகத் தஞ்சைக்கு அழைத்துச் செல்லப் போதிய காப்பு அளித்து விட்டு. ''அரசகுமாரி! இந்த எங்கள் பயணம் இந்த நாட்டின் சரித்திரத்தைத் திருப்பலாம் என்று மகாராஜா பிரதாப் சிங்கிடம் செல்லுங்கள்,'' என இறுதியாகக் கூறிவிட்டு, பொதி வண்டிகளைப் பின்தொடரப் பணித்து, தான் மட்டும் விஜயகுமாரனுடன் புரவியில் ஏறி முன்னதாக வழி காட்டிக் கொண்டு சென்றான். கொள்ளிடக் கரையின் தென்புறத்தில் ஒற்றை வண்டி போகும் குறுகிய பாதையே இருந்ததால் மற்ற சோல்ஜர்களும் சிப்பாய்களும் அடிமைப் பெண்ணும் பொதி வண்டித் தொடரின் பின்பகுதியில் சென்றார்கள். அந்தப் பவனியைத் தன் வீட்டு வாசலிலிருந்து கவனித்துக் கொண்டிருந்த அரசகுமாரி, புரவியில் கிளேவும் விஜயகுமாரனும் அமர்ந்திருந்த கம்பீரத்தைப் பார்த்து, இருவரும் கர்ம வீரர்கள் என்று புரிந்து கொண்டாலும் அந்த இருவரில் தன் காதலனும் ஒருவனென்பதையும் அவன் தன்னைப் பிரிந்து அபாயத்தை நோக்கிச் செல்கிறான் என்பதையும் உணர்ந்ததன் விளைவாக ஒரு பெருமூச்சும் விட்டாள். அவளது கலங்கிய கண்கள், முன்னே சென்ற இரு காளைகளையும் கண்டன, வண்டிகளை இழுத்த காளைகள் மீது பதிந்தன, பதிந்த கண்களில் நீரும் திரண்டன. திரண்ட நீரில் தூரத்தே சென்றவர்கள் நிழல்கள் போல் தெரிந்தனர். அந்த நிழல்களும் இருட்டளித்த நிழலில் கலந்துவிடவே, அந்தகாரம் அவள் கண்களையும் என்ன, இதயத்தையும் கூடச் சூழ்ந்து கொண்டது.

ராஜபேரிகை

கிளேவும் இருட்டளித்த கருமையில், அந்தகாரத்திலேயே அடுத்த வாரம் முழுதும் பயணம் செய்தான். கொள்ளிடக் கரையை அடுத்துத் தஞ்சை மன்னர்களால் விவசாயிகளுக்காகப் போடப்பட்டிருந்த வண்டிப் பாதை அவ்வப்பொழுது சீர்படுத்தப் பட்டு வந்தாலும், ஆற்றின் அருகாமையால் அடிக்கடி வெடிப்புக் கொடுத்திருந்ததால் பயணம் மிகக் கஷ்டமாகவே இருந்தது. கொள்ளிடத்தின் தென்கரை தஞ்சை அரசைச் சேர்ந்ததானாலும் தாங்கள் வருவது யாருக்கும் தெரியக் கூடாதென்ற காரணத்தால் கிளேவ் பகல் பயணத்தை அடியோடு கைவிட்டான். பகலில் கொள்ளிடக்கரையை அடுத்த அடர்ந்த தோப்புக்களில் தங்கி இரவு மூண்டதும் பயணத்தைச் செய்து வந்தான். இப்படி மறைந்தும் நிதானமாகவும் பயணம் செய்ததன் விளைவாக, சீக்கிரமாகத் திருச்சியை அடைய முடியவில்லை கிளேவினால். அத்தனை நிதானத்திலும் கூட ஓரிரு சமயங்களில் விபத்துக்கள் நேர்ந்தன. பாதை மடிப்பில் தட்டி இருமுறை இருவண்டிகள் குடை சாய்ந்தன. அந்தக் குடை சாய்ந்த வண்டிகளின் மாடுகளை அவிழ்த்துவிட்டுச் சிப்பாய்களைக் கொண்டு வண்டிகளை நிமிர்த்தி, பிரித்துக் கொட்டிய பருப்பு மூட்டையொன்றைத் தைத்து, கூடப் பயணம் செய்ய வேண்டிய நிலை ஏற்பட்டது. இரண்டு வண்டிகளில் ஒன்று குடை சாய்ந்தபோது உடன் வந்த சிப்பாய்களோ, சோல்ஜர்களோ அதை நிமிர்த்த முடியாமல் திண்டாடிய போது, கிளேவ் தன் குதிரையிலிருந்து குதித்துத் தனது தோளை வண்டியில் சாய்ந்த கூண்டில் கொடுத்து மற்றவர்களுடன் தூக்கவும் செய்தான். இப்படி எந்தப் பணியையும் குறைந்த

பணியாக நினைக்காமல் குறிக்கோளொன்றை பிரதானமாக நினைத்து, சொல்ல வொண்ணு கஷ்டங்களை ஒரு வார்த்தை கூடப் பேசாமல் அனுபவித்துக் கொண்ட கிளைவை ஒவ்வொரு நாளும் உள்ளூரப் பாராட்டிக் கொண்டிருந்தான் விஜயகுமாரன்.

ஆச்சாள்புரத்திலிருந்து புறப்பட்ட ஒரு வாரம் கழித்து கொள்ளிடக் கரைத் தோப்பு ஒன்றில் ஒருநாள் இரவு சுள்ளிகளை உடைத்துப் போட்டு நெருப்பு உண்டாக்கிக் கிளைவ் குளிர் காய்ந்து கொண்டிருந்தான். கல்கத்தா சென்று சொஸ்தம் செய்து வந்த பிறகும்கூட அந்தப் பழைய குளிர் காய்ச்சல் எப்பொழுதாவது ஒருமுறை கிளைவைப் பாதித்துக் கொண்டுதான் இருந்தது. இந்தப் பயணத்தின்போது அந்தக் குளிர் காய்ச்சல் பிடித்துக் கொள்ளவே, அன்றிரவு பயணத்தை நிறுத்தியிருந்தான் காப்டன்.



கொய்னவை எடுத்து நீரில் கலக்கிக் குடித்துவிட்டுப் படுத்துவிட்டக் கிளைவ். இரவு ஒன்பது மணிக்கு மெள்ள விழித்துச் சுள்ளிகளைப் போட்டுக் குளிர் காயத் தீ மூட்டச் செய்தான். அந்தத் தீயில் மிலிடெரி தடிப் போர்வையை உடல் முழுவதும் போர்த்திய வண்ணம் குளிரும் காய்ந்தான். அவன் ஜுரத்திலிருந்தபோது அவன் பக்கத்தில் உட்கார்ந்து அவன் நெற்றியைப் பிடித்த அடிமைப்பெண், அப்பொழுதும் அவனருகில் இணைந்து உட்கார்ந்து நெற்றிப் பொட்டுகளை அழுத்திக் கொண்டிருந்தாள். எதிரே உட்கார்ந்திருந்த விஜயகுமாரன் அந்த நிலையில் கிளைவை நோக்கிச் சொன்னான், "கிளைவ்! உன்னைப் பார்த்தால் எனக்குப் பொறாமையாயிருக்கிறது." என்று.

கிளைவின் ஜுரக் கண்கள் அவளை விஷமத்துடன் ஏறெடுத்து நோக்கின. "இவளை வேண்டுமானால் உன் தலையைப் பிடிக்கச் சொல்."

விஜயகுமாரன் மேலும் பார்த்தான் வியப்புடன். "ஜுரம் எனக்ில்லை," என்றான் மெதுவாக.




"இருக்கிறது." என்று கூறினான் கிளைவ்.

"என்ன ஜுரம்?"

"பிரிவு ஜுரம்."

"பிரிவு ஜுரமா?"

"அரசகுமாரியின் பிரிவினால் உள்ளூர அடிக்கும் ஜுரம்." இதைச் சொன்ன கிளைவ் நகைத்தான்.

"கிளைவ்!" விஜயகுமாரன் அழைப்பில் சங்கடமுமில்லை வியப்புமில்லை.

"ஏன் விஜயகுமார்?"

"என் விஷயம் கிடக்கட்டும்..."

"என் விஜயத்துக்கென்ன?"

"இந்த உடல்நிலையில் எந்தக் காப்டனும் இத்தகைய பயங்கரப் பயணத்தை மேற்கொள்ள மாட்டான்," என்று கூறிய விஜயகுமாரன் மேலும் சொன்னான், "உன் மனத்தில் என்ன இருக்கிறதென்பது எனக்குத் தெரியாது. எதுவாயிருந்தாலும் அது பெரும் படைகளால் சாதிக்க முடியாது. எப்பொழுதோ உதயமாகும் ஒரு மகா வீரனால்தான் சாதிக்க முடியும். அத்தகைய வீரனில் நீ ஒருவன். பிரெஞ்சு ஆதிக்கத்தைக் குலைக்க, பிரிட்டனை உச்ச நிலைக்குக் கொண்டு செல்ல நீ பிறந்திருக்கிறாய். உன்னிடம் சேவை செய்வது என் நாட்டுக்கு நல்லதல்ல. இருப்பினும் அதை நான் பெருமையாகக் கருதுகிறேன். எனக்கு எது வேண்டுமென்பதே இப்பொழுது புரியவில்லை. நாட்டுச் சுதந்திரமா? அல்லது சபதத்தின் வெற்றியா? ஏதுமே தெரியவில்லை எனக்கு. ஜுரத்தில் கூடச் சளைக்காத உன் மன உறுதி என்னை மயக்கியிருக்கிறது."

இப்படிச் சொல்லி முடித்த விஜயகுமாரன் சட்டென்று எரிந்த சுள்ளிகள் அளித்த வெளிச்சத்திலிருந்து எழுந்து கொள்ளிடக் கரையை நோக்கிச் சென்றான். அவன் போவதைப் பார்த்த கிளைவ் மெல்லப் புன்முறுவல் செய்தான். "எப்படிப்பட்ட வீரர்களை இந்த இந்தியா படைத்திருக்கிறது! இருந்தும் எப்படித் தத்தளிக்கிறது சிலரின் சுமநலத்தால்?" என்று முணுமுணுத்துக் கொண்டான்.

மறுநாளிரவு மீண்டும் பொதி வண்டிகளின் சக்கரங்கள் உருண்டன;



வளையம் கனமாக இருந்ததால் காது அறுந்து போய்விட்டது. முதலுதவி தரப்படுகிறது.

'ஒரு நடிகை நாடகம் பார்க்கிறாள்' படத்தில் லட்சுமியும், ரஜினியும்.

தேவிக்கோட்டையிலிருந்து புறப்பட்ட பத்தாவது நாளிரவு, ஆச்சாள்புரத்திலிருந்து பயணப்பட்ட எட்டவது நாளிரவு, கிளைவ் கோயிலடிக் கோட்டையை அடைந்தான். கோட்டையின் மேற்கு வாயிலை அடைந்ததும் புரவியின் லகானைப் பிடித்து இழுத்த கிளைவ் தனது கத்தியை உயர்த்தி, ''கவர்னர் டூப்ளேயின் தூதுவனுக்குக் கதவு திறக்கட்டும்,'' என்று கூவினான் பிரெஞ்சு மொழியில்.

கோட்டைக் கதவுகள் மெள்ளத் திறந்தன. கிளைவ் மட்டும் உள்ளே சென்றான். அங்கு அவன் என்ன பேசினானோ யாருக்கும் தெரியாது. அடுத்த ஒருமணியில் கதவுகள் திறந்து பொதிகள் கோட்டைக்குள் நுழைந்தன. கிளைவைச் சுமார் இரண்டு மணி நேரத்துக்கு விஜயகுமாரன் பார்க்கவில்லை. பார்த்தபோது கிளைவ் மகா சிடுமூஞ்சியாயிருந்தான். ''நவாப் மகள் எங்கே?'' என்று ஹிந்துஸ்தானியில் வினவினான் எரிச்சலுடன். பிறகு அடிமைப் பெண்ணைக் கண்டதும் தலைவணங்கி, ''வாருங்கள்,'' என்று எதிரே தெரிந்த கோயிலுக் கருகிலிருந்த ஒரு வீட்டிற்கு அழைத்துச் சென்றான். போகும்போது விஜயகுமாரனை நோக்கி, ''ஹவில்தார்! நான்கு பருப்பு மூட்டைகளைக் கோட்டை கிடங்குக்கு அனுப்பு,'' என்றும் ஹிந்துஸ்தானியில் கூறிச் சென்றான். சற்று நேரத்திற்கெல்லாம் வந்த சில ஆற்காட்டுச் சிப்பாய்களிடம் விஜயகுமாரன் நான்கு மூட்டைகளை எடுத்துக் கொடுத்தான். அந்தச் சிப்பாய்கள் மூட்டைகளை முதுகில் சுமந்து சென்றபோது போட்ட முனகல் சப்தம், கோவிலை அணைத்து ஓடிய காவிரி நீரின் சலசலத்த ஒலியுடன் கலந்து கொண்டது.

பொதிகள் இறங்கிய ஒரு மணி நேரத்திற்குப் பிறகு வந்த கிளைவுடன் பிரெஞ்சு காப்டனும் வந்தான். ஹவில்தார் விஜயகுமாரனுக்கும் மற்றவர்களுக்கும் உணவு அளிக்குமாறு பிரெஞ்சு சோல்ஜர்களுக்கு உத்தரவிட்ட பிரெஞ்சு காப்டன், கிளைவை அங்கேயே விட்டுச் சென்றான். அவன் சென்றதும் விஜயகுமாரனை அணுகிய கிளைவ், ''விஜயகுமார்! கோட்டையைப் பார்த்தாயா?'' என்று வினவினான் ரகசியமாக,

''முன்பே பார்த்திருக்

கிறேன்,'' என்றான் விஜயகுமாரன்:

''பலமான கோட்டை,'' என்றான் கிளைவ்.

''கோட்டையில்லை கோயிலே ஒரு கோட்டை.''

''என்ன கோயில் இது?''

''அப்பக் கூடத்தான்.''

''அப்படியென்றால்?''

''சொன்னால் உனக்கு விளங்காது.''

''சரி. விளங்க வேண்டாம். இதிலிருந்து உடனடியாக நாம் தப்ப வேண்டும்.''

''ஏன்?''

''காப்டன் ஏதோ சந்தேகப் படுகிறான். அடிமைப் பெண்ணின் முகம் நல்ல வேளையாக சந்தாசாகிபின் முகத்தைப் போலிருக்கிறது. அதைக் கண்டு தான் மாறினான்,'' என்ற கிளைவ் மேலும் சொன்னான்: ''இந்த மாதிரி பொதி வருமென்று டூப்ளேயிடமிருந்து செய்தி கிடையாதென்று ஆட்சேபனை கிளப்பினான் பிரெஞ்சுக் காப்டன். பிறகு சந்தாசாகிபின் குமாரத்தி மாறுவேடத்தில் வந்திருப்பதாகவும் நவாபின் உத்தரவின் மேல் அவர்களுக்காக இந்தப் பொதிகள் வந்திருப்பதாகவும் சொன்னேன். பிறகு அடிமைப் பெண்ணையும் காட்டினேன். மெள்ள திருப்தியடைந்ததாகக் காட்டினான். பிறகு ஒரு சேதி சொன்னான். நாளைக்கு பிரெஞ்சு தளபதி நாளை ஆற்காட்டில் இங்கு வரப்போவதாக. இந்த நிலையில் நாம் இங்கு அதிக நேரம் தங்குவது பிசகு. விடியற்காலையில் கிளம்பிவிடுவோம்,'' என்று.

அம்மாதிரியே பொதி வண்டிகளை விடிவதற்கு முன்பே பூட்டிய கிளைவ், காவிரிக்குள் இறக்கினான் வண்டிகளை. பிரெஞ்சு காப்டன் அவர்களுக்கு வழி காட்டவோ எதற்கோ துணையாக ஒரு பிரெஞ்சு சோல்ஜரையும் புரவியில் அனுப்பியிருந்தான். காவிரி மணலில் புரவிகள் தத்தளித்து நடந்தன. வண்டியிழுத்த காளைகள் திண்டாடின. இருப்பினும் அவற்றுக்கு வண்டியோட்டிகள் தார்க்குச்சி போட்டும் வாலை முடுக்கியும் ஓட்டினார்கள். காவிரிப் பயணம் மிகக் கஷ்டப்பட்டு நடந்தது. அந்தக் கஷ்டத்தைத் தாங்காத ஒரு பிரிட்டிஷ் சோல்ஜர், ''டாமிட், வாட் எ டெரிபிள் திங்,'' என்று ஆங்கிலத்தில் இரைந்துவிட்டான். அதைக் கேட்டதும் கிளைவை உற்று நோக்கிய பிரெஞ்சு சோல்ஜர் எதையோ புரிந்து கொண்டு விட்டவன் போல் கோட்டையை நோக்கித் திரும்பினான். அது தான் அவன் செய்த தவறு. கிளைவின் கைத்துப்பாக்கி அதன் உறையிலிருந்து வெகு வேகமாக வெளிவந்தது. அதைத் திருப்பி அதன் பிடியில் பிரெஞ்சுக்காரன் பொட்டில் அடித்த கிளைவ் அவன் நிலத்தில் சாய்ந்ததும் அவனை எடுத்துப் பொதி வண்டியொன்றில் போடச் செய்தான்.




நான் சிகரெட் குடிப்பதைத் தடுக்க மிகவும் முயன்று அலுத்துப்போன என் மனைவி ஒரு நாளிரவு நான் மணி கேட்டபோது, என்னுடைய ஆஷ்-ட்ரேயைப் பார்த்துவிட்டு அலுப்புடன் சொன்னாள்: 'பத்தடித்து எட்டு சிகரெட்டு ஆச்சு!'

—ஏ. தியாகராஜன்

'சிகரெட் பிடிப்பது அபாயம்' என்று சிகரெட் பாக்கட்டுகளில் அச்சடிக்கப் பட்டிருந்தும் இளைஞர்கள் அப் பழக்கத்திலிருந்து விடுபடாததால் அமரிக்காவில் சமீபத்தில் கீழ்க்கண்டவாறு எச்சரிக்கையை மாற்றியுள்ளார்கள்: 'நீங்கள் சிகரெட் பிடித்தால் உங்கள் வாய் நாறும்.'

—வி. கு. ஸ்ரீதரன்

அதற்குப் பிறகு அதிகத் தடையில்லாமல் பயணம் நடந்தது. மூன்று இரவு பயணம் செய்து நான் காம் நாளிரவு வயல்களின் பக்கமாகத் திருச்சிக் கோட்டை மதிலை அடைந்ததும் அதற்காகத் தயாராக வைத்திருந்த வில்லால் அம்பு ஒன்றைப் பறக்க விட்டான் கோட்டைக்குள். பிறகு பொதி வண்டிகளைப் பின் தொடரச் சொல்லிக் கிழக்கு வாயிலை அடைந்து உள்ளே புகுந்தான்.

கோட்டையின் உட்புறத்தை அடைந்ததும் பொதி வண்டிகளைத் தொடரச் சொல்லி காப்டன் ஜின் ஜின்ஸ் தங்கியிருந்த வீட்டை அடைந்தான். அது வீடு மாதிரியில்லாமல் பல அறைகளுடன் பாசறை மாதிரியே இருந்ததைக் கண்டு வியந்த கிளைவ், இந்த சூழ்நிலையில் காப்டன் ஜின்ஜின்ஸ் எதிரிகளுக்குத் தண்ணீர் காட்டியிருக்கலாம் என்று எண்ணினான். ஆனால் மறு நாளைக்குள் காப்டன் ஜின்ஜின்ஸுக்கும் படைவீரர்களுக்கும் உபதளபதிகளுக்கும் இருந்த கிலியைப் பார்த்து அனேகமாக முகம்மது அலி முடிந்தார் என்று தீர்மானித்தான். இத்தனையிலும் கிலி பிடிக்காத ஒரு மனிதனைக் கண்டு கிளைவ் உற்சாகம் கொண்டான்.

அவன் வந்த மறுநாளே அவனைத் தமது ஆஸ்தான அறையில் சந்தித்த முகம்மது அலி, கிளைவுக்கு நன்றி கூறினார். "எதிரி சூழ்ந்துள்ள இந்தக் கோட்டையை நீங்கள் எப்படி நாடினீர்களோ புரியவில்லை எனக்கு. ஆனால் இந்த உணவு எங்கள் பட்டினி தீர்க்கும். படைகளுக்குச் சிறிது ஆறுதலையும் அளிக்கும்," என்றார் நவாப் முகம்மது அலி. அவர் முகத்தில் துன்பப் புன்முறுவலின் சாயை படர்ந்து கிடந்தது.

முகம்மது அலி, கிளைவைத் தமது அரண்மனையிலேயே இரண்டு நாள் இருத்திக் கொண்டார். மூன்றாவது நாள் சொன்னார், "காப்டன் கிளைவ்! சந்தாசாகிபின் படைகள் பூராவும் இங்கு தூங்குகின்றன. இப்பொழுது ஆற்காட்டை யாராவது தாக்கினால் பிடிப்பது சுலபம். ஆற்காடு பிடிபட்டால் சந்தாசாகிப் மீண்டும் அங்கு திரும்பும்படி இருக்கும். இதை நீங்கள் செய்ய முடியுமா?" என்று.

கிளைவ் சிந்தனையில் இறங்கினான். "நான் எந்த முடிவும் எடுக்க முடியாது யுவர் மெஜஸ்டி! கவர்னரிடம் சொல்லிப் பார்க்கிறேன்," என்றான் முடிவில். ஆனால் முகம்மது அலி விதைத்த வித்து மெள்ள ஊன்றியது, முளைவிட்டது, கிளைவின் சாம்ராஜ்யக் கனவில். அந்தக் கனவுடன் 1751 ஆகஸ்டு இரண்டாவது வாரத்தில் வந்தான் கிளைவ். அந்த வருகை, வருகையிலிருந்த கனவு, உள்ளே எழுந்திருந்த போர் வெறி மெள்ள மெள்ள உருவாயிற்று சாம்ராஜ்யப் புயலாக. அந்தப் புயலில் கிளைவுடன் கவர்னர் ஸான்டர்ஸும் கலந்து கொண்டார்.

(இரண்டாம் பாகம் முற்றும்)

(தொடரும்)

**புதிர்:** இரண்டு நிமிட அவகாசம். A to G—மொத்தம் எத்தனை நேர்க்கோடுகள்?

விடை 70'ம் பக்கம்.






## கூடாத ஜோக்குகள்

புதுக் கல்யாணமான ஜோரில் அவர்கள் ஓவர் குஷியாயிருந்து விட்டார்கள். டாக்டர் அறிவுரை சொன்னார்: "உடம்பைக் கெடுத்துக் கொள்ளக் கூடாது. ள், ய், ன் என்று முடிகிற கிழமைகளில் தவிர மற்ற நாட்களில் விலகியே இருக்கணும்..."

ஒரு வாரம் கழிந்தது. அன்று அவன் அவளை ஒரு ராத்திரியில் எழுப்பினான். "ஊகூம்...இன்று என்ன கிழமை?" என்றாள் அவள்.

"வெள்ளின்!" என்றான் அவன்.

அவன் அமெரிக்காவுக்குப் புதிது. நைட் கிளப்புக்குப் போய் உட்கார்ந்ததும் ஓர் அழகி அவனருகில் வந்து உராய்ந்தாள்.

"உனக்கு இங்கிலிஷ் தெரியுமா?" என்றான் அவன் கூச்சத்துடன்.

"கொஞ்சம் கொஞ்சம்," என்று நெளிந்தாள் அவள்.

"கொஞ்சம் கொஞ்சம்னா? எவ்வளவு?"

"இருபத்தைந்து டாலர்," என்று பதில் வந்தது.

மிஸ் ஸிம்ஸனுக்கு அலாதியான 'புகழ்' உண்டு. ஒருநாள் டாக்டரிடம், "எனக்கு ஒரே களைப்பாயிருக்கிறது. கை காலெல்லாம் தளர்ச்சியாயிருக்கிறது; என்ன செய்யட்டும்?" என்று கேட்டாள்:

"பலவீனமாயிருக்கிறாய், அவ்வளவுதான். கொஞ்ச நாளைக்குப் படுக்கையில் இருக்காதே. சரியாகிவிடும்," என்றார் டாக்டர்.

"என் ஆருயிர் நண்பன் என் மனைவியை இழுத்துக் கொண்டு ஓடி விட்டான்."

"உன்னைக் காட்டிலும் அவன் பணக்காரனா, அல்லது அழகானவனா?"

"யாருக்குத் தெரியும்? நான் அவனைப் பார்த்ததே கிடையாது," என்றான் அவன் மகிழ்ச்சியுடன்.

பிராங்கின் முதலிரவு இன்பகரமாய் நடந்தேறியது. புது மனைவிக்கும் சேர்த்துப் போர்வையை இழுத்துக் கொண்டான். அவள் அவனை அணைத்துக் கொண்டாள்.

பிராங்க் கேட்டான்; "ரோஸி, எனக்கு முன்னால் எத்தனை பேர்..."

அவளிடமிருந்து பதில் வரவில்லை. "ரோஸி, நான் கேட்டது காதில் விழவில்லை?" என்றான்.

"அவசரப்படாதே. அதுதான் எண்ணிக் கொண்டிருக்கிறேன்," என்றான் அவள்.



## புதிய நெல்கோ திருப்தி டீலக்ஸ்

# கண்ணை மூடிக்கொண்டு வாங்கலாம் நீங்கள்

### (காது மட்டும் திறந்திருந்தால் போதும்)

குரலழகிலும் சரி, கட்டழகிலும் சரி, கண்ணை மூடிக் கொண்டு வாங்கத்தக்க தரமுடையது திருப்தி டீலக்ஸ். நேருக்கு நேர் கண்டு கொள்ளலாமே ரேடியோக்கடை ஒன்றிலே...உள்ளே நுழையுங்கள், ஒப்பிட்டுப் பாருங்கள்: வேறு எந்த 2-பேண்டு ரேடியோவையும் விட உயர்வுதான், 249*ரூபாயிலே* திருப்தி டீலக்ஸ்.

**பரிட்சை 1. ஒலியிர்ப்பு.**
பலவீனமான எந்த நிலையத்திலும் சரி, உதாரணமாக 49 அல்லது 61 மீட்டரிலும் கூட வைத்துப் பாருங்கள் திருப்தி டீலக்ஸ், தொலை தூர நிலையங்களும் கம்பீரமாக முழங்கும்; மற்ற 'பெட்டிகளோ' இரைச்சல் இடையூறுகளோடு இழுபறி நடத்துமே!

**பரிட்சை 2. தொனி.**
குரல் வளம் வேணுமா? கேட்டுப் பாருங்க திருப்தி டீலக்ஸ். கட்டைச் சாரீரம் முதல் கீச்சுக்குரல் வரை எல்லாமே கணீர் கணீர்: எடுப்பான செழுமையின் சிகரம். இதற்கு முன் மற்றவை தகரம்

**பரிட்சை 3. உருவத்தோற்றம்.**
முடிவாக, டிசைனைக் கவனியுங்க. அமைப்பான கட்டழகு. அமைதியான கம்பீரம். உழைப்புறுதிக்காகவே உருவானது திருப்தி டீலக்ஸ் சத்தக் கட்டையை சரிக்கட்ட வெளிப்பகட்டை நம்பிய செட் இதுவல்ல.

மேம்பட்ட ஒலியிர்ப்பு. பூர்த்தி பெற்ற நாதம். நேர்த்தி மிக்க தோற்றம். அதுதான் உங்கள் நெல்கோ திருப்தி டீலக்ஸ், அடைவது உங்கள் பாக்கியம். மணிக் கணக்கில் சுவைக்கும் செவியின்பம நெல்கோ திருபதி டீலக்ஸ்.

*எக்சைஸ் வரி உள்பட
தல எரிகள் தனி.

## நெல்கோ
## டாடா தயாரிப்பு

Creative Unit-A 2575-Tam